# ஸ்ரீ ஞானனந்தா ......



ஸ்வாமி அபிஷிக்தானந்தா

தமிழாக்கம்

" பாரத்வாஜன் "






ஸ்ரீ ஞானனந்தா மிஷன்
தபோவனம். 605 756. தெ. ஆற்காடு.

1982 — விலை ரூ. 7-

Published by

Sri Gnanananda Mission.

Thapovanam. 605 756. S. A., Dt.

First Edition (French) 1970

First Edition (English) 1974

First Edition (Tamil) 1982

ACKNOWLEDGEMENTS

We express our grateful thanks to Editions Presence, Chambery, Paris for having accorded permission to bring out the Tamil Edition of Swami Abhishiktananda's work on Sri Gnanananda.

Our thanks are also due to Mr. C. Baumer for having kindly given permission to use his photo of Abhishiktananda.

Sri Gnanananda Mission.

6-உ

# முன்னுரை

"ஸ்ரீ ஞானனந்தர்" எனும் இந்நூல் அபிஷிக்தானந்தா இயற்றிய GURU AND DISCIPLE என்ற நூலின் முதல் பாகமான A SAGE FROM THE EAST என்ற பகுதியின் தமிழாக்கம். இந்நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட அனுமதி பெற்றுத் தந்தமைக்காக FATHER St. JAMES STUART அவர்களுக்கு மிக்க நன்றியுடையவனாக இருக்கிறேன். இந்நூலை SRI GNANANANDA MISSION சார்பில் வெளியிட முன் வந்தமைக்கு தலைவர் ஸ்ரீ ஏ. ஆர். பி. என். ராஜமாணிக்கம் அவர்களுக்கும் உபதலைவர் ஸ்ரீ டி. எஸ். சிவராமகிருஷ்ணன் அவர்களுக்கும் நன்றி செலுத்துகிறேன்.

"பாரத்வாஜன்"

# அறிமுகம்

ஹென்றி லே சா (HENRI LE SAUX) என்ற ப்ரான்சு நாட்டு அறிஞர் அபிஷிக்தானந்தா என்ற நாமம் பூண்டு துறவியாகி இந்தியாவில் பல வருஷங்கள் ஞானசாதனையில் ஈடுபட்டிருந்தார். ஞானிகளைச் சந்தித்து வேதாந்த கோட்பாடுகளின் விளக்கங்கள் பெறுவதுடன் தீவிரமாக சாதனை யிலும் ஈடுபட்டு அனுபூதி வாயிலாக தத்துவத்தை உணர்ந்தார். மதங்களின் அடிப்படை நெறிகளில், அனுபவ நிலையில், ஒற்றுமையிருப்பதை அறிந்த அபிஷிக்தானந்தா அவ்வப்போது தன் சிந்தனைகளை கட்டுரைகள், நூல்கள் மூல மாக வெளிநாட்டிலும், இந்தியாவிலும், மேல்நாட்டினரும் ஹிந்துக்களும் பயனடையும் வகையில் எழுதி வெளியிட்டார். இவ்வாறு, உலக சுகங்களில் உள்ள வேட்கையாலும் விஞ்ஞானப் படைப்புகளினாலும் கவரப்பட்டு நவீன மனிதன் புற உலக நினைவிலேயே வாழ்ந்துகொண்டு உண்மையான சுகத்தை அடையாமல் அல்லலுறுவதைக்கண்டு அவனை ஒரு பிரஹ்ம ஞானியின் முன் அமரச்செய்து, தொன்றுதொட்டு அனுபூதிமான்கள் உணர்ந்து வெளியிட்ட உண்மைகளை அவர் மூலமாக அவன் பெற்று தெளிவு அடையும்படிச் செய்திருக்கிறார். இம்முயற்சியின் பயனாக எழுந்தது "ஸ்ரீ ஞானானந்தா" என்ற நூல்.

முதலில் 1970ம் ஆண்டில் "ஸ்ரீ ஞானானந்தா" என்ற நூல் ப்ரென்ச் பாஷையில் ப்ரான்சு நாட்டில் ப்ரசுரிக்கப்பட்டது. இந்நூலே **A SAGE FROM THE EAST** என்ற தலைப்பின் கீழ் **GURU AND DISCIPLE** என்ற நூலின் முதல் பாகமாக 1974-ல் **Society For Promotion of Christian Knowledge** என்ற நிறுவனத்தால் லண்டனில் ப்ரசுரிக்கப்பட்டது. இந்நூலாசிரியர் எழுதிய மற்ற கட்டுரைகளிலும் நூல்களிலும் **The Secret of Arunachala** என்ற நூலும் **Sannyasa** என்ற தொடர்கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கவையாகும்.

1910ம் ஆண்டில் பிறந்த இந்நூலாசிரியர் ஆன்மீக சிந்தனைகளிலே நாட்டம் கொண்டவராய் புறஉலகத் தொடர்புகள் அதிகம் ஏற்படுத்திக்கொள்ள வில்லை. இவர் ஸ்ரீ ரமண மஹரிஷியை, அவர் சமாதி அடைவதற்கு சில மாதங்கள் முன், 1949-ல் சந்தித்தார். பிறகு சில வருஷங்கள் தீவிர சாதனை யில் ஈடுபட்டு அருணாசலத்தில் வசித்துக்கொண்டிருந்தபோது 1955 டிசம்பர் மாதம் ஸ்ரீ ஞானானந்தரைப்பற்றி கேள்வியுற்று அவரைத் தரிசிக்க தபோவனம் வந்தார். எப்போதும் நிகழ்ந்திராத வகையில் ஆன்மீக உணர்வுகள் ஸ்ரீ ஞானானந்தருடன் சில நிமிஷங்கள் இருந்த மாத்திரத்தினாலேயே அவருடைய மனத்தில் பெருக்கெடுத்து வந்ததால், அவரால் ஆகர்ஷிக்கப்பட்டு 1956-ம் வருஷம் முதலில் மீண்டும் தபோவனம் வந்து சில நாட்கள் குருநாதரின் அருள்பார்வையில் தங்கி ஆத்ம த்யானத்தில் ஈடுபட்டார். இவ்விரு சந்திப்பு களில் தான் பெற்ற பயனை "ஸ்ரீ ஞானானந்தா" எனும் நூலின் மூலம் அவர்

மற்றவர்களுக்கும் அளிக்கிருர். குருநாதர் சமாதி அடைவதற்கு சில நாட்கள் முன்னர் 1973 டிசம்பரில் இவர் மறைந்தார்.

இரு பதிப்புகளுக்கும் வழங்கிய முன்னுரைகளில் அபிஷிக்தாநந்தா எங்கும், குறிப்பாக மேலை நாடுகளில், மக்கள் பொதுவாக வாழ்க்கையின் லக்ஷ்யத்தை உணராமலும், சாதனை நெறிகளைப்பற்றிய தெளிவான அறிவில்லாமலிருப்பதையும் சுட்டிக்காட்டி, ஸ்ரீ ஞானனந்தரின் உபதேசங்கள் அவர்களுக்குப் போதுமான விளக்கங்களைத் தருவதாகக் கூறுகிருர். இதற்குக் காரணம் தத்துவத்தின் அடிப்படையிலே அனுபவத்தில் கண்ட உண்மைகளை அந்த ஞானி அளிப்பதுதான். கீழ்த்தரமான முறையில் ஆன்மீகத் தத்துவங்களை பயன்படுத்துவதை அவர் வெறுத்தார். தூய வேதாந்தமே அவருடைய உபதேசம். ஆன்மஞானம் த்யாகத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்பதோடு, த்யாகத்தின் எல்லை 'நான்' எனும் உணர்ச்சியின் த்யாகமே என்று அவர் போதித்திருக்கிருர். அவர் சிஷ்யனுக்கு வழங்கும் உபதேசம் ஒரு மந்திரத்தையோ, பூஜையையோ அடிப்படையாகக் கொண்டதல்ல. அந்தர்முக நோக்குடன் சாதகனுக்கு உபதேசம் அளித்து உள்ளுணர்வை வெளிப்படுத்துகிருர். தன்னையே முழுதும் மாற்றவல்ல சாந்தி உணர்வை சிஷ்யன் அவரிடமிருந்து பெறுகிருன். ஆன்மீகத்தில் நம்பிக்கையற்றவரும் அவர் காட்டும் நெறியைப் பின்பற்றி சென்று ஆராய்ந்து பார்க்கட்டும்!

சில பக்கங்களே கொண்ட 'ஸ்ரீ ஞானனந்தா' எனும் இந்நூல் ஒரு முதிர்ந்த ப்ரஹ்மஞானியை வாசகர்களின் கண்முன் நிறுத்துகிறது. சாதகனுக்கு எந்த எந்த ப்ரச்னைகளைப்பற்றி சந்தேகங்கள் இருக்கின்றனவோ, அவைகள் யாவைக்கும் உதாரணங்கள், கதைகள், நியாயங்கள் இவைகளைக் காட்டி - குருநாதர் அன்புடன் வழங்கும் விளக்கங்களை உள்ளவாறு இந்நூல் தருகிறது. இவைகளுக்கிடையே, நூலாசிரியரின் மனம் உயர்நெறியில் பழகியிருந்ததால் தன்னைச் சுற்றியிருக்கும் சூழ்நிலைகளில் - மனிதர்களின் இயற்கையான செயல்களில், ஆசாரங்களில், ஹிந்துமத அனுஷ்டானங்களில் - ஒப்பற்ற கருணை படைத்த இறைவனின் அருள் லீலையை, தத்துவத்தின் பிரதிபலிப்பைக் கண்டு விழிப்படைகிறது, வியக்கிறது. குரு-சிஷ்யனைப்பற்றியோ, லிங்க தத்துவத்தைப் பற்றியோ நூலில் காணப்படும் அவர் சிந்தனைகள் ஹிந்து மதத்தைச் சார்ந்த பலருக்கும் திகைப்பையளிக்கும்.

வேதாந்த நெறியிலிருந்தும், ஸ்ரீ ஞானனந்தரிடமிருந்தும் நூலாசிரியர் தன் அனுபவ வாயிலாக அறிந்த அரிய உண்மைகள் என்ன? சராசரப் பொருள்கள் நிறைந்த ஜகத் அனைத்திலும் ஊடுருவி நிற்பதாயும், இந்த ஜகத்தைப் படைத்த இறைவனும் இவைகளுக்கு அப்பால் - ஆனல் இவைகளுக்கு ஆதாரமாய் - இருக்கும் பரம்பொருளாகிய சித்ஸ்வரூபமே ஜீவனின் ஆத்மாவாகவும் இருக்கிறது. பரம்பொருளோடு உள்ள அபேதத்தை - ஐக்கியத்தை - சாதகன்

ஹ்ருதயத்தில் - 'அஹம்' - 'நான்' - எனும் உணர்ச்சி வெளிப்படும் ஸ்தானத்தில்- உணருகிறன். 'ப்ரஹ்மமே நீ' என சாதகன் உள்ளத்திலிருந்து தக்க தருணத்தில் போதிக்கும் ப்ரகாசமே குரு ஸ்வரூபம், குரு தத்துவம். சாதகன் விழிப்படையும் முன்பு, அவனுக்கு உதவி புரிவதற்காக தத்துவமே புறத்தில் ஏற்றுக்கொள்ளும் வடிவம் குருமூர்த்தி. இந்நோக்கில் ஸ்ரீ ரமணருக்கு அருணசலரும் அபிஷிக்தானந்தாவிற்கு ஸ்ரீ ஞானனந்தரும் குருவாக விளங்கினர் எனலாம்.

ஸ்வாமி அபிஷிக்தானந்தா, தன் முகவுரையில் கூறியிருப்பது போன்று, ஒரு ஹிந்துஞானி வாழும் முறையையும், அவர் அளிக்கும் உபதேசத்தையும் உள்ளபடியே விவரித்திருக்கிறர். ஒரு ஞானியின் இயல்புகளைப்பற்றி ஸ்ரீ ஞானனந்தர் மொழிந்திருக்கும் கருத்துக்கள் யாவும் ஞானனந்தருக்கும் பொருந்தும். ஆதலால், குருநாதரிடம் நூலாசிரியர் கண்ட முரண்பாடுகளுக்கு விளக்கம் தேவையில்லை. சாதகர்களைப் பொறுத்தவரையில் ஸ்ரீ ஞானனந்தர் கடைபிடிக்கும் நெறி, மற்ற ஞானிகளின் நெறியைக் காட்டிலும் வேருக இருப்பது குறித்து நூலாசிரியர் தெரியப்படுத்திய கருத்து உண்மையாயினும் அவருடைய நூலிலேயே போதுமான சமாதானம் இருப்பதால் அதைப்பற்றி விளக்கமும் தேவையிராது. குருநாதர் வழங்கிய உபதேசங்கள் யாவும் வேதாந்த நெறியின் அடிப்படையில் இருந்தமையால் வேதாந்தச் சொற்களி லேயே இம்மொழி பெயர்ப்பில் அவைகள் தரப்படுகின்றன.

1955, 56ம் வருஷங்களில் தபோவனம் எளிமையான காட்சியுடன் இருந்தது. பண்டைக் காலத்து ரிஷிகளின் ஆஸ்ரமம் போன்றிருந்தது. வன்யா என்ற புனைப்பெயர் பூண்ட அபிஷிக்தானந்தா காண்பிக்கும் அப்போதிருந்த தபோவனத்தையும், தபோவன ஞானியையும் இனிக் காண்போம்......

---

# தோற்றுவாய்

அந்த தினம் வன்யா வழக்கம் போல் வேதம் ஓதுதலின்போது (ஸ்ரீ ரமணரின்) ஆஸ்ரமத்திற்குச் சென்றிருந்தார்.

பக்தர்களுக்கிடையே, எப்போதும்போல் கோவில் சுவற்றினருகே உட்கார்ந்திருந்தார். காலையிலும், மாலையிலும் அவர்கள் சமாதியினருகே உட்கார்ந்துகொண்டு வேதம் ஓதுவதை அவர் ஆழ்ந்து அனுபவித்துக்கொண்டு அதற்கிசைய மனதை த்யானத்தில் ஈடுபடுத்துவார்.

பூஜை தொடங்கியது. வரிசையான முறையில் அமர்ந்து பாடசாலை மாணவர்கள் உபநிஷத்துகள், யஜுர்வேதத்தில் அடங்கிய ருத்ரப்ரச்னம், சங்கரர் வழங்கியிருக்கும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம், முடிவில் ஸ்ரீ ரமணர் அவர்களே இயற்றியிருக்கும் சம்ஸ்க்ருத உபதேசத் தொகுப்பு முதலியவற்றை ஓதினர்.

இச்சமயம் ஒருவர் பின் ஒருவராக பக்தர்கள் மரியாதைக்குரிய சமாதியை வலம் வந்த வண்ணம் இருந்தனர். புதியதாக வருபவர்கள் ச்ரத்தையுடன் ஒரு தரம், மூன்று தரம் அல்லது ஏழு தரம் சமாதியை வலமாக வந்தனர். சிலர் ஒவ்வொரு தினமும் நூற்றெட்டு தரம் சமாதியை வலம் வருவ தாக உறுதி கொண்டுள்ளவர்கள். சமாதியின் நடுவில் தோற்றமளிக்கும் லிங்கத்தின் எதிரே வரும்போது ஒவ்வொரு தடவையும் பணிவுடனும் பக்தி யுடனும் நமஸ்கரிப்பர்.

சமாதி பீடத்தின் மீது புரோகிதர்கள் மாணவர்கள் வேதம் ஓதுவதை யும், பக்தர்கள் வலம் வருவதையும் அறியாதவர்களாய், தங்களுடைய கிரியை களில் கவனம் செலுத்தினர். வாழ்க்கையில் போன்று ஆராதனையிலும் ஒவ்வொருவருக்கும் தனியாகப் பணி இருந்தது; ஒருவர் பணி மற்றொருவர் பணியுடன் சம்பந்தமற்று இருந்தது. புனிதமான அந்த லிங்கத்தின் மீது புரோகிதர்கள் தூய்மையான நீர், தயிர், பால், இளநீர், முதலியவற்றால் அபிஷேகம் செய்து ஒவ்வொரு அபிஷேகத்திற்குப் பிறகும் அதை துடைத்தனர். சிவனுக்குரிய நூற்றெட்டு நாமாக்கள் உச்சரிக்கும்போது அவைகளை அனுசரித்து புஷ்பங்களினால் அர்ச்சனை செய்தனர். பின்னர், மலர் மாலைகளாலும், பட்டாடைகளாலும், அலங்கரித்தனர். உபசாரங்கள் செய்து பின்னர், நைவேத்யமாக அன்னம் சமர்ப்பித்தனர். இந்த அன்னம் பிறகு ப்ரசாதமாக விநியோகம் செய்யப்பட்டது. பிறகு நறுமணத்துடன் கூடிய தூமப்புகை விண் கிளம்ப அடுக்கு தீபங்களால் ஆரத்தி காட்டினர்.

இத்தருணம் வேதம் ஓதும் முறை சற்று மெதுவாக நிகழ்ந்தது. உச்சரிக்கும் த்வனி உயர் கட்டத்தை அடைந்தது. ஒவ்வொருவரும் கைகளால் அஞ்சலி செய்த வண்ணம் எழுந்து நின்றனர்.

வேதபாராயணம் முடிவடையும்போது 'ஓம்' எனும் த்வனியை எல்லோரும் எழுப்ப, பக்தர்கள் கைகளை சிரசின் மேல் கூப்பினர். உடனே எல்லோரும் தரையில் வீழ்ந்த வண்ணம் வணங்கினர். இத்தகைய வணக்கம் புலனறிவுக்கு எட்டாத தெய்வீகத் தன்மைகளே உருவாகி விளங்கும் மூர்த்தியிடம், - தன்னுடைய ஹ்ருதயத்தின் ஆர்வத்தைக் காட்டும் வகையில் - தன்னை முழுவதும் அர்ப்பணித்துக் கொண்டதற்கு அறிகுறியாக அமைந்திருக்கும் கருத்துமிகுந்த அடையாளம்.

பிறகு அர்ச்சகர் இறுதியான கற்பூர ஆரத்தி காட்டினர். வழக்கமான முறையில் அவர் உச்சரிக்கும் மந்திரங்கள் அவர் அருகில் இருக்கும் மணியின் ஒலியில், அதைத் தொடர்ந்து எழும்பும் கோயில் கட்டிடத்தின் எல்லாப் புறங்களிலும் கிளம்பும் பிரதித்வனியில் கலந்துவிட்டன.

கற்பூரம் எரிந்து கொண்டிருக்கும் நிலையிலேயே அந்தத் தட்டுடன், பூஜகர் சமாதி பீடத்தில் இருந்து வெளி வந்தார். பக்தர்கள் ஒவ்வொருவரும் அருகில் வந்து அணுகி விநயத்துடன் தன் கைகளை கற்பூரம் எரியும் தட்டின் மீது காட்டினர். தங்கள் கைகளை இந்த தூய ஸ்பர்சத்தால் புனிதப்படுத்தியவர்களாய், ஒவ்வொருவரும் தன் கண்களை துடைத்தனர்; பின்பு சிறிதளவு விபூதி பெற்று அதை பக்தியுடன் நெற்றியில் அணிந்துகொண்டனர்.

இவ்வாறு மாலை பூஜை, மஹரிஷி காலத்தில் நடந்துகொண்டிருக்கும் க்ரமத்திலேயே ஒரு மாறுதலுமின்றி நடைபெற்று முடிந்தது. திருவண்ணமலையில் தங்கியிருக்கும் காலங்களில் வன்யா இந்த பூஜையில் கலந்து கொள்வதிலிருந்து ஒருபோதும் தவறமாட்டார். அவருக்கு - அந்த புனிதமான இடம், நினைவுகள், பகவான் இளம்பிராயத்தில் அருணாசலத்திற்கு முதன்முறையாக வந்தபோது காணப்பட்ட முறையில் கருப்பு சடையுடன் உள்ள குடுமி, நெற்றியிலும், மார்பிலும் விபூதிப்பட்டை முதலியவைகளுடன் விளங்கிய பிராம்மண சிறுவர்கள் - இவைகள் யாவும் மிகவும் கருத்து நிறைந்ததாக தோன்றின. வேதங்கள் ஸ்வரத்துடன் உச்சரிக்கப்பட்டன. மேலும் அந்த இடத்தில் - எங்கு ஞானி பல வருஷங்கள் தொடர்ந்து இருந்தாரோ அங்கு - அவருடைய சாந்நித்யம், அவரை முழுவதும் கவர்ந்து அவரிடமிருந்து ப்ரகாசிக்கும் அந்த தேஜஸ், ஒளி, நிலவியது. அந்த தெய்வீக சாந்தி எங்கும் எதிலும் ஊடுருவி நின்றது. அந்த சாந்தி ஒவ்வொரு உள்ளத்தையும் கவர்ந்து, மனச்சக்திகளை ஒருமைப்படுத்தி ஆழ்ந்த ஆன்ம நோக்கம் அடையச் செய்வதாக இருந்தது.

இறுதியாக சமாதியை நோக்கி அஞ்சலி செய்துவிட்டு தன் சிந்தனைகளிலும், த்யானத்திலும் ஆழ்ந்தவராய் வேறெதுவும் அறியாதவராய் வன்யா திரும்பத் தொடங்கினர்.

உடனே 'ஹலோ' என்ற ஆர்வமிக்க குரல் அவரை வெளி உலக நினைவுக்குக் கொண்டுவந்தது. தன் கைகளை நீட்டிக்கொண்டு வழக்கம் போல் இனிய முகத்துடன் ஹெரால்ட் அவரை நோக்கி வந்தார்.

வன்யா சில வருஷங்களாக ஹெரால்டை அறிந்திருந்தார். ஒரு டிசம்பர் தினம் மாலையில் நெடுந்தூரம் நடந்து திரும்பியபோது ஹெரால்டை அவ்வாச்ரமத்திலேயே முதன் முறையாக வன்யா சந்தித்திருக்கிறார். அன்றைய தினம், எப்போதும் நேர்ந்திராத வகையில் அருணாசலம் அவரைக் கவர்ந்து பரவசப்படுத்தியிருந்தது.

இச்சந்திப்புக்கு வெகு முன்பே, ஹெரால்ட் தன் மேல் நாட்டு தீவுகளை விட்டு விட்டு ஞானத்தை விரும்பி கீழ்நாடுகளில் சஞ்சாரம் செய்திருந்தார். சிலோன் நாட்டில் புத்தரை பின்பற்றுபவர்களின் அருகில் அமர்ந்திருக்கிறார். பஞ்சாப் ப்ரதேசத்தில் 'சூஃபி' (Sufi) ஞானிகளைக் கண்டு அவர்களின் கோட்பாடுகளைப்பற்றி வினவியிருக்கிறார். ஹிமாலயப்பகுதிகளில் நெடுநாட்கள் யாத்ரீகர்கள் பாதைகளில் நடந்திருக்கிறார். வடநாட்டில் உள்ள பல ஸ்தலங்களையும் தமிழ்நாட்டில் உள்ள பெரிய கோவில்களையும் கண்டிருக்கிறார். சில காலம் பாண்டிச்சேரியில் தங்கினார். அப்போதுதான் திருவண்ணாமலையில் உள்ள ரமணாச்ரமத்தைப் பற்றி பிறர் பேசிக்கேட்டார். அன்பர்கள் அவரை திருவண்ணாமலைக்கு ஒருமுறை பஸ்ஸிலாவது ரயிலிலாவது சென்று சிலமணி நேரமாவது இருக்கவேண்டும் என்று வற்புறுத்தியிருந்தனர். குறிப்பாக அவர்கள், மஹரிஷியின் நினைவைப் போற்றியவர்களாய் மேலை நாட்டிலிருந்து வந்து தங்கியிருக்கும் அன்பர்களின் பண்பு, பக்தி முதலியவைகளை பாராட்டியிருந்தனர். ஆனால், மக்கள் கூட்டங்களை சேகரிக்கும் முறையில் நடந்து கொள்ளும் மனிதர்களைக் கண்டு அம்மாதிரி இடங்களைத் தவிர்க்கும் அளவுக்கு இந்திய நாட்டை ஹெரால்ட் நன்கு புரிந்துகொண்டிருக்கிறார்.

இருப்பினும் ஒரு தினம் கன்யாகுமரியை நோக்கி புறப்பட்டு போகும் போது திருவண்ணாமலை வழியாகச் செல்வதற்கும் சுற்றிப் பார்ப்பதற்காக அங்கு சில மணி நேரம் தங்குவதற்கும் சம்மதித்தார். அந்த சில மணிகள் சில நாட்களாகவும், சில நாட்கள் சில மாதங்களாகவும் நீள முடிவில் ஒருநாள் கூட தெய்வீக அருள் நிறைந்த அருணாசலத்தை விட்டு அகல எண்ணமற்றவராய் இரண்டு மூன்று வருஷங்கள் தங்கலானார். இவ்வருடம்தான், முதன் முறையாக மலையின் வெப்ப அதிகரிப்பு உள்ள பருவத்தின் காரணமாக, கடற்கரை காற்றை விரும்பி சில காலம் சென்றிருந்தார். இந்த சிறிய பயணத்தை முடித்துக்கொண்டு இப்போது திரும்பி வந்திருந்தார்.

வன்யாவும் அவர் நண்பரும் செய்திகளைப் பரிமாறிக்கொள்வதற்கு முன்பே, ஹெரால்ட் விஷயத்தை மாற்றி, சம்பந்தமற்ற முறையில்

"திருக்கோயிலூரில் உள்ள ஞானியைப்பற்றி நீர் அறிவீரா ?" எனக்கேட்டார். தான் அறியவில்லை என்று வன்யா ஒத்துக்கொள்ளவேண்டியிருந்தது. திருவண்ணுமலைக்கு பல சமயங்கள் வந்திருப்பினும் அவர் ஒரு போதும் 30 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சிறிய நகரமான திருக்கோயிலூரில் பிரசித்தமான ஞானி எவரும் தங்கியிருப்பதாக கேட்டிருந்ததில்லை.

"நூற்றிருபது வயதான ஞானி அவர்" என ஹெரால்ட் தொடர்ந்து பேசினுர். "நானும் அவரைப்பற்றி சென்ற வாரம் வரை கேட்டதில்லை. காரைக்காலில்தான் நான் அவரைப்பற்றி பேசிக்கேட்டேன். கோவிந்தப்பிள்ளை என்ற ஒருவர் - அவருடைய பக்தர் - அவரைப்பற்றி நம்பமுடியாத சில கதைகளைக் கூறினுர். ஒவ்வொரு வருடமும் அவர் அந்த ஞானியின் தர்சனத்திற்காக திருக்கோயிலூர் வருகிருர். நேரில் வரமுடியாத சந்தர்ப்பத்தில் அவருக்குப் பாமாலைகள் அனுப்பி வைக்கிருர். அவர் சார்பில் ஒரு தரம் அங்கு சென்று வருவதாக அவரிடம் உறுதி அளித்து இருக்கிறேன். நீர் என்னுடன் வருவீரா ?" என்ருர்.

"வருவதற்கு முடியாதபடி ஒரு தடையும் இல்லை. ஏனெனில் நூறு வயது நிரம்பியவர்களை ஒருவன் அடிக்கடி காண இயலாது. அவருடைய பெயர் என்ன ?" என வன்யா வினவினுர்.

"ஞானனந்தா அல்லது அவருடைய முழுப்பெயர் ஸ்ரீ ஸ்வாமி ஞானனந்தாஜி மகராஜ்"

"நல்லது. அது ஒரு சிறந்த அழகிய நாமம்! தமிழர்கள் தங்களுக்கு நல்ல பெயர்களை தேர்ந்தெடுப்பதில் வல்லவர்கள் போல் தோன்றுகிறது. ஆனுல் அந்த பெயருக்குத் தகுந்த முறையில் எப்போதும் வாழ்வார்களேயானுல் எவ்வளவு சிறப்புடையதாக இருக்கும்! ஞானனந்தா என்ற நாமம் என்ன பொருளுடையது என்று அறிவீரா? 'ஞானமும் ஆனந்தமும்' அல்லது 'ஞானமாகிய ஆனந்தம்'. அவர் குறிப்பாக எந்த இடத்தில் வசிக்கிருர் என்று கோவிந்தப்பிள்ளை கூறினுரா ?" என வன்யா கேட்டார்.

"அவர் எச்சரிக்கையாக எனக்குக் காகிதத்தில் எழுதித் தந்திருக்கிருர்" என்று ஹெரால்ட் கூறி, "குடமுருட்டி" என்று எழுதியிருந்த காகிதத் துண்டை நண்பரிடம் அளித்தார்.

"இந்த கிராமத்தைப் பற்றி ஒன்றுமே எனக்குத் தெரியாது" என்று கூறினுர் வன்யா. "இருப்பினும், திருக்கோயிலூருக்குச் சென்ருல் அங்கு வழி கேட்டுக்கொள்ளலாம். மேலும் திருக்கோயிலூர் மிகவும் பிடித்தமான ஒரு ஊர். வெகுநாட்களாக அங்கு செல்ல விருப்பமுள்ளவனுக இருக்கிறேன். தடையாக இருந்தது என்னவெனில், திருவண்ணுமலையில் இருக்கும்போது

அந்தை விட்டகல மனம் எழாததுதான். நீர் என்னை அழைத்துச் செல்வீரானல் எனக்குச் செய்யும் பேருபகாரமாகயிருக்கும். மேலும் அங்குள்ள மூன்று கோவில்களை - பெருமாள் கோவில், ஸ்ரீ ரமணரின் வாழ்வோடு அவ்வளவு இணைந்த முக்கியமான இரண்டு சிவன் கோவில்கள் - இவைகளைக் காணலாம். நீர் அந்த சம்பவத்தை அறிவீரா ? அருணாலத்தின் அழைப்பை ஏற்று வீட்டைவிட்டு புறப்பட்ட தினம் திருவண்ணாமலை அடைவதற்கு போதிய பணம் ரமணரிடம் இல்லை. ஆதலால் திருக்கோயிலூரில் ரயிலை விட்டு இறங்க நேரிட்டது. அங்கு ஒரு சிவன் கோயிலுக்குச் செல்ல, சிவனுக்கு நிவேதனமாக அளிக்கப்பட்ட அன்னம் சிறிது அவருக்குப் பிச்சையாகக் கிடைத்தது. மற்றொரு கோயிலில் அவர் இரவைக் கழித்தார். அங்குதான், உள்ளே இருக்கும் மண்டபத்தின் பின்புறத்தில், திறந்து கிடக்கும் சிறு ஸ்வாமி சந்நிதியின் அருகில், முக்கியத்வம் பெற்ற ஜோதியின் தோற்றம் - ஒளியின் காட்சி - அருணாசலத்தின் சிகரத்திலிருந்து உதித்து அவருடன் ஐக்கியமாகி அவரை ஸ்வரூப உணர்வில் லயிக்கச் செய்தது.

---

# 2. சந்திப்பு

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஹெரால்ட் வன்யா இருவரும் திருவண்ணாமலையிலிருந்து முதல் பஸ்ஸில் புறப்பட்டனர். வெப்பத்தின் அதிகரிப்பைத் தவிர்க்கவேண்டி விடியற்காலையிலேயே புறப்படுவது அவசியமாயிற்று. திருக்கோயிலூரை சுற்றிப் பார்க்க விரும்பியவர்களாய், ஆஸ்ரமத்தில் சில நிமிஷங்கள் மட்டும் தங்கி, வழக்கப்படி ஞானிக்கு பழங்களை சமர்ப்பிக்க வேண்டுமென்று எண்ணியிருந்தனர். 'இம்மாதிரியான ஆஸ்ரமங்களில் பக்தர்கள் அந்தந்த ஞானிகளை வெகுவாக புகழ்ந்து கூறுவதைப் போல் இவ்விடத்திலும் அம்மாதிரி நிகழும். அவைகளைப் பொறுமையாகக் கேட்டுக் கொள்வதுடன் அந்த ஞானியும் தவருமல் கூறும் உபதேச மொழிகளிலும் விருப்புற்று கேட்பவன் போல் இருக்க வேண்டும்' என எண்ணினர். கோவிந்தப்பிள்ளையிடம் ஆஸ்ரமத்திற்கு சென்று வருவதாக ஹெரால்ட் உறுதி வேறு கொடுத்திருக்கிருர். அந்த உறுதிமொழியை மீறுவதற்கில்லை.

பஸ்ஸில் ஏறும்போது ஹெரால்ட் கோவிந்தப்பிள்ளை எழுதித் தந்திருக்கும் விலாசக் காகிதத்தை ட்ரைவரிடம் காண்பித்தார்.

"அப்படியானல் நீங்கள் அந்த ஆஸ்ரமத்தில் இறங்க விரும்புகிறீர்களா? கவலை வேண்டாம். ஆஸ்ரமத்தின் வழியாகவே பஸ் போகிறது. எங்கு நீங்கள் இறங்கவேண்டும் என்று நான் கூறுகிறேன்" என ட்ரைவர் பதிலளித்தார்.

ஹெரால்ட் வன்யா இருவரும் பிறகுதான் "ட்ரைவரும் அந்த ஸ்ரீ ஞானனந்தரின் பக்தர்" என்று தெரிந்து கொண்டனர். ஒவ்வொரு மாலை யிலும் அவர் பஸ்ஸின் கடைசி பயணத்தின் போது பஸ்ஸை ஆஸ்ரமத்தின் எதிரே நிறுத்திவிட்டு, கிடைக்கும் சிறிது நேரத்திற்குள் உள்ளே சென்று, ஸ்வாமிக்கு வணக்கம் செலுத்தி, பாதங்களைத் தொட்டு, அருள் பெற்று திரும்புவார். இதேபோல், ஒவ்வொரு மாலையிலும் திருவண்ணாமலைக்கும் திருக்கோயிலூருக்கும் இடையே வனப்பிரதேசத்தில் பஸ்ஸை, ஒரு புனிதமான ஆலமரத்தின் அருகே நிறுத்தி, தேங்காய் உடைத்து அதே நீரால் நிவேதனம் செய்வார்.

வன்யா இந்த பஸ் பயணத்தைப் பற்றி பிற்காலங்களில் நினைவுகூர்ந்து பேசுங்கால், அந்த பஸ் பயணத்தின்போது 'இந்த தினம் நமது வாழ்க்கையில் ஒரு பெரிய மாற்றத்தைத் தோற்றுவிக்கப் போகிறது' என்ற எண்ணம் தனக்கு உதித்தாகக் கூறுவார். ஆனால் அப்போது, நம்பிக்கையற்றவராய், அந்த எண்ணத்தை கவனியாது விட்டுவிட்டார். அருணன் அழகிய கோள மாக மேல் எழுந்து வருவதையும், அருணாசலத்தின் சரிவுகளின் மீது கிரணங்கள் பரிவுடன் பரவுவதையும் அமைதியுடன் காண்பதில் அவர் மனம் எளிதாக ஈடுபட்டு லயித்தது ....

தபோவனத்தை - தபோவனம் என்பதுதான் அவ்வாஸ்ரமத்தின் பெயர்- இருவரும் ஏழு மணிக்கு முன்பே அடைந்தனர். அந்த ஆஸ்ரமத்தின் பெயர் பெரிய எழுத்தில் வாயிலில் தொங்கவிடப்பட்டிருக்கும் வளைவில் காணப்பட்டது. இதுவே ஆஸ்ரமத்தில் வசிக்கும் ஞானியின் பெயராகவும் இருந்தது. இவை யாவும் பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க செய்த ஏற்பாடாகும். அவர் வெகுவாக தங்குவது அவ்விடத்திலிருந்து பத்து கிலோமீட்டர் தொலைவில் உள்ள சித்தலிங்கமடத்தில்தான். நகரத்தில் இருக்கும் பக்தர்கள் அது மிகவும் தொலைவாக இருப்பதாகக் கருதினர். ஆதலால், அவர்களில் ஒருவர் இக்கட்டிடத்தை அவருக்குத் தந்தார். நகரத்தில் உள்ள பக்தர்கள் பெரும் பாலும் வரண்டு இருக்கும் பெண்ணையாற்றை கடந்த அளவிலேயே தம் குருவின் இருப்பிடத்தை அடைந்து தர்சனம் பெறக்கூடியதாக அது அமைந்திருந்தது. அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி ஸ்ரீ ஞானனந் தரும், தற்காலிகமாக, சில நாட்கள் நீடித்து இங்கு தங்குவதாக சம்மதித் திருந்தார்.

ஹெரால்ட், வன்யா இருவரும் தோட்டத்தின் வழியாகச் சென்றனர். அங்கு சில மாமரங்களும், ஒரு கிணறும், சாதாரணமான ஒரு சிறு வீடும் இருந்தன. பிற்காலத்தில் அவ்வெளியில் உருவாகிய கட்டிடங்களும், நடுவில் தோற்றமளிக்கும் கோவிலும் அப்போது காணவில்லை. அவைகள் உண்மை யாகவே தொலைவிலிருந்து வேட்கையுடன் வரும் சாதகர்களுக்கும் அந்த



.... அமைதி நிரம்பிய அவர் முகத்திலிருந்து கருணையே பொழியும் கண்கள் ஒளி வீசின ....

ஞானிக்கும், ஞானியின் அருளுக்கும் இடையே ஒரு பெரிய தடையை எழுப்பி யிருக்கும். ஆனால் இவ்விரு நண்பர்களும் தகுந்த சமயத்தில் வந்தடைந்தனர்.

காலைக் கடமைகளை முடித்துவிட்டு வரும் ஓர் இளைஞரை வன்யா கண்டார். வன்யா அவரை அணுகி ஸ்வாமியைப்பற்றி விசாரித்து, காலை வேளையில் இடையூறு விளைவிப்பதற்கு வருத்தம் தெரிவித்து, தேவையிருப்பின் பின்னால் வருவதாகக் கூறினார்.

'அதைப்பற்றி கவலை வேண்டாம்' என்று பதிலளித்தார் இளைஞர். 'தன்னைப் பார்க்க விரும்பும் பக்தர்களுக்கு எப்போதும் தன்னைக் காண வாய்ப்பு அளிக்கிறார் ஸ்வாமி. பகல், இரவு, காலை, மாலை - முதலிய வேறுபாடு இவரிடம் கிடையாது. உண்மையில் அவர் இரவில் அதிகம் தூங்குவதும் இல்லை. என்னுடன் வாருங்கள்'.

கிருஷ்ணமூர்த்தி என்ற அந்த இளைஞரைப் பின்பற்றி இருவரும் வீட்டிற்குள் நுழைந்தனர். அந்த ப்ராம்மண இளைஞர் வடபுறம் இருக்கும் அறைக்குள் அழைத்துச்சென்றார். அந்த குருநாதர் ஸ்ரீ ஞானானந்தர் எதிர்புற ஓரத்தில் உள்ள பழைய கட்டிலின் மீது அமர்ந்திருந்தார். அவருடைய கால்கள் குறுகி திரண்டு இருந்தன. காவித்துணியை பாதி தேகம் அணிந்து கொண்டு ஒரு முனையினால் தலையைப் போர்த்தியிருந்தார். ஒரு தோள் துணியினால் மூடப்படாமல் இருந்தது. முக க்ஷவரம் செய்து கொள்ளாமலிருந்தார். வழவழப்பான அவர் நெற்றியில் 120 வயதுக்குரிய சின்னம் யாதும் காணப் படவில்லை. சிவ பக்தர்களால் அணியப்படும் மூன்று விபூதி பட்டைக்கோடுகளும் அதற்கு நடுவே குங்குமப் பொட்டும்தான் இருந்தன. ஆனால் அமைதி நிரம்பிய அவர் முகத்திலிருந்து கருணையே பொழியும் கண்கள் ஒளிவீசின.

இவ்விருவரும் கைகூப்பி வணக்கம் செலுத்தினர். ஆனால் நமஸ்கரிக்க வில்லை. ஞானியின் பாதங்களைத் தொடுவதற்கு முற்படவில்லை. மேற்கு தேசத்தவர்கள் இந்தியாவில் சகஜமாக பின்பற்றப்படும் இந்த மாதிரி வணக்கத்தை - மற்ற இடங்களில் கைகளை முத்தம் இடுவது போன்ற இயற்கை யான பழக்கமாயினும் - செலுத்துவதற்கு சற்று அருவருத்துக்கொள்வர்.

ஒரு விரிப்பு கொண்டுவரப்பட்டது. இருவரும் அதில் அமர்ந்தனர். வன்யா தன் நண்பரை முன்னே நகர்த்தினார். ஏனெனில் ஸ்வாமிக்கு செய்தி தெரியப்படுத்த வேண்டியவர் அவர்தானே.

கோவிந்தப்பிள்ளையைக் குறிப்பிட்டு அவர் அனுப்பிய வாழ்த்துகளையும் கூறி பேச்சை ஹெரால்ட் தொடங்கினார். ஆத்மீக வாழ்க்கை சம்பந்தமாக தனக்கிருக்கும் சந்தேகங்களைப் பற்றி சில வினாக்களை எழுப்பினார். கிருஷ்ண மூர்த்தி ஹெரால்டின் ஆங்கில மொழிகளை தமிழிலும், ஞானியின் தமிழ் பதில்

களை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்தார். இது விரைவில் மிகவும் ருசிகரமாக மாறியது. மேலும் மேலும் ஆவலை வளர்த்த போதிலும் மொழி பெயர்ப்பவர் திணரவேண்டிய நிலை ஏற்பட்டது. அவர் உத்சாகமுடைய கூரறிவு படைத்த பக்தர்தான். ஒவ்வொரு மாலையிலும் தன் அலுவலக வேலையை முடித்துக் கொண்டு ஞானியிடம் வந்து அவர் விரும்பும் பணிகளை செய்வார். இரவில் ஆஸ்ரமத்தில் தங்கி காலையில் பெண்ணையாற்றின் கரையில் அமைந்திருக்கும் அலுவலகத்திற்குச் செல்வார். தன்னுடைய கடமை உணர்ச்சியால் அடுத்த வருடம் உயிரையும் ஈந்தார். பெண்ணையாறு இருகரையும் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடியது. அந்த வெள்ளத்தில் ஆறைத்தாண்டத் துணிந்தார். வெள்ளம் அவர் நிலைக்குமேல் அதிகரிக்கவே எதிர்கரையை சேருமுன் வெள்ளத்தின் அலைகளால் இழுத்துச்செல்லப்பட்டார்.

அவர் ஆங்கில பாஷையில் தேர்ச்சிபெற்றிருந்தார் என்பதில் ஐயமில்லை. ஆனுல் பி. ஏ. பட்டப்படிப்பிற்கு போதிய ஆங்கிலபாஷைப் பயிற்சி விஞ்ஞான, வர்த்தகத்துறை கலைகளுக்கு பயன்படுமே தவிர தத்துவ விமர்சனத்திற்கும் அனுபூதி நிலைகளுக்கும் உரிய விஷயங்களைப் பற்றி பேச பயன்படாது. அன்றைய தினம் கிருஷ்ணமூர்த்தி தன்னுடைய சக்திக்கு அப்பால்பட்ட விஷயங்களை மொழிபெயர்க்க முடியாமல் தவித்துக்கொண்டிருந்தார். ஞானுனந்தர் 'மொழிபெயர்ப்பு சரியாக அமையவில்லை' என உணர்ந்திருந்தார். அதனுல் கருத்துக்களை புதியபுதிய முறைகளில் விளக்க முற்பட, மொழிபெயர்ப்பவர் மேலும் மேலும் கஷ்டத்திற்குள்ளானுர்.

வன்யாவும் சம்பாஷணையில் சேரலானுர். முதலில் ஆங்கிலத்திலும் பிறகு நேரடியாக தமிழிலும் பேசினுர். அவருடைய தமிழ் குறைந்த சொற்களையுடையதாகவும், கொச்சையாகவும் இருந்தது. இருப்பினும் அவருக்கும் குருநாதருக்கும் இடையே சம்பாஷணையில் வழங்கும் சொற்களைக் கடந்த நிலையில் ஆழ்ந்த கருத்தொற்றுமை உதயமாகியது.

சிறிது நேரத்திற்குப் பின்னர் ஹெரால்ட் வினவினுர்: "பரம்பொருளின் தன்மையைப் பற்றி ஸ்வாமிகளின் கருத்தென்ன? அது த்வைதமா, இரண்டா அல்லது அத்வைதமா, ஒன்ரு? முடிவான நிலையில், இறைவனுக்கும் ஜீவன்களுக்கும் ஏதாவது பேதம், வேறுபாடு இருக்கின்றதா? உதாரணமாக மனிதன் இறைவனுடைய பேரின்பத்தை எப்போதும் அனுபவித்துக்கொண்டிருக்க இயலுமா அல்லது எல்லாவற்றையும் கடந்து ஒரு பேதமற்ற அகண்ட பூரண சைதன்யம் மட்டும் விளங்குகிறதா?"

"இத்தகைய கேள்விகளினுல் பயன் யாது? உங்களிடமே இதற்குரிய விடை இருக்கிறது. எண்ணங்களுக்கு ஆதாரமான உணர்வை நாடுங்கள். நிர்குண ஸ்வரூப த்யானத்தில் ஈடுபடுங்கள். உங்களுக்கு விளக்கம் ஏற்படும்" என ஸ்ரீ ஞானுனந்தர் உடன் பதிலளித்தார்.

நண்பர் பிறகும் தொடர்ந்தார். "ஸ்வாமிஜி தீக்ஷை க்ரியைகள் ஏதாவது நடத்துவதுண்டா?

வன்யாவின் கருத்தில் இது ஒரு சோதனையான வினு. ஹிந்து மதத்தினர் - ஏன், அவர்கள் மட்டுமல்ல, மற்றவர்களும் கூட - சடங்குகளில் எவ்வளவு பிரியமுடையவர்கள் என்று அவர் தெரிந்திருந்தார். சற்று குறைந்த அல்லது விஸ்தாரமான சடங்கு க்ரியைகள் செய்து சிஷ்யன் ஒரு குருவின் ஆதரவைப் பெறுகிருன். பிறகு குரு ரகச்யத்தில் ஒரு மந்திரத்தை அளிக்கிருர். இதை ச்ரத்தையுடன் அவன் ஜபிக்கவேண்டும். சிலசமயம் இத்துடன் அனுஷ்டிப்பதற்காக ஏதாவது க்ரியையும் குரு கூறுகிருர். இந்த அத்புத சக்தி படைத்த உபதேசம் ஆச்சர்யமான முன்னேற்றத்தை அளிக்கும். இந்த மந்திரத்திஞலும், க்ரியையிஞலும் ஆன்மீக வாழ்க்கையிலும், உலக வாழ்க்கையிலும் ஏராளமான பயன் இருக்கும் என்ற நம்பிக்கை உள்ளவனுக சிஷ்யன் ஆகிருன். உண்மையில், குருவினடமிருந்து பெறும் தீக்ஷை, மந்திரத்தைக் காட்டிலும், சிஷ்யனின் ஊக்கத்துடன் கூடிய நம்பிக்கையே பெரும்பாலும் உபதேசத்தை பயனுள்ளதாகச் செய்விக்கிறது. குருவாக இருப்பவர்களின் உள்ளங்கள் பலதரப்பட்டவைகளாக இருக்கின்றன. சிலர் சிஷ்யர்களுக்கு உண்மையாக உதவி செய்யவேண்டும் என்ற நோக்குள்ளவர்கள். சிலர் சிஷ்யனிடமிருந்து கணிசமான தக்ஷிணை பெறுவதில் நோக்குள்ளவர்கள். அநேகமாக சில இடங்களில் குருவுக்கு உபதேசம் செய்வதில் இருக்கும் ஆர்வம் சிஷ்யனுக்கு அதைக் கேட்டுப்பெற்றுக் கொள்வதில் இருக்கும் துரிதத்தையும் எட்டிவிடுகிறது. ரமணரின் ப்ரசித்தி பெற்ற சிஷ்யரான கணபதி சாஸ்திரியும் தன் குருநாதர் ஆரம்பநிலையில் உள்ளவர்களுக்குக்கூட உபதேசம் அளிக்க மறுப்பதை நொந்துகொண்டார். அவர் நிலையில் தான் உபதேசம் அளிப்பதற்குக் கூட முன்வந்தார். இக்காரணங்களிஞல் ஞானனந்தர் கூறும் மொழிகளைக் கேட்க வன்யா மிகுந்த ஆவலுடன் இருந்தார்.

"தீக்ஷை சடங்குகளிஞல் உள்ள பயன் என்ன ? சிஷ்யன் பக்குவ நிலையில் இல்லாமல் இருப்பானேயாகில் இந்த தீக்ஷை சடங்குகள் வெறும் சொற்களே; சிஷ்யன் பக்குவ நிலையில் இருப்பானேயாகில் சொற்களோ, முத்திரைகளோ தேவைப்படுவதில்லை. உபதேசம் இயற்கையாகவே நிகழ்ந்து விடுகிறது." என்று பதில் வந்தது. சிறிது தாமதித்து மேலும் கூறினர் "உலகத் தோற்றம் நீடிக்கும் வரை, அறியாமை, அஞ்ஞானம் இருக்கிறது. உலகக் காட்சி ஏற்படாதபோது, ஞானம் தோன்றுகிறது. இதுவே மெய்யறிவு."

இத்தருணத்தில் பக்தர்கள் வரத்தொடங்கினர்கள். புருஷர், பெண்டிர், குழந்தைகள் மரியாதையுடனும், அன்புடனும் பணிந்தனர். அவர்கள் 'இது ஒரு பயனற்ற பழக்கம், உலக நடைமுறைக்காக பின்பற்றப்படுகிறது' என்று கருதவில்லை என்பது சுலபமாகத் தெரிந்தது. இவ்வாறு உடலினல் வணக்கம்

செய்யும்போது, எப்போதும் உள்ளத்திலும் தொடர்ந்து மனநெகிழ்ச்சி ஏற்பட்டு ஆத்ம உணர்வில் மனம் ஐக்கியப்படுகிறது என்பது வெளிப்படையாகவே விளங்குகிறது.

மேல் உலகங்கள் எங்கிலும் அகண்டமாய் வியாபித்து, உயிர்கள் உள்ளத்திலும் விளங்கும் இறைவனது அன்பும் அருளும் பக்தர்களின் பார்வையில் புறத்தில் காணும் மூர்த்தியாகி, புலனறிவிற்கு எட்டாத சைதன்ய ஸ்வரூபமேதான் என எண்ணும் வண்ணம் இம்மனிதர் பக்தர்களின் முழு நம்பிக்கைக்கும், அன்புக்கும், விச்வாஸத்திற்கும் பாத்ரமாயிருக்கிறார் என்பது நன்கு தெரிந்தது.

இரு மேற்கு நாட்டினரும் மற்றவர்களுக்கு இடையூறாக இராமல் இருக்க சற்று அஞ்சினர். விலகியிருக்க அனுமதிக் கேட்டனர். நகரத்திற்கு சென்று உணவருந்தி பின் வரலாமென்றெண்ணினர். ஞானி அனுமதி அளித்தார் - ஆனால் அருந்துவதற்கு ஒரு கிண்ணம் பால் அளிப்பதற்கு முன்பு அவர்களுக்கு அனுமதி தர விரும்பவில்லை.

ஓரிரு மணிகள் வன்யா ஸ்வாமி பாதங்களின் அருகில் உட்கார்ந்திருப்பார். அவ்வளவு காலம் சென்றிருக்கும் என்று அவரால் நம்பமுடியவில்லை. முழங்கால்களை மடித்து உட்காருவது - உடல் செயலற்று மனம் அமைதியில் நீடித்து இருக்கும்போது வழக்கமாக அவருக்கு சிரமமாகத் தோன்றினாலும் - அப்போது அவருக்கு அது ஒரு சிரமமும் அளிக்கவில்லை.

இப்போது, அவர் எழுந்து நிற்கையில், எல்லாம் மாறுதலாகக் காட்சியளித்தது! வெறும் ஆவல் காரணமாக அவர் இங்கு வந்திருந்தார். இருப்பினும் அந்த முதியவர் கூறிய மொழிகள் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தன. ஹ்ருதயத்தில் தான் அறியாது புதைந்து கிடக்கும் உள்ளுணர்வுகளை அம்மொழிகள் எழுப்பிவிட்டன. ஒப்புமையற்ற மிக இனிமையான புதிய நீர் பெருக்கெடுக்கும்படி செய்துவிட்டன. தன்னிடம் கூறப்பட்டவைகள் அனைத்தும் அவர் ஏற்கனவே அறிந்திருந்ததுதான். அவைகளைப் பற்றி படித்திருக்கிறார், பிறர் பேசக் கேட்டிருக்கிறார். ஆழ்ந்து சிந்தித்திருக்கிறார். சொற்கள் நிலையிலோ, கருத்துக்கள் நிலையிலோ அவர் புதியதாகத் தெரிந்துகொண்டது யாதும் இல்லை. ஆனால் அக்கருத்துக்களை வழங்கிய முறையில் குருவின் மனத்திலும், இவர் மனத்திலும் ஆன்ம அடிப்படையில் ஒரு தொடர்பு உதயமாயிற்று. குருவின் கருத்துக்கள் யாவும் தன் ஹ்ருதயத்திலிருந்தே பெருக்கெடுத்து வருவதாக வன்யா உணர்ந்தார்.

இந்தியாவில் நெடும் சஞ்சாரம் செய்திருந்தபோது, வன்யா ஆன்மீக ஞானத்தை விலைக்கு விற்கும் தன்மைபடைத்த பெரியோர்களைப் பார்த்திருக்கிறார். அவர்களுடன் காணப்படும் ஹிந்துக்களும், மேற்கு நாட்டினரும்

போட்டி போட்டுக்கொண்டு அந்த 'வணிகருடைய' பெருமையை உயர்த்தினர். 'ஆங்காங்கே உண்மையான ஞானிகளையோ அல்லது முழு ஆர்வத்துடன் ஞானத்தையும் அனுபூதியையும் அடைய சாதனை செய்துவரும் மனிதர்களையோ அவர் சந்தித்திருக்கிறார். ஆனால் இச்சமயம் ஆன்ம அனுபூதியோடு நேரிடைத் தொடர்பு அவருக்கு ஏற்பட்டது! எவர் ஒருவர் இவ்வனுபவத்தால் கவரப்படாமல் இருக்கமுடியும்? நெருப்பு சுட்ட இடத்தில் வடு காண்பது போல், வாழ்க்கை முழுவதிலும் நீடித்து இருக்கும் ஒரு அடையாளத்தை ஏற்படுத்தும் தன்மையது அது. ஏன் - எரிந்து சாம்பலாக்கப் படவேண்டிய பொருள்கள் உள்ளவரை, உணவாக விழுங்கப்படும் உலகம் உள்ளவரை - நீடித்து இருக்கும் அனல் அது எனலாம்.

ஒரு பிரயாணி மாதிரி வன்யா ஞானியினிடம் வந்தார். ஆனால் என்ன நிகழ்ந்தது? வன்யாவின் முழுமனதையும் அவர் தனக்கு உரிமையாக்கிக் கொண்டுவிட்டார். இதுவரை எந்த ஒருவரிடமும் நம்பிக்கை வைக்காத அவர் இயல்பாகவே ஞானானந்தரிடம் அடைக்கலம் ஆனதை உணர்ந்தார். சிஷ்யர்கள் குருவினிடம் பகுத்தறிவு அற்ற நிலையில், வெறும் உத்சாகத்தினால் பக்தி செலுத்துவதைப் பற்றியும் குருநாதர்களிடம் முழுவதும் அர்ப்பணித்துக் கொள்வதைப் பற்றியும் அவர் அடிக்கடி கேட்டிருக்கிறார். தூய கல்வி அறிவுடைய மேற்கு நாட்டவரான அவர் 'இவையாவும் கருத்துக்கு ஒவ்வாதவை' என்று எண்ணியிருந்தார். ஆனால் இந்த நொடியில் இதே அனுபவம் அவருக்கு நிகழ்ந்தது. உடலனைத்திலும் ஊடுருவி பீறிட்டு வெளிவந்தது! குறுகிய கால்களுடன் சிறிதளவு மயிர்கள்கூடிய தாடைகள் உடையவர், அரை உடல் மட்டும் காவித்துணி அணிந்தவர் - இவர், திடீரென அவர் வாழ்வில் தோன்றியவராய், இச்சமயம் வன்யாவிடம் உலகத்தில் உள்ள எது கேட்டாலும் - என, ஊமை போன்று, ஆடை அற்று எப்போதும் திரிந்துகொண்டிருந்த சதாசிவ ப்ரம்மேந்த்ரரைப் போன்று வெளியில் செல்ல உத்தரவு இட்டாலும் - ஒருவித விளக்கத்தையும் அவரிடம் கோராமல் அவர் செயல்படும் எண்ணமுடையவரானார்!

ஒருவித ஆலோசனையும் செய்யாமல் வன்யா, ஹெரால்ட் இருவரும் ஞானியைப் பணிந்து, பக்தியுடன் அவர் பாதங்களைத் தடவினர்.

பெருமைபெற்ற ரமணர் உலகத்திலிருந்து மறைவதற்கு முன்வருடம் வன்யா அவரை தர்சனம் செய்திருக்கிறார். ஆனால் அந்நாட்களில் ஒரு சிறு கூட்டத்தினிடையே இருந்துதான் மஹரிஷியைக் காணமுடியும். அதுவும் ஆஸ்ரம நிர்வாகிகள் அனுமதித்த சில நிமிஷ நேரங்கள்தான். அன்னை ஆலயத்தின் மண்டபத்தில், தன்னுடைய வங்க சிஷ்யர் செய்து அலங்கரித்த அந்த பெரிய சயன கற்பீடத்தில் கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். அன்பும் அமைதியும் நிறைந்திருந்த அவருடைய கண்களை வன்யா உற்று நோக்கியிருக்கிறார் என்பது உண்மைதான். அத்தருணங்களில், புராதனப் புதிர்களின் மறைவிடம் போன்றிருக்கும் ஹ்ருதயத்தின் உள்ளுணர்வின்

எழுச்சியால் அவர் ஓரளவு உள்நாட்டத்தைப் பெற்றிருந்தார். உண்மையாகவே, இந்த உள்நாட்டத்தின் தூண்டுதல்தான் அந்தப் புனிதமான மலையினிடம் - ஏன், எந்த குகையில் ரமணரை நீக்கமுடியாத வகையில் நாற்புறமும் அருணுசலம் கவிழ்ந்து கொண்டதோ அதனிடம் - வன்யாவைத் திரும்பத் திரும்ப அழைத்து வந்தது. ஆனுல் மஹரிஷிக்கும் அந்த மேற்கு நாட்டவருக்குமிடையே சம்பாஷணை எதுவும் நிகழ்ந்தது இல்லை. மஹரிஷி அவருக்கு எட்டாதவராக இருந்தார். பக்தர்கள், கூட்டங்கள் இவைகளிலிருந்து மஹரிஷி எப்போதும் விலகியிருந்தார். குறுக்கு மறைவுகள், தீபங்கள், தூபஸ்தம்பங்கள்- இதைத் தவிர மாறி மாறி எப்போதும் மஹரிஷியிடம் பணிவிடை செய்யும் சலுகைபெற்ற சிஷ்யர்கள் - இத்தனை தடைகள் இருந்தன. மேலும் வன்யா அப்போதுதான் மேல் நாட்டிலிருந்து வந்திருந்ததால் மிகவும் புதிய நிலையில் இருந்தார். இந்திய பாஷையை தெரிந்துகொள்ளவில்லை. மேலும் மனதை உள்நோக்கம் அடையச் செய்து, மௌனத்தின் இனிய அறிவுரைகளை நேராகப் புரிந்துகொள்ளும் ஆற்றல் அவர் பெற்றிருக்கவில்லை.

உலகப்பொருள்கள், காட்சிகள், இவைகளைக் கடந்த நிலையில் - சமயச் சடங்குகளை நோக்குதல், அனுஷ்டித்தல், ஞானநூல்களைப் படித்தல், ஆராய்தல், உபந்யாசங்களைக் கேட்டல் - இவைகளுக்கு அப்பாற்பட்ட நிலையில் பரம் பொருளின் காட்சிபெற்று, அந்த ப்ரகாசத்தையே தூயத்தன்மையில் தரிப்பவர்களாக, மெய்யுணர்வின் ரகசியத்தை அறிந்த குருநாதர்களைத் தரிசிப்பது என்பது தனித்த அனுபவமாகும்.

ஆனுல் அந்த குரு என்ற புராதன நாமம் தெய்வீகத்திற்கு புறம்பாக இல்லாவிடினும், சரளமான முறையில் அதிகம் உபயோகித்தலால் புனிதத் தன்மை இழக்கிறது என்பது வருத்தப்படும் விஷயமாகும். எவரொருவரும் இந்த நாமத்தை உபயோகித்தலாகாது, ஒருவரை இந்த நாமத்தால் அழைக்கலாகாது - சிஷ்யனுக்குரிய ஹ்ருதயமும், மனப்பக்குவமும் தனக்கில்லாத நிலையில்.

உண்மையாகவே, ஒரு உண்மையான குருவைக் காண்பது எவ்வளவு அரிதோ, ஒரு உண்மையான சிஷ்யனைக் காண்பதுவும் அவ்வளவு அரிதாகும். ஆகையால் 'எப்போது சிஷ்யன் பக்குவ நிலையில் இருக்கிருனே, அப்போது குரு தானுகவே தோன்றுவார்' என்ற ஹிந்து சமயக்கொள்கை பொருத்தமுடையது. எவர் இன்னும் பக்குவ நிலையை அடையவில்லையோ அவர்களே குருக்களை நாடிச்சென்ற வண்ணம் நேரத்தை கழிக்கின்றனர்.

குருவும் சீடனும், தம்பதி போன்ற நிலையிலுள்ளவர்கள் - ஒருவரையொருவர் ஆகர்ஷித்து ஒருவருடன் ஒருவர் இணைந்த வண்ணம் இருக்கின்றனர். இரு துருவங்களும் பரஸ்பர சம்பந்தத்தினுலேயே நிலைத்து நிற்பது போன்று! ஐக்கியத்திற்கு செல்லும் பாதையில் தோன்றும் இருவர் நிலை... இரண்டறக் கலந்து அனுபூதியாக நிற்கும் முடிவான நிலை...

கண்டிப்பாக குரு என்பவர் ஒரு பண்டிதனோ, அல்லது பேராசிரியரோ, அல்லது ப்ரசாரகரோ அல்லது வழிகாட்டியோ அல்லது பிறரிடமிருந்தோ நூல்களிடமிருந்தோ கற்று மற்றவர்களுக்கு வழங்கி ஜீவன்களை வழிநடத்திச் செல்லும் உயர் அதிகாரியோ அல்ல. குரு எனப்படுபவர் முதலாகத்தான் பரம்பொருளை நேரில் தரிசித்திருக்கவேண்டும். தன்னுடைய அனுபவ வாயிலாக அதற்குரிய வழியைத் தெரிந்திருக்கவேண்டும். சிஷ்யனுடைய ஹ்ருதயத்தில் தன் உணர்ச்சி கடந்த அனுபூதியின் தோற்றத்தை - ஸ்வயம் ப்ரகாசிக்கும் வஸ்துவின் அனுபவத்தை - எழுப்ப வல்லவராக இருக்க வேண்டும்.

உண்மையிலேயே, குரு தத்துவத்தின் ரகஸ்யமே ஹ்ருதயத்தின் ரகஸ்யமாக விளங்குகிறது அல்லவா? குருநாதரின் சந்நிதியில் இருக்கும்போது, எல்லா பகட்டுகளும் நீங்கியவனாய், ஒருவன் தன் அந்தரங்க ஹ்ருதயத்தில் அமர்ந்து தன்னையே நேரிட்டு காண்கிறானல்லவா?

குருநாதருடன் ஏற்படும் சந்திப்புதான் மிக முக்கியமான சந்திப்பாகும் - ஒருவனுடைய வாழ்க்கையில் ஏற்படும் பெரிய மாறுதலை அளிக்கும் திருப்பமாகும். ஆனால் அந்த சந்திப்பு ஒருவனுக்கு உணர்ச்சி, சிந்தனை இவைகளைக் கடந்து நிற்கும்போதுதான் நிகழும். அது ஹ்ருதயாகசத்தில் - அனுபூதிமான்கள் கூறும் மொழியில் அகவெளியில் - முழுமனதும் ஒருமுகப்பட்ட நிலையில் நிகழ்வதாகும். மனித வ்யவஹாரங்களில் நிகழும் எந்த சந்திப்பிலும், சேர்க்கையிலும், தனித்திருக்கும் உணர்ச்சியை கடப்பதில்லை. மிகவும் உயர்ந்து காணப்படும் பிணைப்பிலும் இருவரும் கலந்து அன்பினாலும் ஆர்வத்தினாலும் ஒன்றியதன்மை அடைகின்றனர் எனக் கூறலாம். ஆனால் குரு சிஷ்யன் இவர்களுடைய சேர்க்கையில் இருவரும் கலந்து ஒன்றுகின்றனர் என்பதில்லை; ஏனெனில் அது ஏக ஸ்வரூபமான பேதமற்ற, பூரணமான நிலை. குருவினோடு எவரொருவருக்கு வ்யவஹார நிலையிலேயே இரண்டற்ற நிலை என்பது முதலாவதாக சித்திக்கவில்லையோ அவருக்கு எப்போதுமே அத்வைத அனுபவம் - இரண்டற்ற அனுபூதி நிலை - புரியாததாகவே நிற்கும்.

குருநாதர் என்ன மொழிகிறாரோ அவை சிஷ்யன் ஹ்ருதயத்தினிடமிருந்து எழுவனவாகும். வேறொரு மனிதர் அவனிடம் பேசுகிறார் என்பது இல்லை. புறப்புலன்களால் பிறரிடமிருந்து அடையப்படும் புதிய கருத்துக்கள் என்று அவைகளை கூறலாகாது. எப்போது உணர்வுடன் கூடிய குருநாதரின் மொழிகள் சிஷ்யனின் செவியை அடைகின்றனவோ, ஸ்வரூபத்தில் மனம் லயித்தவராய் எப்போது சிஷ்யனுடைய கண்களில் பார்வையை செலுத்துகின்றனரோ, அக்கணமே ஹ்ருதய குகையில் உள்ளக் கிளர்ச்சிகள் ஏற்பட்டு, சிஷ்யனுக்கு தன் உண்மையான நிலையை ப்ரகடனப் படுத்தும் உணர்வுகள் வெளிக்கிளம்புகின்றன.

எந்த மொழிகளை குருநாதர் வழங்கினல் என்ன? அவைகளுடைய முழுச்சக்தி அவைகளைப்பெறும் ஹ்ருதயத்தின் தகுதியைப் பொறுத்திருக்கிறது. குருநாதரைப் பார்க்கும்போதோ, கேட்கும்போதோ சிஷ்யன் தன்னுடைய நிஜஸ்வரூபத்தை - உண்மையான இயல்பை - ஹ்ருதயத்தில் கண்டு கொள்கிருன். எவனொருவனும் அறியாத நிலையிலும் கூட இந்த அனுபவத்தையே விழைகிருன்.

இறுதியான நிலையில், எவரொருவர் சொற்களின் உதவியின்றி சிஷ்யனின் ஒருமுகப்பட்ட மனதைக் கவர்ந்து வேத ரிஷிகள் உபதேசித்த 'தத்வமஸி' - அதுவாக நீ இருக்கிருய் - என்ற கருத்தை உணர வைக்கிருரோ அவர் உண்மையான குருவாவர். இந்த குரு தத்துவம் சிஷ்யனின் ஹ்ருதயம் 'நான்' எனும் இறுதித் தடையிலிருந்து மீள்வதற்கு நிற்கும் தருணத்தில் ஏதாவது ஒரு ரூபத்தை மேற்கொள்கிறது. இந்த நோக்கில் அருணுசலத்தை ரமணருக்கு குரு எனலாம்.

அந்தரங்கத்தில் நிகழும் மிகப்பயன் தரவல்ல சம்பாஷணைகளுக்கு உதவியாக இருப்பது சைதன்யத்திற்குரியதான மௌன பாஷையாகும் - பரதத்வத்தில் நாதமாகத் தோன்றி அந்நிலையிலேயே இலங்குவதாக இருக்கிறது.

இத்தருணத்தில், வன்யா சம்பவங்களின் நினைவுகளைச் சற்று நிறுத்தி வருத்தமுற்ற மனமுடையவராய் வினவினர்: மேலை நாட்டு ப்ரசாரகர்களுடைய மொழிகள் ஏன் ஒரு போதும் கூட ஹிந்துக்களின் மனதில் ஊடுருவதில்லை என்பதை உணருகிறீரா? இருப்பினும் அவர்கள் போற்றும் ஏசுகிறிஸ்து ஒரு ஒப்பற்ற குருநாதரே! அவருடைய மொழிகள் உலகெங்கிலும் அவருடைய கருத்தை உணர்ந்தவர்களுக்கு ஒலித்துக்கொண்டிருக்கின்றன - ஏன், ஹ்ருதய குகையில் நின்று தன்னை அறிவித்துக்கொள்கிருர். ஆனல் எப்போது அம்மக்களுடைய வாழ்வும், மொழியும், பிறரிடம் கேட்ட குருவின் உபதேசத்திற்கு மட்டுமன்றி, அவருடன் தங்கள் ஹ்ருதயங்களில் கொண்ட நேர் தொடர்புக்கு அத்தாட்சியாக, மற்றவர்களுக்கு நம்பிக்கையூட்டும் வகையில் பிரதிபலிப்பு உடையதாக இருக்கும்?

ஒருகணம் தாமதித்து வன்யா கூறலானர். "இத்தகைய நேர் தொடர்பு தான் பொதுவாக தர்சனம் என்று அழைக்கப்படுகிறது."

தர்சனம் என்ற சொல்லுக்கு, வினைப்பகுதியின் கருத்தின்படி, பார்த்தல் என்பது பொருள் ஆகும். மனித இயல்பின் குறை நிறைந்த நிலையில் மனிதருக்குக் கிடைக்கப்பெறும் மெய்ப்பொருளின் நேரிடை காட்சியும் அதுவாகும். தத்துவங்களின் - இறைவன், ஜீவன், உலகம் இவைகளின் - இயல்புகளை விளக்கி அவைகள் மூலம் மெய்ப்பொருளை காண்பதற்கு வழிகள்

கூறும் மஹரிஷிகளின் மதங்களும் தர்சனங்களாகும். இவைகளைத் தவிர, புனித க்ஷேத்ரங்களை, கோயில்களில் உள்ள மூர்த்திகளை, காண்பதுவும் தர்சனமாகும். நாமரூபமற்ற பரம்பொருள் ஆர்வமிக்க மனிதனின் எண்ணங்களுக்கேற்ப உருவைத் தாங்கி நிற்கும் கோலமே மூர்த்தி வடிவமாகும். இவைகளைக் காட்டிலும் பக்குவமடைந்த சாதகர்களுக்கு பயன்தரவல்ல ஞானிகளின் சந்திப்பு என்ற தர்சனமும் இருக்கிறது. மெய்ப்பொருளின் நேரிடை காட்சிக்கு கடைசி படியாக அமைவது குருநாதரின் தர்சனமே! இத்தருணத்தில்தான் இறுதித் திரை, ஆவரணம் நீங்கி உலக அறிவு கடக்கப்படுகிறது.

இதுதான் இறுதியான, பூரணமான தர்சனம் - இதையே, இந்திய நாடு தொன்றுதொட்ட காலத்திலிருந்து நாடி வருகிறது. இதில் இந்தியா தன் ரகச்யத்தையே, தத்துவத்தையே உணர்த்துகிறது - நிஜமான ஸ்வரூபத்தில் தன்னை அறிவித்துக் கொள்வதுடன், உன்னையே உனக்குக் காட்டித் தருகிறது!

உபநிஷத்துகளில் ரிஷிகள் குருநாதரின் ரகச்ய ஆற்றலைப் புகழ்ந்துரைக்கின்றனர்....

வேதாந்த வாக்யங்கள் மூலம் ச்ரவணம் செய்யவும் பலரால் முடியாது; ச்ரவணம் செய்த பலரும் அத்தத்துவத்தை உணரார்; உணர்த்துபவன் ஓர் அதிசய புருஷன்; உணருபவனும் ஓர் அதிசய புருஷனுவான்; அனுபூதியற்றவரால் இத்தத்துவத்தை உணரவைக்கமுடியாது. சிந்தனைகளால் அடைய முடியாது. ப்ரஹ்மத்தைத் தானுக உணர்ந்தவன் மொழிந்தாலொழிய தத்துவத்தை உணர வழியில்லை. அது அணுவைக் காட்டிலும் சூக்ஷ்மமானது, அறிவுக்கு எட்டாதது.

(கடோபநிஷத் 2 (7-9))

கர்மாவினுல் அடையப்படும் உலக நலன்களை ஆராய்ந்து அந்தணன், செய்கையினுல் நித்யமானப் பொருளை அடைய முடியாதென உணர்ந்து வைராக்யம் அடைகிருன். அந்த மோக்ஷஸ்வரூபத்தை அறியும் பொருட்டு வேதமறிந்து, ப்ரஹ்ம நிஷ்டையில் இருக்கும் குருவை, பூஜை த்ரவியங்களுடன் அவன் சென்று பார்க்கக் கடவன். மனவடக்கமும், சாந்தியும் நிரம்பிய அந்த அறிவாளிக்கு பரமாத்ம ஸ்வரூபத்தை அறிந்த குரு உண்மையான ப்ரஹ்ம வித்யையை நன்கு உபதேசிக்கிருர். அவனும் அந்த புருஷ ஸ்வரூபத்தை உணருகிருன்.

(முண்டக உபநிஷத் 1 (12-13))

நாரதர் சனத்குமாரரை அடைந்து "எனக்கு உபதேசம் செய்வீராக" என வேண்டினுர்.

"ஏற்கனவே நீர் என்ன அறிந்திருக்கிறீரோ, அதைச் சொல்லும். அதற்கு மேல் நான் கூறுகிறேன்" என அவர் மொழிந்தார்.

"ரிக்வேதம், இதிஹாஸம், புராணம், விஞ்ஞானங்கள் அறிந்திருக்கிறேன். நான் மந்த்ரங்களை அறிந்தவனே, ஆத்மாவை அறிந்தவனல்ல. தங்களைப் போன்ற பெரியவர்களிடமிருந்து 'ஆத்மாவை அறிந்தவன் சோகக் கடலை கடக்கிறான்' எனக் கேள்வியுற்றிருக்கிறேன். பகவன்! நான் சோகத்தையே அனுபவிக்கிறேன். சோகத்திலிருந்து என்னை மீட்பீராக."

"என்ன நீர் கற்றுக்கொண்டிருக்கிறீரோ, அவை யாவும் வெறும் சொல்லே."

அனந்தமாயும், ஆத்மாவாயும் நிரந்தரமாயும் வ்யாபகமாயும் இருக்கும் பூமா என்ற ஸ்வரூபத்தின் தத்துவத்தை சனத்குமாரர் நாரதருக்கு உணர்த்தினார்.

தமஸ் என்ற அஞ்ஞானத்திற்கு அப்பால் உள்ள ஞானவெளியைக் காட்டியருளினார்.

(சாந்தோக்ய உபநிஷத் 7 (1-3, 26))

"இதுவே நான் அறிந்த பரப்ரஹ்மம். இதற்குமேல் வேறொன்றுமில்லை," என அவர்களிடம் கூறினார்.

பிப்பலாதரை பூஜித்து (சிஷ்யர்கள்) கூறினார்கள்: "அவித்தையைக் கடத்தி அழைத்துச் சென்றதால் நீங்களல்லவோ தந்தை, நமஸ்காரம். நமஸ்காரம்."

(ப்ரஸ்ந உபநிஷத் 6 (7-8))



ஆஸ்ரமத்திலிருந்து ஹெரால்ட், வன்யா இருவரும் திருக்கோயிலூரை நோக்கிச் சென்றனர். அங்கு புகழ்பெற்றதும் விசாலமானதுமான விஷ்ணுவின் கோயில் தொடங்கி எல்லா கோயில்களுக்கும் சென்றனர்.

அங்கு ப்ராம்மணர்கள் கோயிலைச் சுற்றி காண்பித்தனர். அந்த ஸ்தலத்திற்குரிய புராணக் கதைகளையும் கூறினர். வாமனனாக அவதரித்த போது காட்சி கொடுத்த உலகளந்த பெருமாளுக்கு எழுப்பியிருக்கும் கோயில் அது. மண்ணுலகிலும் விண்ணுலகிலும் அரசாட்சி செய்து வந்த பலி என்ற அசுர சக்ரவர்த்தியிடம் அவர் மூன்று காலடிகள் வைப்பதற்கு போதிய நிலத்தை தானமாகக் கேட்டார். பிறகு அந்த வாமனன் - சிறிய உருவமுடையவன் - உலகத்தை வியாபிக்கும் தோற்றம் எடுத்து, முதலடியினால்

மண்ணுலகை அளந்து, இரண்டாவது அடியினல் விண்ணுலகை அளந்து, மூன்ருவது காலடியை பலியின் சிரசின் மேல் வைத்து அவனை ஆட்கொண்டார். இந்த நிகழ்ச்சியைப் பாராட்டும் ரிக்வேத மந்த்ரங்களை ப்ராம்மணர்கள் ஓதினர்.

மூவுலகையும் - புவனத்தையும், ஸ்வர்கத்தையும் கடந்து தேஜோமய மான அம்ருத லோகத்தில் தன் பாதத்தை எந்த புருஷன் வைத்திருக்கிருனே''

(புருஷ சூக்தம்)

இருப்பினும் விஷ்ணுவின் கோயில்களில் வன்யாவின் மனம் முழு திருப்தி பெறுவதில்லை. தன்னுடைய இயல்புக்குகந்த வகையில் இல்லாமல் மூர்த்தி வழிபாடு விஸ்தாரமாக இருப்பதாக வன்யா அடிக்கடி புகல்வார். அந்த மூர்த்திகளும் வழிபாட்டு முறைகளும், தன் மனதிற்கு எட்டாத அடிப்படை உணர்ச்சிகளிலிருந்து வெளிப்பட்டவைகள் என அவருக்குத் தோன்றியது. ஆகையால் அவைகளை முழுவதும் புரிந்துகொள்ள முடியாத நிலையில் அவை களோடு தன்மயமான நிலையை அடைவதில்லை.

ஆனல் சிவன் கோயில்கள் அவரை எப்போதும் கவர்ந்தன. சிவபெரு மானைப் பற்றி பின் வளர்ந்த புராணக்கதைகள் ஹிந்துக்கள் போற்றும் புனிதத் தன்மை வாய்ந்த தூய்மையே சிவ தத்துவத்தின் ரகசியம் என்பதை மறைத்து விடவில்லை. அன்பே சிவம் என்று தமிழர்கள் கூறுவது போல், அன்பின் தெய்வமாவார். ரூபமற்ற தெய்வமாகவும் சிவன் விளங்குகிருர். அவருக்கு செலுத்தும் உத்தமபூஜை அவருடன் இரண்டறக் கலந்து அவருடைய நாமத்தின் நினைவுமற்றிருப்பதுதான். சிவன் கோயிலிலும் பூஜகர்கள் இவ்வன்பர்களை சந்நிதிகளுக்கு அழைத்துச் சென்று, இவர்களின் ஈடுபாட்டைக் கண்டு புஷ்பங் களால் அர்ச்சனை, தீபாராதனை முதலியவைகளைச் செய்தனர். தன்னுடைய விசேஷ ப்ரீதிக்கு உரிய தக்ஷிணமூர்த்தி வடிவத்தினருகே ஹெரால்ட் சற்று தயங்கி நின்ருர். அமைதி, ஒருவித அலங்காரமுமற்ற எளிமை, ஒளி கலந்த இருள் - இவைகளால் மனம் கவரப்பட்ட நிலையில் வன்யா சிவன் சந்நிதிக் கெதிரில் அஞ்சலி செய்த வண்ணமாக நின்ருர்.

பிறகு, இருவரும் கோயிலுக்கருகே ஆற்றங்கரையிலே ஒரு கற்பாறை மீது அமர்ந்தனர். அப்போது ஒருவர் அவர்களிடம் வந்து, "எழுந்திருந்து அங்கு பாருங்கள்!'' எனக் கூறினர். வடமேற்கு திசையில் புனிதமலையான அருணாசலத்தின் உருவத்தை - மர்மமாக விளங்கும் முக்கோண வடிவத்தை - கண்டனர். "இவ்விடத்தில் வந்துதான் கார்த்திகை தீபத்தின்போது தீப தர்சனம் செய்கிருேம்'' என்று அந்த ப்ராம்மணர் கைகளைக் கூப்பி காண்பித்தார். எந்த மலை தந்தையின் வீட்டிலிருந்து ஓடிவரும் வெங்கட்ராமன் எனும் சிறுவனுக்கு தெய்வீக ஒளியாக விளங்கி ஆட்கொண்டதோ, அந்த

சக்தி நிறைந்த மலையை நோக்கி வன்யாவும் தன் கைகளை உயரக் கூப்பினூர். ரமணர், ஞானனந்தர், அருணசலம், எல்லா மனிதர்களும், உயிர்களும், வன்யா உள்பட எல்லோரும் எல்லா உருவமுமாகி விளங்கும் ஓர் உருவமற்ற பரம்பொருளின் வடிவங்களே. பல ரூபங்களில் தன்னை ப்ரகாசப்படுத்திக் கொள்ளும் பிரான் தனக்குகந்தவரை சிறிது சிறிதாக எல்லா ரூபங்களையும் கடக்கச் செய்து, தன்னிடம் அழைத்துக்கொள்கிறூர்.



# 3. தபோவனம்

ஹெரால்ட், வன்யா இருவரும் தங்கள் பகலுண்டியை நகரத்திலேயே முடித்துக்கொண்டனர். ஏனெனில் நேரம் சென்று தபோவனத்திற்குத் திரும்புவதால் தங்களால் உணவு நிமித்தமாக இடையூறு ஒன்றும் ஏற்படக்கூடாது என அஞ்சினர். ஸ்ரீ ஞானனந்தருடன் வேலையாளோ சிஷ்யரோ எப்போதும் இருக்கவில்லை என்பதை உணர்ந்திருந்தனர். தினமும் காலையில் வரும் பக்தர்களில் சிலர் அவர் ஆகாரத்திற்குரிய ஏற்பாடுகளில் முனைவர் ; அவர்களில் யாராவது ஒரு ப்ராம்மண மாது ஸ்வாமிக்கு அன்னம் தயாரிப்பதில் உவகையுடன் ஈடுபடுவாள். மற்ற நேரங்களில் அருகிலுள்ள அக்ரஹாரத்திலிருந்து அவருக்கு பிக்ஷை எடுத்து வரப்படும். இக்காரணம் பற்றி இவ்விரு நண்பர்களும் பிற்பகலில்தான் தபோவனம் திரும்பி வந்தனர். எதிலும் கண்டிப்பாக இருக்கும் சுபாவமுள்ள இந்த ஐரோப்பியர்கள் மற்றவர்களுக்கு எந்தவித இடையூறு விளைவிப்பதற்கும் அஞ்சினர். இதைக் காட்டிலும், மற்றவர்கள் தங்களுக்கு இடையூறு விளைவிப்பதிலிருந்தும் காப்பாற்றிக்கொள்ள விரும்பினர். ஆனல் ஸ்வாமி வெகுநேரம் வரையில் உணவு அருந்தாமல், அவர்களுடன் அருந்த விரும்பி காத்துக்கொண்டிருந்தார் என்ற வருத்தத்தைத் தரும் செய்தியை அவர்கள் பின்புதான் கேட்டனர்.

இச்சமயம், ஸ்ரீ ஞானனந்தர் காலையில் காணப்பட்ட சிறிய அறையில் அமர்ந்திருக்கவில்லை. கூட்டமாக அவரைச் சுற்றி அமர்ந்திருக்கும் இருபது முப்பது பேர்களுக்குக்கூட காணுத அளவுக்கு இருந்த ஒரு பெரிய அறையில் உட்கார்ந்திருந்தார். பக்தர்கள் வந்துகொண்டிருந்தனர் - அவருக்கு நமஸ்காரம் செய்து, பழங்கள் புஷ்பங்கள் முதலியவைகளை சமர்ப்பித்துவிட்டு, புருஷர்கள் வலப்புறத்திலும், மாதர்கள் இடப்புறத்திலும் அமர்ந்திருந்தனர். பக்தர்கள் கடைபிடிக்கும் இவ்வொழுக்கத்தை வன்யா இதற்கு முன்பு இவ்வளவு நெருங்கிய நிலையில் கண்டதில்லை.

புதிதாக இருப்பவர் ஆடவராயிருக்குமானுல் அவர் வழக்கமான வேஷ்டியை அணிந்து, இடுப்புக்கு மேல் வஸ்த்ரமில்லாமல் இருப்பார்.

முதலாக அவர் தான் கொண்டு வந்திருக்கும் பண்டங்களை ஸ்வாமியின் பாதங்களில் சமர்ப்பிப்பார். சிறிது மெதுவாக பின் சென்று, இரு கைகளையும் கூப்பி, பிறகு தன் கைகளை மேல்புறம் நீட்டி, பூமியில் பதியும்படி வணங்குவார். பிறகு எழுந்து மண்டியிட்டு உட்காருவார் அல்லது நிற்பார்; கைகளை முன் போல் கூப்புவார், திரும்பவும் பூமியில் விழுந்து நமஸ்காரம் செய்வார் - இவ்வாறு மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு தடவைகள் தன் உணர்ச்சிக்குத் தகுந்த வகையில் செய்வார். ஒரே ஒரு தடவை நமஸ்காரம் செய்வது கலாச்சாரக் குறைவையோ அல்லது அவர் மேல் வகுப்பைச் சேர்ந்தவரில்லை என்பதையோ வெளிப்படுத்துகிறது. முடிவில், அந்த மனிதர் எழுந்து நின்று காதுகளை உள்ளங்கைகளால் தொட்டுக் கொண்டு, ஸ்வாமிக்கு முன் குனிந்து அவர் பாதங்களைத் தொட்டு, குருவின் புனித உடலோடு சம்பந்தப்பட்ட அந்த கையின் விரல்களால் தன் கண்களைத் தடவுவார்.

மாதர்கள் பூமியில் முழுவதும் படுத்து வணங்குவதில்லை. மண்டியிட்டு நெற்றி பூமியில் படும்படி வணங்குவர். சில சமயங்களில் ஒரு குடும்பத்தைச் சார்ந்த எல்லோரும் வருவர். அந்நேரங்களில் அங்கு நடந்துகொண்டிருக்கும் சம்பாஷணை தானுக நின்றுவிடும். தந்தை, தாய், குழந்தைகள் ஒவ்வொருவரும் நமஸ்காரம் செய்து எழுந்திருப்பதை எல்லோரும் கவனித்துக்கொண்டிருப்பர்.

அவர்கள் திரும்பிச் செல்லும் நேரத்திலும், இம்முறையையே பின்பற்றுவர். ஆனுல், இத்தருணத்தில் ஒவ்வொருவரும் அங்கு குவிந்திருக்கும் பொருள்களிலிருந்து ஒரு பழத்தையாவது அல்லது புஷ்பத்தையாவது அவரிடமிருந்து பெறுவர். இது ப்ரசாதம் எனக் கூறப்படுகிறது; பக்தர்கள் அதை இரு கரங்களிலும் ஏந்தி ஆர்வத்துடன் கண்களில் ஒற்றிக்கொள்வர். ப்ரசாதம் என்பது உண்மையில் இறைவனிடமிருந்து கிடைக்கப்பெறும் அருளே; அல்லது அருளின் மறுசின்னமே. குறிப்பாக பூஜைகள் கோயிலில் முடிவு பெறும் போது அவர்களால் சமர்ப்பிக்கப்பட்ட பண்டங்கள் இறைவனுல் ஏற்கப்பட்டு ப்ரசாதங்களாக வழங்கப்பெறுகின்றன. ஆகையால் இத்தகைய ப்ரசாதம் ஆண்டவன் கருணையின் தனித்த சக்தியுடன் கூடிய சின்னமாகத்தான் கருத வேண்டும். மற்ற மனிதர்களைப்போல் அல்லாமல் இறைவனின் தெய்வத் தன்மையையும் பூரண நிலையையும் தரித்து விளங்கும் ஒரு ஞானியினுடைய கரங்களில் இருந்து பெறப்படுவது ஆகையால் இத்தகைய ப்ரசாதம் ஆண்டவன் கருணையின் தனித்ததொரு சின்னமாக எவ்வாறு கருதாமலிருக்க முடியும்? குருவினுடைய ப்ரசாதம் எப்போதும் மிகுந்த பக்தியுடன் பெறப்படுகிறது - அது இலையாயிருந்தாலும் சரி, புஷ்பமாயிருந்தாலும் சரி, அல்லது தின்பண்டங்களாயிருந்தாலும் சரி - வீட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டு, குடும்பத்தினர் எல்லோருக்கும் விநியோகிக்கப்படுகிறது.

விடைபெறும்போது ஸ்வாமி ப்ரசாதம் வழங்குவதை குழந்தைகள் கண்டு கொண்டனர். இவர்களுள் பாசாங்குத்தனமுள்ள சில சிறுவர்கள் அடிக்கடி

விளையாட்டாக வந்து நமஸ்கரித்து விடைபெற்றுப் போவார்கள். குருநாதர் சிரிப்புடன், எதிரில் பழங்கள் இருக்கும் வரை, அவர்களுக்கு வாழைப்பழமோ, ஆரஞ்சோ கொடுத்து வந்தார்.

அருகிலுள்ள நகரத்திலிருந்தும், பக்கத்து கிராமத்திலிருந்தும் பக்தர்கள் வருவதுண்டு. அடிக்கடி ஸ்ரீ ரமண மஹரிஷியின் நெடுங்காலத்திய பக்தர்களும் திருவண்ணமலையிலிருந்து வருவதுண்டு; தங்கள் கண்ணெதிரே மற்றொரு மஹானைக் காணவும் ஸ்ரீ ரமணரின் உபதேசத்தை ஒத்த மொழிகளை அவரிட மிருந்து பெறவும் அவர்கள் விழைந்தனர். பள்ளிக்குச் செல்லும் போதும் திரும்பி வரும்போதும் சிறுவர்கள், குறிப்பாக அகரத்திலிருந்து வரும் மாண வர்கள், உள்ளே நுழைந்து செல்வது வழக்கம். பரீக்ஷை நடக்கும் தினங் களில் ஒவ்வொருவரும் ஸ்வாமியின் ஆசீர்வாதம் என்ற பாதுகாப்பு இல்லாமல் வினுத்தாள்களைப் பார்க்கத் துணிய மாட்டார்கள்.

ஒரு ஏழை மாது உள்ளே நுழைந்தாள். எளிமையான தன் காணிக் கையான பழங்களையும், புஷ்பங்களையும் சமர்ப்பித்து விட்டு நமஸ்கரித்தாள். வழக்கம் போல் தன் கரங்களை உயரத் தூக்கி "ஓம்...தேவா" என்று கூறிக் கொண்டு பரிவுடன் குருநாதர் ஆசீர்வாதம் அளித்தார்.

"நல்லது, எங்கிருந்து வருகிறாய், அம்மா? கிராமத்தில் எல்லோரும் க்ஷேமமா? வீட்டிலும் யாவரும் க்ஷேமமா? உன் கணவனும் குழந்தைகளும் எவ்வாறு இருக்கிறார்கள்?"

அந்த மாது தன் நீண்ட கதையைக் கூற ஆரம்பித்தாள். அவளு டைய கிராமம் குறைந்தது இருபது மைல்களுக்கப்பால் இருந்தது. அவளும் அவளுடைய மகளும் ஏற்கனவே சித்தலிங்கமடத்திலிலுள்ள ஆஸ்ரமத்தில் ஸ்வாமியைத் தரிசித்திருக்கிறார்கள். அவர்களிருவருக்கும் ஸ்வாமி அனுக்ரஹம் செய்திருக்கிறார். இதன் பயனாக அவர்களுடைய கோரிக்கையும் நிறைவேறி யிருக்கிறது. இப்போது அவள் தனியாக வந்திருக்கிறாள். தன் மகளைப் பற்றிய கவலையினால் வந்திருக்கிறாள். அந்தப் பெண் விவாகத்திற்குரிய வயதை அடைந்து விட்டாள். இரு உறவுப் பையன்கள் அவளை மணக்க விரும்புகின்றனர். அவர்கள் ஜாதியில் இருவரும் அவளை மணக்க சமமான உரிமை பெற்றவர்கள். சங்கட நிலையிலுள்ள அந்த மாதுவிற்கு 'இருவர்களில் எவருக்கு தன் மகளை மணம் புரிவிப்பது?' என்ற திகைப்பு ஏற்பட்டது. தன்னால் முடிவு எடுக்கமுடியாத நிலையில் குருநாதரின் ஆலோசனையைப் பெற வந்திருக்கிறாள்.

கிராமத்துப் பெண்மணி எல்லாவற்றையும் விஸ்தாரமாகக் கூறினாள். அவளுடைய பேச்சு, சுலபமாகப் புரிந்துகொள்ள முடியாத அளவு கொச்சை யாக இருந்தது. மற்றவர்கள் விஷயத்தைப் புரிந்துகொண்டவுடன் 'கொல்'

என்று சிரித்தார்கள். ஸ்வாமி மட்டும் மௌனமாக அமர்ந்திருந்தார். மிருதுவான பாஷையில் அவளிடமிருந்து மேலும் தகவல்களைக் கேட்டார். பெண்ணின் அபிப்ராயத்தை வினவினார். பையன்களைப் பற்றி மேலும் சில தகவல்களைக் கேட்டார். பின்பு, அந்த மாதுவை அமைதியாக உட்காருமாறு கூறினார். சிறிது நேரம் சென்றபின் அந்த மாதுவிடம் பேசினார். அவளுக்கு தைரியம் ஊட்டி, அடுத்த மாதம் பௌர்ணமி விரதத்திற்கு பிறகு மகளுடன் வருமாறு பதிலளித்தார்.

இதன் பிறகு, இரு குடியானவர்கள் அறையின் வாசற்படியினருகே வந்து நின்றனர். இவர்கள் கவலையுடனும் பயத்துடனும் வாசற்படியினருகே சுவரின்மேல் சாய்ந்த வண்ணம் நின்றுகொண்டிருந்தனர். ஸ்வாமியின் சமீபத்தில் வருவதற்கும், நமஸ்காரம் செய்வதற்கும் அஞ்சுபவராய் இருந்தனர். இருப்பினும் ஸ்வாமி அவர்களை கவனித்துவிட்டார். "எதற்காக வந்திருக்கிறீர்கள், என்ன விரும்புகிறீர்கள்?" என அவர்களைக் கேட்டார். சாதாரணமான முறையில் அந்தக் குடியானவர்கள் தங்கள் குறையை முணுமுணுத்தனர். ஸ்வாமி கணீர் என பதிலளித்தார்.

"நீ ஆரோக்யமற்று இருப்பாயானால், வைத்தியரிடம் சென்று காண்பித்துக்கொள்; உனக்கு வேண்டிய மருந்து மாத்திரைகளை அவர் அளிப்பார். உன்னுடைய மனைவிக்கோ, மகனுக்கோ, பயந்த கோளாறு இருக்குமானால், பிசாசு பிடித்திருக்குமானால், மந்திரவாதியிடம் செல். பிசாசுகளை ஓட்டும் ஒரு முஸ்லிம் அருகில் இருக்கிறார். ஆன்ம நோயை குணப்படுத்திக் கொள்ள விரும்பினால் இங்கு வாருங்கள். ஆனால் இங்கு ஒரு வைத்தியரும் மந்திரவாதியும் இல்லை என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஆன்மீகப் பிணிக்கு மட்டுமே இங்கு சிகிச்சை அளிக்கப்படும்."

வந்திருந்த பக்தர்களில் ஒருவர் 'தபோவனம்' என்ற ஆஸ்ரமத்தின் பெயரின் அர்த்தத்தை வினவினார். ஸ்வாமி கூறலானார்:

"தபஸ் என்ற பதம் தபிக்கச்செய்தல், விரதம் இருத்தல், உலர்த்துதல், வருத்துதல் முதலிய பொருள்கள் உடையன. வனம் என்று தமிழில் வழங்கப்படுகிற சொல் மரங்கள் அடர்ந்த இடத்தை அல்லது காட்டை குறிக்கிறது. முற்காலங்களில் பெரிய காட்டுப் பிரதேசங்கள் இந்தியாவில் இருந்தன. அங்கு துறவு பூண்டவர்கள் உலக மக்களிடமிருந்து ஒதுங்கி சென்று தங்கியிருப்பர். பழங்களையும் மூலிகைகளையும் உண்டு, தெய்வ த்யானத்தில் காலத்தைப் போக்கிக் கொண்டு இருப்பர். இக்காலத்தில்-இந்த பிரதேசத்தில் மட்டுமாவது-பெரிய அளவில் காடுகள் காணப்படவில்லை. மரங்கள் வீழ்த்தப்பட்டு விட்டன. நாட்டுப் புறமாக மாறிவிட்டது. ஆகையால் காடுகள் காணப்படாததால் சில இடங்களையாவது தேர்ந்தெடுத்து தனித்து வைப்பதால் த்யானம் செய்பவர்களும் யோகாப்யாசத்தில் ஈடுபடுபவர்களும் இவற்றை

உபயோகித்துக்கொள்ள முடியும். இந்த ஆஸ்ரமம், மக்கள் சமூகத்திலிருந்து விலகி அன்றாட அலுவல்களை நீக்கி, சிறிது நேரமாவது ஆன்ம ஞானத்தை அடைவதற்காக த்யானத்தில் ஈடுபட விரும்புவோர்களுக்காகத் தோற்றுவிக்கப் பட்டது. அவர்கள் தங்களுக்கு வேண்டிய அறிவுரைகளைப் பெற்று இங்கு த்யானத்தில் முழுவதும் ஈடுபடலாம்.''

இவ்வாருக சம்பாஷணை தொடர்ந்தது. சாதாரணமான விஷயத்தைப் பற்றி பேச்சு நடந்தாலும் குருநாதர், அதை ஏதாவது ஒருவகையில் தத்துவத்தோடு சம்பந்தப்படுத்தி, தெய்வீக வாழ்வில் பெரும்பாலோருக்கு பிரதிபந்தகமாக இருக்கும் முக்கியமான பிரச்னைகளைக் குறிப்பிடுவார். எந்தப் பிரச்னையைப் பற்றிப் பேசும்போதும் அவருடைய தனித்த அன்பு ஒவ்வொருவருடைய கவனத்தையும் ஈர்த்தது.

வன்யா ஸ்வாமியின் அருகில் அமர்ந்திருந்தார்; அவர் கூறும் மொழிகளைப் பருகிக்கொண்டு இருந்தார். குருநாதர் அடிக்கடி ரகஸ்யமாக 'பால் வந்துவிட்டதா?' என்று விசாரிப்பதை அவர் உடனே கண்டு கொண்டார். வந்திருந்த இவ்விருவருக்கும் பகலில் உணவளிக்க வாய்ப்பு இல்லாததால், அவர்கள் திரும்புவதற்கு முன்னர் ஏதாவது அருந்துவதற்கு அளிக்க ஆவலாக இருந்தார்.

அச்சமயம் வன்யா பேசினுர்; "ஸ்வாமிஜீ, ஏன் இதைப்பற்றி கவலை கொள்கிறீர்கள். எங்கள் உடலுக்குத் தேவையான உணவைப் பெறுவதற்காக நாங்கள் இங்கு வரவில்லை. ஞானப்பால் அருந்த வேட்கையுடையவராக இருக்கிறோம். அதை வழங்குங்கள். எங்களுக்கு உண்மையாகவே வேறொன்றும் தேவையில்லை.''

வழக்கம்போல், மிகவும் மிருதுவாக, கண்களை சிறிதே தூக்கியபடி, குரலை உயர்த்தாமலும் வேகமாக பேசாமலும், ஸ்வாமி பதிலளித்தார்.

"ஆன்ம உணவுக்காகத் தனித்த நேரமும், உடலுக்குரிய உணவுக்காகத் தனித்த நேரமும் இருக்கின்றன. இளங்கன்று தாய் பசுவின் பாலை எல்லா நேரத்திலும், தான் வேண்டுமளவிற்கு அருந்தலாகாது. எப்போது கன்றுக்கு அளிக்கவேண்டும், ஒருபோது எவ்வளவு அளிக்கவேண்டும் என்று தாய் தெரிந்துகொண்டிருக்கிறது. ஞானப்பால் அருந்துவதிலும் இது பொருந்தும்.''

சரியான தருணமாக இருந்தாலும் சரி, இல்லாமலிருந்தாலும் சரி, குழுமியிருக்கும் அனைவரும் தங்கள் சக்திக்கு எட்டியவரை ஞானவிருந்தை அருந்த விரும்பி குருநாதரிடம் தங்களுக்குத் தோன்றிய ஐயங்களை எல்லாம் - ஞானத்தைப் பற்றியும் அதற்கு உபாயமாக இருக்கும் த்யானத்தைப்பற்றியும்- கேட்கலாயினர்.

துரதிருஷ்ட வசமாக வெளியிலிருந்து வந்த ஒரு சாது ஸ்வாமியின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் சிவப்பிரகாசம் - 'சிவனின் ஒளி ஸ்வரூபம்' - என்ற பெயரால் அழைக்கப்பட்டார். அவருக்கு உண்மையாகவே ஆங்கிலமோ, தமிழோ நன்ருகத் தெரியாது. ஏனெனில் நெடுந்தூரத்தில் உள்ள (பெல்லாரி) ஜில்லாவைச் சார்ந்த இவர் சந்நியாசம் எடுத்துக் கொள்வதற்கு முன் பத்திரிகை நிருபராக இருந்தார். இருப்பினும், அவர் குறுக்கீடு செய்து பேசிக்கொண்டே இருப்பார்; குருநாதர் தெரிவிக்கும் கருத்துகள் மேல் இவர் தன் அபிப்ராயங்களை, பற்கள் இல்லாத பொக்கை வாயை முழுவதும் திறந்துகொண்டு, பெருமிதத்துடன் உரத்த குரலில் கைகளை ஆட்டிக்கொண்டு தெரிவிப்பார்.

வன்யாவிற்கு இது ஆத்திரத்தை மூட்டியது. மற்றவர்களும் அதிருப்தி கொண்டிருந்தனர் என்பதை அவர் தெரிந்துகொண்டார். ஆதலால் அந்த குறுக்கே பேசுபவரை நோக்கிக் கூறினுர், "பெரியவரே, குருநாதரின் அம்ருத மொழிகளைப் பருக இங்கு வந்துள்ளோம். தான் ஒருவராலேயே உணர்த்தக் கூடிய வகையில் அவர் உபதேசம் நமக்கு வழங்குவார். அதைப்பற்றிய அபிப்ராயங்களைத் தெரிவிப்பது அவர் கருத்துகள் வழங்குவதை தடை செய்யும். அவருடைய மொழிகளை மட்டும் அமைதியாகக் கேட்க விரும்புகிறோம்."

கன்னட தேசத்திலிருந்து வந்திருந்த அந்த சாதுவுக்கு சிந்தனை வேறு விதமாகப் பாய்ந்தது. 'மௌனம் எனப்படுவது இதுதான்' என்று தான் கூறும் கருத்துக்கு ஆதாரமாகப் பல சுலோகங்களை எடுத்துக் காட்டினுர். 'மௌனம் என்பது முதலாவதாக வாயை மூடி வைத்திருப்பது' என்று கூற விழைந்த வன்யா வெகு நேரம் பொறுமையாகக் காத்திருக்க நேர்ந்தது. அந்த சாது தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தார். இவ்விரு மேலை நாட்டினருடைய பெயர் களைக் கேட்டார். "எங்கே, எப்போது பிறந்தீர்கள்?" என்றும் மற்ற விபரங்கள் குறித்தும் கேட்டார். காலையில் குருநாதர் அவர்களை இங்கிதமாக சில கேள்விகளே கேட்டார் - அதுவும் நடைமுறையை அனுசரித்து பிறருக்கு அறிமுகப்படுத்துவதற்காக, தன் ஆவல் காரணமாக அல்ல. 'இவ்விருவரும் முதலாக ஐரோப்பாவைச் சார்ந்தவர், சில வருஷங்கள் முன் இந்தியா வந்தனர். இந்த இடங்களில் தங்கியிருந்து அமைதியாக பிரார்த்தனையிலும், த்யானத்திலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர்.' என்ற இந்தத் தகவல்கள் மட்டும் அவருக்குப் போதுமாயிருந்தன. சொந்த நாட்டிலோ, மதத்திலோ, அவர்களுடைய பெயர்களிலோ, மற்ற எதிலுமோ அவர் அக்கறை காட்ட வில்லை.

வன்யா அந்தப் பிடிவாதத்தனமுடைய சாதுவை நோக்கி பதிலளித்தார்: "பெரியவரே! நான் வருந்துகிறேன். இத்தகைய விபரங்களைக் குறிப்பாக

சாதுக்கள் கேட்பதில்லை. அவைகளில் ஒரு முக்கியத் தன்மையும் இல்லை. எந்த நிமிடம் ஒருவன் சந்நியாயசத்தை மேற்கொள்கிருனே, அந்த நிமிடமே குடும்பத்துடனும் வீட்டுடனும், நாட்டுடனும் தொடர்பற்றவனுக ஆகிருன். எங்கு அவன் தங்குகிருனே அதுவே சாதுவின் இல்லமாகும். இந்த விஷயங் களுக்கு முக்கியத்தன்மை, நீங்கள் அளிப்பவராயின் பிறப்பிடம் என்று சொல்லப்படுவதும், 'எங்கிருந்து வந்தான், எங்கு செல்கிருன்' என்று சொல்லப் படுவதும், உபநிஷதங்களில் கூறியபடி, 'ஹ்ருதய குகை என்ற இடமே' என்று கூறுவதுதான் உண்மையோடு நெருங்கிய தொடர்புடையதாக இருக்கிறது; குகையாகக் கூறப்படும் ஹ்ருதயத்தில்தான் அவன் எப்போதும் அமிழ்ந்திருக்க முயல்கிருன். இந்தத் துணியை அணிந்த தினமே 'எல்லாவற்றையும் துறந்து விட்டேன், உலகத்தில் உள்ள எந்த ஒன்றையும் என்னுடையது என்று கூற உரிமையற்றவன்' என்பதற்கு இந்த தேகத்தைப் போர்த்திருக்கும் காவித்துணி வெளிப்படையான அடையாளம் அல்லவா ? 'நான் யார் ? நான் நேற்று எங்கிருந்தேன் ? பத்து வருஷங்களுக்கு முன் எங்கிருந்தேன் ?' என்பவை யெல்லாம் பொருளற்றவை. 'இந்த உடல் எங்கு பிறந்தது ? எந்த தருணத்தில் ? இதைப் பெற்றவர்கள், என்ன பெயர் இட்டார்கள் ?' என்பது எவ்வாறு முக்கியமானதாகும் ? உண்மையான சாது ஒரு பெயரையோ, நாட்டையோ தன்னுடையதாகக் கருதுபவனல்ல; அவனுக்கு 'நான்' என்ற எண்ணம் இருக்கலாகாது.''

ஸ்வாமி ஞானனந்தர் வன்யாவின் பதிலைக் கேட்டு சந்தோஷமடைந்தார் என்று நன்கு தெரிந்தது. வன்யாவைப் பார்த்துக்கொண்டே அவர் சிவப்பிர காசரிடம் சாதாரணமாகக் கூறினர்:

''ஏன் இந்தக் கேள்விகளை கேட்கிறீர்கள்? நீங்கள் கேட்கும் விபரங் கள் அவர் ஞாபகத்திலும் கூட இருக்கலாகாது.''

பால், காபி, தித்திப்புப் பண்டங்கள் கொண்டுவரப்பட்டன. வன்யா, ஹெரால்ட் இருவரும் அமைதியாக அருந்துவதற்காக அருகிலுள்ள அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இந்நேரத்தில் கடிதங்களும் வந்து சேர்ந்தன; எல்லோரும் தோட்டத்திற்கோ, தம் அறைகளுக்கோ கலைந்து சென்றனர். நூற்றிருபது வயதுடையவராயிருந்தாலும் குரு மிகவும் சுறுசுறுப்பாக இருந்தார். வராண்டாவின் படியருகில் இரு கால்களையும் மடக்கி உட்கார்ந்து கொண்டு, அப்போது வந்த கார்டுகளையும் கடிதங்களையும் படிக்கச் செய்தார். எவரும் இவற்றைக் கேட்கலாம். என்னவாகிலும் இவைகளில் என்ன ரகச்யம் இருக்க முடியும்? கடிதங்களின் ரகச்யங்கள், விஷயங்கள் அனேகமாக ஒரே மாதிரி யாக இருந்தன. யாரோ ஒருவர் ஸ்வாமியின் அனுக்கிரஹத்திற்கு நன்றி தெரிவித்திருந்தார் - அவருடைய ப்ரார்த்தனையினுல் தானடைந்த நலன்களுக் கும், அவருடைய கருணைக்கும். பெரும்பாலும் கடிதங்கள் பணக் கஷ்டங்களை யும், உடல் ஆரோக்யமின்மையினுல் உண்டானத் துன்பங்களையும் விவரித்தன.

குழந்தைகளின் படிப்புக்காகவும், நடைபெறவிருக்கும் கல்யாணத்திற்காகவும் அவருடைய ஆசீர்வாதம் வேண்டிக்கொண்டனர். இவைகள் எல்லாவற்றையும் படிக்கச் சொல்லி கேட்டபிறகு, ஞானனந்தர் பதில்கள் உரைத்தார் - ஒவ்வொரு நபருக்கும் ஆறுதல் மொழியும், நினைவில் வைத்துக்கொண்டு ஆசீர்வாதம் செய்வதாக உறுதியும் அளித்தார்.

அக்கட்டிடத்திற்கு பின்புறம் ஒரு உயர்ந்த மாமரமும் அதனடியில் பெரிய மரத்துண்டமும் இருந்தன. கூட்டத்தை விட்டு விலகி தனியே அமர வன்யா அங்கே சென்றார்.

எனினும் ஐந்து நிமிடங்கள் கூட அவர் தனித்திருந்திருக்கமாட்டார். அச்சமயம் சில ப்ராம்மணர்கள் அவரை அணுகினர். குருநாதரின் அனுமதியைப் பெற்றுக்கொண்டுதான் அவரிடம் வந்தார்கள் என்பதை வன்யா பின்பு உணரலானர். அவர்கள் சம்பிரதாய முறையில் தனக்கெதிரே நமஸ்காரம் செய்ய ஆரம்பித்ததைக் கண்டபோது அவர் பலத்த முறையில் ஆக்ஷேபம் தெரிவித்தார். "தனிப்பெருமையுடைய ஒரு ஞானியின் ஆஸ்ரமத்தில் இம்மரியாதைகளை நீங்கள் எவ்வாறு மற்றவர்களுக்கு வழங்கலாம்? எல்லா மரியாதைகளையும் அவருக்கே அளிக்கவேண்டும்."

இவ்வாறு அவர் வழங்கிய அறிவுரை அவர் ஒரு தெய்வீகக் குணம் படைத்த மனிதர் என்ற நம்பிக்கையையே அவர்களிடம் திடப்படுத்தியது. ஆகையால் அவர்கள் எல்லோரும் அவரை சூழ்ந்து அமர்ந்து கொண்டு ஆங்கிலத்திலும் தமிழிலும் அரைகுறையாக அளவளாவினர்.

அவர்களில் சிலர் திருக்கோயிலூரிலிருந்து வந்தவர்; சிலர் அருகாமையில் உள்ள அகரத்தைச் சார்ந்தவர்: தபோவனம் அமைந்திருக்கும் நிலத்தையும் கட்டிடத்தையும் ஸ்ரீ ஞானனந்தருக்கு அளித்த வக்கீலும் அவர்களில் ஒருவர். அவர்களில் மற்றொருவர் போலீஸ் அதிகாரி. மற்றவர்கள் நிலச்சுவான்கள். சிவப்ரகாசரின் இங்கிதமற்ற கேள்விகளுக்கு வன்யா அளித்த பதிலினல், அவர்கள் வன்யாவைப் பற்றி தெரிந்து கொள்வதில் ஆர்வமுடையவர்கள் போல் காண்பித்துக்கொள்வதைத் தவிர்க்க விரும்பினர். மேலும் ஹிந்து மதத்தின்படி ஒழுகுபவரிடையே மிகுதியாகக் காணப்படுவது போல், உலக ரீதியில் கேட்கப்படும் கேள்விகளுக்கு தத்துவ அடிப்படையில் பதில்கள் அளித்தாலும், துருவி கேள்வி கேட்கும் அன்பரும் முழு திருப்தி அடைகிரார். எப்படியிருப்பினும் ஒரு சந்நியாசியை தர்சனம் செய்வதிலிருந்து வேறு எதை ஒருவன் எதிர்பார்க்கிருன்? தன் அன்ருட வாழ்க்கைப் பிரச்னைகளில் இருந்து விடுதலை பெற்று, வாழ்வின் ரகச்யமாக இருக்கும் - ஒவ்வொரு ஆர்வம் படைத்த ஹிந்துவின் மனதைக் கவரும் - ஆத்ம தத்வத்தை உணர்வதைத் தவிர. ஒவ்வொருவராலும் மிகுந்த பக்தியுடன் போற்றப்பட்ட குருநாதரைப் பற்றிய சம்பாஷணையில்தான் பெரும்பாலான நேரம் செலவிடப்பட்டது.

ஒருவர் நினைவுகூர்ந்து மொழிந்தார்: "நான் சிறுவனாயிருக்கும்போது தெய்வநம்பிக்கை, சட்டத்திற்கு மதிப்பு முதலியவைகளற்று பெற்றோர்களுக்குக் கவலை கொடுப்பவனாக இருந்தேன். குறிப்பாக சாதுக்களை சோம்பேறிகள் என்று கருதி நிந்தித்தேன்... ஆனால் இப்போது உயர் படிப்பு, ஏராளமான சொத்து, அந்தஸ்து இவைகள் எனக்கு இருந்தாலும் அவர்களுக்கு முன் நமஸ்காரம் செய்து பணிவிடை செய்வதைக் காட்டிலும் சந்தோஷமோ, பெருமையோ வேறு கிடையாது. என்னுடைய மனைவி குழந்தைகளுடன் நான் இங்கு வந்து சில நிமிடங்கள் தங்கி ஸ்ரீ ஞானானந்தரின் அருளைப் பெறாமல் ஒரு நாளும் கழிவதில்லை. இந்த மாற்றம் ஏற்பட்டது முழுமையாக அவரால் தான். அவர் மூலமாகக் கடவுளை மறுபடியும் கண்டுகொண்டேன்."

மற்றொருவர் தொடர்ந்தார்: "அவருடைய அருள் நம்மீது எப்போதும் இருக்கிறது. இதற்கான அத்தாட்சி அடிக்கடி நேருகிறது. ஒருநாள் என் குழந்தை இறக்கும் தருவாயில் இருந்தது. ஸ்வாமிகளிடமிருந்து பல தடவை உதவி கோரினேன். இருப்பினும் நோய் தொடர்ந்தது. மேலும் அதிகரித்தது. முடிவில் சில நிமிடங்களில் உயிர் பிரியும் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. என்னால் ஒன்றும் செய்யமுடியாத நிலை ஏற்படவே, கார் எடுத்துக்கொண்டு ஸ்வாமிகளிடம் விரைந்துவந்தேன். சோதனையைத் தாங்குவதற்கு சிறிது சக்தியாவது அவர் எனக்குத் தருவார். வந்ததும், அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, அழுதுகொண்டு என் பையனுக்கு நேர்ந்த நிலையைக் கூறினேன். என்னை எழுப்பி அன்பு பொழியும் பார்வையுடன் - நீங்கள் இப்போது கவனித் தீரே அதே பார்வையுடன் - என்னை நோக்கினார். பிறகு கூறினார்: 'உன்னுடைய குழந்தையா? ஏன் நீ இவ்வாறு கவலைப்படுகிறாய்? அவன் இப்போது சுகமாக இருக்கிறான்'. அதை என்னால் நம்புவதற்கு முடியவில்லை. ஆனால் அவ்வாறே வற்புறுத்திக் கூறி என்னை உடனே வீடு திரும்புமாறு பணித்தார். நான் திரும்பி வந்ததும் குழந்தை ஆபத்து நிலையிலிருந்து மீண்டிருந்தது."

ஸ்வாமிகளின் முன்வாழ்க்கை சம்பவங்கள் ஒரு புதிராக ஒவ்வொருவருக்கும் இருந்தன. சித்தலிங்கமடம் என்ற கிராமத்திற்கு முப்பது வருடங்களுக்கு முன்பு வந்தார் என்பதுதான் தீர்மானமான நிகழ்ச்சியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. முதலில் அங்கு கோயிலில் தங்கி வெளியில் உணவை யாசித்து வந்தார். அச்சமயம் அவருக்கு பாதங்களைத் தொடும் அளவிற்கு நம்பமுடியாத நீண்ட சடை இருந்தது. அதைச் சுருட்டி தலைமீதும் தரித்துக் கொண்டிருப்பார். கால்களுக்கிடையே அணியும் கௌபீனம் மட்டுமே அவருடைய ஆடையாக இருந்தது. பிறகு மற்றவர்கள் அவரை ஒரு கொட்டகையில் வசிக்கக் கோரினார்கள்; பின்பு அவருக்கு ஒரு வீடும் அளிக்கப்பட்டது. அச்சமயத்திலிருந்து அவர் தன் உணவுக்காக யாசிக்க வேண்டியதாக இல்லை; ஏனெனில் யாராவது அவருடைய தேவையை கவனித்துக்கொள்ள இருந்தனர். மௌனத்தைக் கலைத்துவிட்டு மக்களின் கேள்விகளுக்கு விடையளிக்க

ஆரம்பித்தார். ஒருநாள் முடியை க்ஷவரம் செய்துகொண்டு நீண்ட துணியை அணிந்தார். அவருடைய புகழ் ஜில்லா முழுவதும் பரவியது. அவரிடமிருந்து ஆலோசனை பெறவும், அவருடைய ஆசியை வேண்டவும், வெகு தூரத்திலி ருந்தும் மக்கள் வந்தனர்.

சித்தலிங்கமடத்திற்கு வருவதற்கு முன்பு எங்கிருந்தார் ? அதற்கு முன் சேலத்திற்கு சென்றார். அங்கு அவருக்காக ஒரு பெரிய ஆஸ்ரமம் கட்டப் பட்டிருந்தது. அது அச்சமயம் காலியாக இருந்தது. நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்த தன் பக்தர்களைத் திருப்தி செய்விப்பதற்காக அவர், வாய்ப்பு ஏற்பட்டதும், அவ்விடம் சென்றார். அவ்விடத்தில் இருபது அல்லது முப்பது வருடங்கள் தங்கியிருந்ததாக அவர்கள் கூறினர். வேலநத்தத்திற்கு (சேலம்) செல்லும் முன் கோயம்புத்தூர் அருகே உள்ள வண்ணந்தூர் என்ற இடத்தில் அவர் தங்கியிருந்ததாகவும் கூறப்பட்டது. கிருஷ்ணபுரி, பவானி, இடப்பாடி, ஆனங்கூர் முதலிய இடங்களிலும் அவருடைய பெயரில் ஆஸ்ரமங்கள் இருந் தன. வழக்கமாக அவர் ஒரு ஸ்தலத்திற்கு வந்து தங்கி ப்ரார்த்தனையிலும் த்யானத்திலும் ஈடுபட்டுக் கொண்டிருப்பார் எனத் தெரிகிறது. பிறகு, நாளடைவில் அவர் புகழ் பரவி அவருக்காக ஒரு ஆஸ்ரமமும் தோன்றிவிடும். யாராவது ஒருவர் ஆத்மீகஞானத்தில் பயிற்சி நாடி வந்தால் அவருக்கு போதனைகள் செய்துகொண்டிருப்பார். ஒரு நாள் திடீரென மறைந்து விடு வார். சேலத்தருகே உள்ள வேலநத்தம் என்ற ஆஸ்ரமத்தில் 1872 ஆம் வருடத்தை சார்ந்த ஒரு காலண்டர் உள்ளது. இத்தகவல்கள் எல்லாவற்றையும் அளித்த ப்ராம்மணர் முடிவாகக் கூறினார்: "ஸ்வாமி நம்முடன் தங்கியிருக்க விரும்பும் வரை, நாம் உத்தமமான வழியில் பயன்படுத்திக் கொள்வோம். அவருக்கு அதிருப்தி தரக்கூடியதையோ, அவரை வேறு இடத்திற்கு செல்லும் படியாக தூண்டக்கூடியதையோ நாம் செய்யாமலிருக்க முயலவேண்டும்."

ஸ்ரீ ஞானானந்தரோ தன்னுடைய முந்திய வாழ்வைப் பற்றி பேசாமல், மௌனமாக அக்கறையற்று இருப்பர். யாராவது சரியான தகவல் வேண்டு மென்று கேட்டால் பின்பு தெரிவிப்பதாக ஒவ்வொரு தடவையும் கூறுவார். யாராவது ஒருவர் சரியான பிறந்ததேதி தெரிவிக்க வேண்டுமென வற்புறுத்திக் கேட்டுக்கொண்டால் 'அது வெகு காலத்திற்கு முன்பல்லவா நிகழ்ந்தது - வெகுவெகு நாட்களுக்கு முன்' என்று மொழிவார். அவர் பிறந்த ஊர் கர்நாடக தேசத்தில் உள்ள மங்களகிரி என்று தெரிந்தது - அல்லது இவ்வாறு கருதப்பட்டது. அவருடைய தந்தை வெங்கட்பதிராவ் என்பவர் - தாய் சாந்த சிக்லாபாய். தன்னையடித்த மூத்த சகோதரனிடம் மனவருத்தம் கொண்டு தன்னுடைய பதினொன்று அல்லது பன்னிரண்டாவது வயதில் வீட்டைவிட்டுச் சென்றார். ஒரு ஞானியைக் கண்டு அவருடன் ஹிமாலயத்திற்குச் சென்றார். வேலநத்தத்திற்கு முதன் முறையாக வந்துவிட்டு பின்பு காஷ்மீர்

சென்ருர் என்று மற்ெருருவர் கூறினுர். ஆனுல் காஷ்மீரில் தங்கியிருந்தது, அவருடைய வாழ்விலே முக்கியமான கட்டம் என்பது தெரிந்தது. ஞாபகத்தினுல் தூண்டப்பட்டு உணர்ச்சிக்கு வசப்படாமல் அதைப்பற்றி அவரால் பேச முடியாது; ஆனுல் அங்கு என்ன நிகழ்ந்தது என்பதைப்பற்றி விவரங்கள் தெரிவித்ததில்லே. அதன்பிறகு, பிரிட்டிஷ் ராஜ்யமாக இருந்த காலத்தில் சாதுக்கள் அடிக்கடி பல இடங்களுக்கும் செல்வதுபோல் அவர் இந்தியா, சிலோன், பர்மா முதலிய தேசங்களுக்கு கால்நடையாகச் சென்ருர். மகாராஷ்டிரத்தைச் சார்ந்த சாய்பாபா என்ற மகானே தரிசித்திருப்பதாக வன்யாவிடம் ஒருநாள் தெரிவித்தார். இதைத் தவிர தமிழ் நாட்டின் எல்லா பாகங்களேப் பற்றியும் அவருக்கு நுணுக்கமான அறிவு இருந்தது.

சுமார் நாற்பது வருஷங்கள் பரிவ்ராஜகராகவும், ஏகாந்தத்தில் தவம் செய்துகொண்டுமிருந்த பிறகுதான் அவர் சந்நியாஸ ஆஸ்ரமத்தை மேற்கொண்டிருக்க வேண்டும் என்று நன்கு தெரிகிறது. தனக்கு ஞானுேபதேசம் அளித்த குருவின் பெயரைக் கூறினுர். இவ்வாறு அவர் சார்ந்த வம்சத்தை - யார் யாருடைய குரு - என்ற விபரங்களேத் தரும் பட்டியலே வரைந்துவிட முடியும். அவருடைய சிஷ்யர்கள் அதை அச்சுப்படுத்தியிருந்தனர். அவருடைய ஜெயந்தியின் போது, தமிழிலும், சம்ஸ்க்ருதத்திலும், அளிக்கப்பட்ட பாமாலேகளுடன் தர்சன அறையின் சுவரில் அவைகள் கண்ணுடி போட்டுத் தொங்கவிடப்பட்டிருந்தன.

அவருடைய வயது என்ன ? அவர் நூற்றிருபது வயதுடையவர் என்று பெரும்பாலோர் கூறினர். சிலர் க்ரஹங்களின் நிலேயை வைத்து கணக்கு செய்து நூற்றைம்பத்து மூன்று என்று தீர்மானித்தனர். ஆனுல் இவ்வளவு சுறுசுறுப்புடன், வேகமாக நடந்துகொண்டு, தனக்குத் தேவையான நீரை கிணற்றிலிருந்து தானே இறைத்துக்கொண்டிருக்கும் இவர் இவ்வளவு வயதானவர் என்று ஒருவர் எவ்வாறு நம்ப இயலும்? அவர் பூரண ஆரோக்யத்துடன் இருந்தார்; ஆஸ்ரமத்திலுள்ள ஒவ்வொரு நடவடிக்கையையும் தானே கவனித்து வந்தார்; சிறு கட்டிட வேலே நடந்து வந்தால் அதை மேற்பார்வை செய்து வந்தார். அவருடைய முகம் வழவழப்பாகவும் சுருக்கம் சிறிதும் அற்று இருந்தது. அவரைப் பார்த்தால், அவர் எழுபது வயதுடையவர் என்று கூட நம்புவது கடினம்.

அப்படியாகில் இவ்வளவு சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்ருக இவ்வளவு குறுகிய காலத்தில் எவ்வாறு நிகழ்ந்திருக்க முடியும்? ஆகையால், பின்பு ஆராய்ச்சி செய்து கண்டதுபோல், இவருடைய பக்தர்கள் தங்கள் குருநாதரின் பெருமையை உயர்த்திக் காட்டுவதற்காக, அவர் பல இடங்களில் செய்த சஞ்சாரங்களே நெடுங்காலமாக நடந்ததாகக் கருதுவதும், ஒரே சமயத்தில் நடைபெற்றதாகக் கொள்ளாமல் ஒன்றன்பின் ஒன்ருக நடந்ததாகக் கருதுவதும்தான் பிசகான கணக்குக் காரணம் எனத்தெரிகிறது.

அவர்களில் ஒருவர், இத்தருணத்தில், தமிழில் அச்சடித்திருந்த காகிதத்தை நீட்டினுர். அது 1814 ஆம் வருஷம், ஜனவரி மாதம் 30-ந்தேதி ஸ்ரீ ஞானனந்தர் உலகத்தில் தோன்றினுர் என்று தெரிவித்தது. யார் அதை எழுதியவர்? அப்போது பெங்களூரில் வாழ்ந்து கொண்டிருந்த ஒரு பக்தை. ஸ்வாமியே எல்லாவற்றையும் அந்த மாதுவிற்கு தெரிவித்தார். அவர் ஒரு நாள் தன் பூஜை அறையில் த்யானத்தில் இருக்கும்போது ஸ்வாமியே தன் சரிதம் முழுவதையும் தானே விவரித்தார். ஈசனின் குமரனுக, தமிழ்ப் பண் பாட்டின் சிங்காரச் செல்வமாகக் கருதப்பட்ட திருமுருகனே அவளுக்குத் தோற்றம் அளித்தான்; அவள் மனதில் இதைப்பற்றி ஒரு சந்தேகமும் எழவில்லை. ஸ்ரீ ஞானனந்தரும் முருகனின் அவதாரம்! பக்தர்களுக்கு ஆறுதலளிக்கவும், ரக்ஷிக்கவும் மனிதனுகத் தோன்றினுன். ஒரு தினம், யாரோ ஒருவர் அந்த தீவிர பக்திகொண்ட மாதைக் கண்டு 'சில சரித்திர சம்பவங்கள் அவள் கணக்கோடு முரண்பாடுடையதாக இருக்கின்றனவே' என்று கூறியபோது, மிகவும் தன்னம்பிக்கையுள்ள அந்த மாது தனக்கு 'அவைகளைக் காட்டிலும் ஆதாரமான இடத்திலிருந்து தகவல்கள் கிடைத்தன' என்று கூறிவிட்டாள். உடனே முருகன் தாஸ் என்பவர் பேசலானுர்:

"ஸ்ரீ குருநாதர் குறைந்தது 200 வயதுள்ளவராக இருக்கவேண்டும். பெரம்பலூர் காட்டை ஒட்டி உள்ள ஆனங்கூர் என்ற கிராமத்தில் உள்ள தனது ஆஸ்ரமத்தின் அருகில் தான் நிஷ்டையில் இருக்கும்போது, ஒரு சமயம், நாவலு என்ற ராஜகுமாரன் மான் வேட்டையாட அவ்விடம் வரும் போது தன்னைக்கண்டு பயந்து ஓடியதாக அவரே கூறி நான் கேட்டிருக்கிறேன். முந்திய நூற்றுண்டில்தான் அவர் பிறந்திருந்தாராளுல் இச்சம்பவம் எவ்வாறு நிகழக்கூடும்? சிறுவனுக ரமணர் வீட்டைவிட்டு கிளம்பி அரகண்டநல்லூரை அடைந்து இரவை அங்கு கழிக்கும்போதே ஞானனந்தர் இப் பெண்ணை நதியின் கரையில் இருந்தார். அவரல்லவோ அச்சிறுவனுக்கு ஆகாரமளித்து திருவண்ணுமலைக்கு அனுப்பிவைத்தார்!"

"உண்மையிலேயே, அவர் சங்ககாலப் புலவரையும் திருவள்ளுவரின் சகோதரியுமான ஒளவையாரையும் சந்தித்திருக்கிறுர்!"

எந்த நிலையில் நாம் இப்போது இயங்கிக்கொண்டிருக்கிறேம்? ஒரு ஞானி நம்முடன் பேசும்போது எந்த நிலையில் அவர் நம்முடன் உரையாடுகிறுர் என்று ஒருபோதாவது நாம் அறிகிறேமா? ஒரு தீர்க்கதரிசியின் எதிர்காலத்திய நோட்டமும், ஒரு ஞானியின் பழங்காலத்திய நினைவுகளும், நாம் காணும் உலக சம்பவங்களின் அளவுகோலுக்கு உட்படுத்த முடியாததாகும். அவர் ஒரே மெய்ப்பொருளான ஆத்ம ஸ்வரூபத்தில் ஐக்கியமடைந்த நிலையில் பேசுகிருரா? மக்கள் புரிந்துகொள்வதற்காக நடைமுறைச் சொற்களை உப யோகித்துப் பேசுகிருரா? ஆத்மா பிறப்பற்றது, எங்கும் வியாபித்து தேச

காலங்களைக் கடந்து நிற்கிறது. இந்த தனித்த உடலை - எந்த உடலை குறிப்பிட்ட ஞானியினுடையது என்று மற்றவர்கள் கருதுகின்றனரோ - இதை, எவ்வாறு மற்ற உலக படைப்பில் நாமரூபம் தரித்த பொருளை - உயிருள்ள அல்லது உயிரற்ற பொருளை - தன்னுடையதாக ஞானி பாவிப்பதில்லையோ, அவ்வாறே தன்னுடையதாகக் கருதுவதில்லை. ஞானி என்ற சொல்லே மாறுன கருத்தைத் தரக்கூடியதாக இல்லையா? பூரணமான ஆத்மாவின் அடிப்படையில் பார்க்கும்போது ஞானி என்ற சொல்லால் ஒருவரைக் குறித்து தனிப்படுத்துவது, - ஞானியை அஞ்ஞானி என்று கருதப்படுபவரிலிருந்து பிரித்துக் காட்டுவது - இறுதியில் உண்மைக்கு ஒவ்வாததாக அல்லவா இருக்கிறது!

ஆத்மாவை உணர்ந்த ஞானி உண்மையில் எங்கும் எப்போதும் இருந்துகொண்டிருக்கிறுன். அவனேதான் சிறுவனுன ரமணனுக அருணுசலத்தை நோக்கி விரைகிறுன்; அவனேதான் அச் சிறுவனுக்கு வழியில் உணவளித்த பூஜகராகவும் இருக்கிறுன்; ராஜாக்கள் காலத்தில் காட்டில் தவம் புரிந்தவனும் அவனே! ஔவையாரைச் சந்தித்த சந்நியாசியும் அவனே! ஜனகராஜனுக்கு உபநிஷத் உணர்த்தும் சைதன்ய ரூபத்தை உபதேசித்த யாக்ஞவல்யரும் அவனே! பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வேதங்களைக் கண்ட ரிஷியும் அவனே! அவனே ஆலமரத்தின் அடியில் அமர்ந்திருந்து, புலித்தோலை உடுத்தி, தனக்கு இடையூறு விளைவிக்க முயன்ற மன்மதனை நோக்கி மூன்ருவது கண்ணின் பார்வையை ஜாடையாகத் திருப்பிய சிவனல்லவா? அவனே மற்றொரு தருணம், பிரம்மாவின் நான்கு குமாரர்களுக்கும் அரிய தத்வ ஞானத்தை மௌன மொழியில் அறிவுறுத்திய தக்ஷிணமூர்த்தியல்லவா? அவனே நாமரூபமற்று, பிறப்பற்று, எந்த ஒரு தோற்றத்திலும் வியாபித்து, புதிது புதிதான பிறவியில் காட்சி அளிக்கும் தத்துவம்!

அச்சமயம் வன்யா கூறினுர்: "ஸ்வாமிகளுடைய வயது ஐம்பதோ, இருநூறே, நானூறே - இதைத் தெரிந்துகொள்ளுதலால் நமக்கு என்ன பயன்? அதைத் தெரிந்துகொள்வது நமக்கு மோக்ஷத்தையோ, பரம்பொருளின் தர்சனத்தையோ தரப்போகிறதா? அவர் நேற்று எங்கு இருந்தார்? நாளைக்கு எங்கிருக்கப் போகிறுர்? அறுபது வருடங்களுக்கு முன்பு எங்கிருந்தார்? நூறு வருடங்களுக்குப் பின்பு எங்கிருக்கப் போகிறுர் என்பதை ஏன் தெரிந்துகொள்ள முயலவேண்டும்? நடைமுறை நோக்கோடு நாம் பேசினுலும், அவர் நம்முன் இன்றைக்கு, இத்தருணத்தில் - வீடு பேறை அளிக்கும் அரிய உபதேசத்தை, ஆன்மாவுக்கு இறைவன் விடும் அழைப்பைத் தெரிவிக்கும் - குருபிராணுக அல்லவா காட்சியளிக்கிறுர்! நமக்கு என்ன அறிவுரைகள் வழங்குகிறுர், எவ்வாறு நம் ஹ்ருதயத்தைத் தூண்டி நடத்துகிறுர் என்பதல்லவோ மிகவும் முக்கியமானதொன்ருகும். நாம் இப்போது அனுபவித்துக்கொண்டிருக்கும் தருணத்தைத் தவிர, மற்ற ரகசியத்தை மறைப்பது, அவர் ஒரு அரிய போதனையை - எந்த நேரத்தில் ஆன்ம உணர்வோடு இருக்கிறேமோ அதுதான்

உண்மையான நேரம் என்ற உண்மையை - நமக்குப் புகட்டுவதற்காகக் கடைப் பிடிக்கிறார்.

உடனே ஸ்தோத்ரங்களின் சப்தம் அவர்கள் காதுகளை எட்டியது. வழக்கம்போல் ஒவ்வொரு மாலையிலும் தர்சன அறையில் கூறுவது போன்று, சில ப்ராம்மணர்கள் விஷ்ணுவின் ஆயிர நாமங்களைக் கொண்ட ஸ்தோத் ரத்தை உச்சரிக்கத் தொடங்கினர். குருநாதர் மறுபடியும் அவ்வறையில் வந்து அமர்ந்திருக்கிறார் என்று தெரிந்துகொண்டு விரைவில் எல்லோரும் அவரை சூழ்ந்து உட்கார்ந்துகொண்டனர்.

அந்த ஸ்தோத்ரம் முடிவு பெற்றதும், வன்யா அவரை அணுகிக் கூறினார்.

"ஸ்வாமிஜீ, நான் இன்று காலை ஆவலால் தூண்டப்பட்டு இங்கு வந்தேன். ஆனால் என்ன நிகழ்ந்தது? பல வருடங்களாக திருவண்ணாமலைக்கு வருகிறேன்; உங்களருகிலேயே பல மாதங்கள் தங்குகிறேன். ஆனால் இந்த வாரத்திற்கு முன்பு உங்களுடைய நாமத்தைக் கூட கேட்டதில்லையே! எவ் வாறு இன்றைக்கு நிகழ்ந்த சம்பவம் இவ்வளவு விரைவில் நிகழக்கூடும்?"

"அது நிகழ்வதற்குரிய பக்குவமான காலம் வந்துவிட்டது" என்று எளிமையாக பதிலளித்துவிட்டு பின்பு குருநாதர் கூறினார்:

"திரும்பி வருவோம். அருகில் இருப்போம். முக்கியமாக த்யானத்தில் ஈடுபட உங்களுக்கு நேரம் கிடைக்கும். உங்களுக்கு ஒருவரும் தொல்லை கொடுக்கமாட்டார். உணவைப்பற்றியோ மற்ற எதையும் பற்றியோ நீங்கள் கவலைகொள்ள வேண்டாம். நமது சம்பாஷணைகள் நீங்கலாக நீங்கள் மௌனத்தில் இருக்கலாம். சில மாதங்களில், பொங்கல் பண்டிகை கடந்த பிறகு, மீண்டும் வாருங்கள். உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்போம்."

# 4. அக்ரஹாரம்

அடுத்த ஆண்டில் வெய்யில் காலம் தொடங்கியதும் வன்யா தபோ வனத்திற்கு ஏற்கனவே தீர்மானித்தபடி வந்தார் - இச்சமயம் தனிமையில் வந்தார்.

ஸ்ரீ ஞானானந்தர் ஒரு ஞாயிறன்று இவரை எதிர்பார்ப்பதாகவும், சித்த லிங்கமடத்தில் தன் ஆஸ்ரமத்தில், சில நாட்கள் தங்கிவிட்டு, திருக்கோயி லூருக்கு அன்றைய தினமே திரும்பிவிடுவதாகவும் தெரிவித்திருந்தார். ஆகையால் வன்யா அன்றைய பிற்பகல் ஆஸ்ரமம் வந்தடைந்தார். அருகிலுள்ள

குச்சிப்பாளையம் என்ற கிராமத்தைச் சேர்ந்த இளைஞன் செடிகளுக்கும் மரங்களுக்கும் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தான். அவன் அவரை அடையாளம் தெரிந்துகொண்டு கூறினான்:

"ஸ்வாமிஜீ நாளை காலைக்கு முன் திரும்பமாட்டார். உங்களுக்காக தனித்து ஒதுக்கப்பட்டு இருக்கும் சிறிய அறையில் நீங்கள் தங்கிக் கொண்டிருக்கலாம்."

ஸ்வாமிக்கு வழக்கப்படி சமர்ப்பிப்பதற்காக வன்யா சில பழங்கள் எடுத்துக்கொண்டு வந்திருந்தார். அவருடைய இரவு உணவுக்கு அவை போதுமானதாக இருந்தன. மேலும் மறுநாள் வரை வைத்திருந்தால் அவைகள் கெட்டுவிடும். மானசீகமாக குருநாதருக்கு அர்ப்பணித்துவிட்டிருந்ததால் அவைகள் ஒரு ப்ரசாதமல்லவா?

திங்கள் கிழமை காலை சென்றது. ஸ்ரீ ஞானானந்தர் வருவதற்குரிய அறிகுறி ஒன்றும் இல்லை. காலை முழுவதும் ஒரு ப்ராணி கூட ஆஸ்ரமத்திற்குள் நுழையவில்லை.

பாதிக்கப்படுபவர் யாராயிருந்தாலும் சரி, ஸ்வாமிகளின் போக்குவரவுகள் ஒருவரும் எதிர்பாராத வண்ணம் இருக்கும் என்று வன்யா பின்புதான் தெரிந்துகொள்ள வேண்டியவராக இருந்தார். ஒரு ஞானியின் சங்கல்பங்கள் ஒருபோதும் தீர்கமான ஆலோசனைகளினால் தடைபடக்கூடியவைகள் அல்ல. அவரும் எவ்வாறு ஒரு கட்டுப்பாட்டுக்குட்பட இயலும்? அந்த நேரத்தில் தோன்றும் உள்ள எழுச்சியின்படி நடக்கிறார். அவரைத் தூண்டி நடத்தும் சக்தி எங்கிருந்து அவரை அழைத்துவரும், எங்கு அவரை அழைத்துச் செல்லும் என்று யார் முன்கூற இயலும்? உதாரணமாக ஏதாவது ஒரு ப்ரயாணத்தை உத்தேசித்து ஸ்ரீ ஞானானந்தர் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்திருப்பார். குறிப்பிட்ட தருணத்தில் ஸ்வாமியை தேவையான இடத்திற்கு அழைத்துச்செல்ல ஒரு பக்தர் அவசர வேலைகளை விட்டுவிட்டு தன்னுடைய நகரத்திலிருந்து காருடன் வருவார். வேறு வேலையை கவனித்துக்கொண்டு இருப்பதினாலோ அல்லது எதிர்பாராது வந்த அன்பருடன் பேசிக்கொண்டிருப்பதினாலோ, குருநாதர் தன் பிரயாணத்தை மறுநாள் காலைக்கு ஒத்திப்போடுவார். வந்திருந்த பக்தர் அமைதியாக நமஸ்கரித்து விட்டு உத்தரவு பெற்று நகரத்திற்கு திரும்பி விடுவார். தன் வீட்டை அடைந்த உடனேயே அவசரமாக வரும்படி அழைப்பை ஒரு நபர் ஏந்தி வந்துவிடுவார். ஒரு மறுமொழியும் கூறாமல், இவ்வாறு நடப்பதற்கு தகுந்த காரணத்தையும், சமாதானத்தையும் தேடாமல் அந்த பக்தர் உடனே திரும்பி வந்து குருநாதரின் கட்டளையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்.

இந்நிகழ்ச்சியை சில நாட்களுக்குப் பின் வன்யாவிற்கு உரைத்த ப்ராம்மணர் முடிவில் சொன்னார்: "நமக்கு 'எது நல்லது' என்று அவருக்கு

நம்மைவிட நன்கு தெரியும். நாம் செய்யும் சிறிய உதவியை அவர் ஏற்றுக் கொள்வதனுல் நாம் ஒரு பெரிய அதிருஷ்டசாலி என்று உணரவேண்டும்.''

முற்பகலும் கழிந்தது. குருநாதரோ வேறு அன்பர் யாருமோ வரவில்லை. வன்யா பசியை உணர ஆரம்பித்தார். பாதை வழியாக சென்ருல் சற்று தொலைவிலேயே திருக்கோயிலூர் இருந்தது; அந்நேரத்தில் மணல் மிக சூட்டு டன் இருந்ததினுல் ஆற்றின மூலம் குறுக்கு வழியாக செல்ல முடியாது. அருகிலுள்ள குடிசைப் பகுதிகளில் உணவு வாங்க முடியாது. 'ஒரு உண்மையான சாதுவாக ஒருநாள் நான் வாழ்வதற்கு இன்று நல்ல தருணம் கிடைத்திருக்கிறது - என்னுடைய ஆகாரத்திற்காக நான் சென்று பிக்ஷை கேட்பதற்கு' என்று வன்யா கருதினுர். சில வருடங்களுக்கு முன்பு, ஒருசமயம் இவ்வாறு செயல்பட புறப்பட்டார். முதலில் ரமணர் சிறுவயதில் தனித்து வெகுகாலம் த்யானம் செய்துவந்த பெரிய அருணுசலேஸ்வரர் ஆலயத்தில் இருந்த, பாதாள லிங்கமுள்ள குகையில் அமைதியாக ஆத்ம சிந்தனையில் இருப்பதற்காக அவர் சென்ருர். மலையில் மஹரிஷியுடன் சகாவாக இருந்து தற்போது ஆலயத்தில் இருந்த அருணுசலய்யர் என்ற ப்ராம்மணரின் யோசனையின் பேரில் கோவிலின் அருகே உள்ள மூன்று பாதைகளில் - எங்கு க்ருஹஸ்தர்கள் சந்தோஷமாகவே அன்னம் சாதுக்களுக்கு பிக்ஷையாக இடுவார்கள் என்ற நம்பிக்கை உண்டோ அங்கு - சென்ருர். ஆனுல் என்ன நேர்ந்தது? அவருடைய தைரியம் கைவிட்டது. ஒருவருடைய வீட்டையும் அணுகமுடியவில்லை. இச்சமயத்திலோ, அவர் முன்னைக் காட்டிலும் நம்பிக்கையுடன் இருந்தார். எந்த அக்ரஹாரத்தை நோக்கிச் சென்ருரோ அதைச் சார்ந்தவர்கள் பலரை அவர், தபோவனத்திற்கு முதல்தடவை வந்திருந்தபோது, கண்டிருக்கிருர். அவருடைய பிக்ஷை பாத்திரத்தை அவர்கள் கண்டிப்பாக நிரப்புவர். ஆதலால் ஒரு தண்டத்தையும் பிக்ஷை பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு, உச்சியில் சூரியன் தகித்துக் கொண்டிருந்ததால் தலைமீது ஒரு துணியை கட்டிக்கொண்டு, கிராமத்தை நோக்கி ஊக்கத்துடன் நடந்தார்.

அவர் நடந்து செல்லும்போதே அக்ரஹாரத்துக்கு - இதை 'அகரம்' என்று உள்ளூர்வாசிகள் அழைப்பர் - எது சரியான்வழி என்று இடையில் விசாரித்துக்கொண்டு சென்ருர். வழியில் சந்தித்த குடியானவர்களுடன் சிறு சம்பாஷணைகள் நடத்த இது காரணமாயிருந்தது. ஒருவன் அவருடனே சிறிது தூரம் நடந்து சென்று, தான் செல்லும் பாதை பிரிந்து செல்வதால், அவரை விட்டு பிரியும்போது கூறினுன்:

"ஸ்வாமி, ஒரு நிமிஷம் அன்புடன் தாமதிப்பீரா?"

"ஏன்?"

"அப்போது, நான் உங்களுக்கு நமஸ்காரம் செய்யமுடியும்." என்னுடைய அனுமதிக்கு தாமதிக்காமலே அவன் தரையில் விழுந்து நமஸ்காரம்

செய்தான். ஆஸ்திகனுக இருக்கும் ஒரு ஹிந்துவுக்கு சந்நியாசியைத் தரிசிப்பது என்பது ஒரு அருள் ப்ரசாதம். அவருக்கு நமஸ்காரம் செய்வது உலகத்தை படைத்த இறைவனுக்கு, ஹ்ருதயங்களில் உறைந்து ஆட்சி செய்யும் ஈசனுக்கு செய்யும் அஞ்சலியாகும். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் ஐரோப்பாவைச் சேர்ந்தவன் அந்த அபூர்வ மனிதனை போட்டோ எடுப்பார். உண்மையில், இந்த சாதாரண மனிதர்களிடமிருந்து - எவர்களுக்காக ஏசுநாதர் தந்தைக்கு நன்றி செலுத்தினுரோ - அந்த எளிய ஜீவன்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளவேண்டியது நிறைய இருக்கிறதல்லவா ?

அதனுடைய தூய்மைத் தன்மையாலும், அங்குள்ள அமைதியாலும், அங்கு காணப்பட்ட கோயில்களாலும், சுலபமாக அடையாளம் கண்டுகொள்ளக் கூடிய அக்ரஹாரத்தை வன்யா விரைவில் கண்டார். எங்குமுள்ளதுபோல், அவருடைய வலப்பக்கம் சிவனுடைய கோயிலும் எதிர்முனையில், பாதையின் இறுதியில், பெருமாள் கோயிலும் இருந்தன.

சற்றும் எதிர்பாராத வகையில், வன்யாவிற்கு முன்னிருந்த தைரியம் குலைந்துவிட்டது. இருப்பினும் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு, தெருவின் இரு வரிசையிலுள்ள வீடுகளுக்கு நடுவில் மௌனமாக மெள்ள நடந்து சென்றுர். சில வீடுகளில் வாசற் கதவுகள் திறந்துதான் இருந்தன - கதவு மூடப்பட்டிருக்கும் வீடுகளில் ஒரு போதும் பிக்ஷை கேட்கக்கூடாது - ஆனுல் அவைகளை அணுகுவதற்கு போதிய தைரியம் அவரிடம் இல்லை. தனக்கு ஏற்கனவே அறிமுகமாயிருந்து, தன்னை அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய யாரையாவது பார்க்க முடியும் என்ற நம்பிக்கையோடு இருந்தார். ஆனுல் தெரு காலியாக இருந்தது. பின்பு அவர் அறிந்துகொண்டதுபோல், அங்குள்ள ப்ராம்மணர்கள் வழக்கமாக காலை 10 மணி அளவில் உணவு அருந்தி விடுவர். ஆகையால் இச்சமயம் அவர்கள் சற்று ஓய்வுக்காக உறங்கும் நேரமாகும்.

இவ்வாருக அவர் அக்ரஹாரத் தெருவின் மறு எல்லையை அடைந்தார். தெருவிலுள்ள புழுதி அவருடைய பாதங்களை பொறுக்க "முடியாதபடி சுட்டு விட்டது. ஆகையால் பெருமாள் கோயிலின் நிழலில் ஒரு நிமிடம் தங்கி இளைப்பாற நினைத்தார். ஆனுல் அக்கோயிலின் மண்டபமும் மூடிக்கிடந்தது. சற்று தூரத்தில் ஒரு நீரோடையோ குளமோ இருப்பதுபோல் தோன்றிற்று. மிகவும் அருவருக்கத் தகுந்த ஆபாசத்துடன் கூடிய குடிசைகளின் வழியே அதை அடைந்தார். அங்கு மரங்களோ சுத்தமான ஜலமோ இல்லாமலிருந்தது வருத்தத்தைத் தரக்கூடிய விஷயம்தான். சென்ற வழியே அவர் திரும்பி வர நேர்ந்தது. அக்ரஹாரத் தெருவின் வழியே மறுபடியும் செல்லவேண்டியிருந்தது - ஆனுல் இச்சமயம் எதிர்புறத்திலிருந்து நடந்தார். இந்நிலையில் அவர் உபவாசமிருப்பதற்கு நிச்சயித்தார். அம்முடிவிற்கு பொருத்தமான காரணங்கள் இருப்பதையும் கண்டுகொண்டார். மேலும் குருநாதர் மாலையில்

வந்துவிடமாட்டாரா? இரவில் நல்ல ஆகாரம் கிடைக்கும். மேலும் பக்தர்கள் அவரை வரவேற்பதற்காக கொண்டுவரும் பழங்கள் பக்ஷணங்கள் வேறு...

தன் சிந்தனைகளில் இந்த கட்டத்தை வன்யா அடைந்தார்; அப்போது தன்னை நோக்கி வேகமாக வரும் மனிதர் தன்னிடம் ஆங்கிலத்தில் மொழிவதைக் கேட்டார். "என்னுடன் வாருங்கள், கோயிலின் பூஜகர் உங்களைக் கூப்பிடுகிறார்."

வன்யா பொறுமையாக அவரை சுமார் ஐம்பது அடி தூரம் பின் தொடர்ந்து சென்றார். அவருக்கு வழிகாட்டியான வெங்கடேஷ் மெள்ளமாக மந்திரம் உச்சரித்துக் கொண்டே சென்றார். வீடுகளைக் கடந்து சென்றார். விருந்தளிப்பவர் வன்யாவை சிவன் கோயிலுக்கு அழைத்துச்சென்று கொண்டிருந்தார். கதவு முழுவதும் திறக்கப்பட்டது. பூஜகர் வாசற்படிக்கு வந்து நின்றார். ஒரு வார்த்தையும் பேசாமல் ஒரு தாமிர பாத்திரத்திலிருந்து வன்யாவின் புழுதி படிந்த பாதங்களில் நீரைக் கொட்டினர் - இந்தச் சடங்கு அவருடைய வழக்கமாக இருந்தது. சில துளிகள் தன் உள்ளங்கைகளில் ஏந்தி, அவைகளால் கண்களைத் துடைத்துக்கொண்டு தரையில் படுத்து நமஸ்காரம் செய்தார்.

இவ்வாறு வன்யா சிவன் கோயிலுக்குள் சென்றார். பூஜகர் அவரின் பெயரையோ, மதத்தையோ நாட்டையோ கேட்கவில்லை. அவர் அணிந்திருக்கும் ஆடை, அவர் உலகத்தில் இருந்தாலும், இறைவனுக்கு பூரணமாக அர்ப்பணித்துக் கொண்டவர்களில் ஒருவர் என்பதற்கு அடையாளமாக இருந்தது. அவரை வரவேற்பதின் மூலம் அவர்கள் இறைவனையே வரவேற்கிறார்கள். அவருக்கு அன்னம் அளிப்பது என்பது இறைவனுக்கு அன்னம் சமர்ப்பிப்பது போன்றதாகும் - அல்லது இறைவனிடமிருந்து முதலில் தான் பெற்றதை அவனுக்கே திரும்பப் படைப்பது போன்றதாகும். தினமும் சிவலிங்கத்தின் முன் நிவேதனமாகச் செய்வதை இப்போது அதைவிட ப்ரத்யக்ஷமான முறையில் செய்கிறார்கள். உண்மையில் சிவன் கோயில்களில் கடைப்பிடிக்கப்படும் பூஜைமுறைகள்படி சிவனடியார்களுக்கு அன்னமளிப்பது - மஹேஸ்வர பூஜை செய்வது - ஒப்பற்ற ஈசனுக்கு செய்யப்படும் நிவேதனம் என்று கூறப்படுறகிது.

ஆதலால், கிறிஸ்தவ பாதிரிகளின் மடங்களில் மட்டும்தான் விருந்தினரை கடவுளின் உருவமாக பாவித்து, கால் கழுவி, அவர்கள் சந்நிதியில் வேத நூல்களை படிப்பது என்பது இல்லை. தெய்வத்தின் சாந்நித்யத்தை ஹ்ருதயத்தில் உணர்ந்தவர்களிடையே, தேசகாலங்களைக் கடந்து, இவ்வாறு அற்புதமான ஒற்றுமைகள் காணப்படுகின்றன. சைதன்யத்தின் சம்பந்தமில்லாமல் இந்த உலகப் படைப்பிலேயே ஒரு பொருளுமில்லை, ஹ்ருதயத்தின் எந்த நுண்ணிய இடமும் இல்லை, என்பதற்கு அத்தாட்சி தேவைப்படுமானுல், இது ஓர் அத்தாட்சி.

விருந்தினரை உபசரிக்கும் முறையில் இங்கும் வேத சாஸ்த்ரத்துக்கு ஒரு உரிய ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே, பரதேசிக்கு ஆசனம் அளித்து உட்காரச் செய்ததும், அழைத்து வந்த வழிகாட்டி அவர்முன் உட்கார்ந்து மந்திரங்கள் ஓதி வந்தார். வாஸ்தவமாக வெங்கடேஷ் பவித்ரமான வேத மந்த்ரங்களை எப்போதும் உச்சரித்துக்கொண்டே இருந்தார் - மற்ற ஆஸ்தீகர்கள் நீண்ட ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்களைக் கூறுவது போல.

பிறகு பூஜகர் வந்தார். கோயில் கிணற்றிலிருந்து கொண்டுவந்த ஜலத்தை தரையில் தெளித்து சுத்தம் செய்தார். ஒரு வாழை இலையைப் பரப்பி அதில் ஜலத்தைத் தெளித்து, பிறகு விருந்தினருக்காக ப்ரத்யேகமாக உபயோகிக்கப்படும் வெள்ளிப் பாத்திரத்தை இலையருகில் வைத்தார். இப்போது வன்யா செய்யவேண்டிய க்ரியைகளின் அம்சம் - அவர் ஜலத்தை இலையில் தெளித்துவிட்டு அதில் ப்ரணவத்தை எழுதினார். பூஜகரின் மனைவி அன்னம், மற்ற பதார்த்தங்களை பரிமாறினாள். அந்த மாது இவருடைய உள்ளங்கையில் விட்ட தீர்த்தத்தினால் அன்னத்தை ப்ரொக்ஷணம் செய்து பிறகு, பரிஷேசனம் செய்துவிட்டு மீதியிருந்த ஜலத்துளியை அருந்தினார்.

ஆகாரம் முடிந்ததும் கோயிலில் திருவிழாக்காலங்களில் உபயோகப் படுத்தப்படும் விரிப்பு கொண்டுவரப்பட்டது. இறைவனின் அடியார் அதில் அமருமாறு அழைக்கப்பட்டார். நல்ல மணம் பரப்பும் ஊதுவத்திகள் விபூதி சம்படத்தில் சொருகப்பட்டு அவர் முன் வைக்கப்பட்டன. உடனே, ஆடவர், பெண்டிர், குழந்தைகள் அவரை சூழ்ந்துகொண்டனர். ப்ராம்மணர்களின் வர்ணத்தைக் காட்டிலும் சிவந்த வர்ணத்தையுடைய இந்த புதிய சாதுவை அவர்கள் தரிசிக்க விரும்பினர். தரையில் நமஸ்காரம் செய்வது மூலம் தங்கள் பக்தியைத் தெரிவிக்கவும், ஒரு துளி விபூதியை அவரிடமிருந்து ப்ரசாதமாகப் பெறவும் விரும்பினர்.

அக்ரஹாரங்களில் உள்ளவர்களின் பக்தியிலும் தர்மத்திலும் நம்பிக்கை வைத்து, 'ஒரு பிடி அன்னம் அளிக்காமலிருக்க மாட்டார்கள்' என்று எண்ணி தான் அங்கு வந்ததாக வன்யா ஒரு சில வார்த்தைகளில் கூறினார். பிக்ஷை தருபவனும், உண்மையில் அந்த பிக்ஷையை பெறுபவனும் ஈச்வரன் அல்லவா? அடியார்களின் பக்தியைச் சோதிக்க ஈச்வரனே பிச்சைக்காரனாக பலமுறை வேஷம் தரித்து வந்ததில்லையா? பக்தரின் கரங்கள் மூலம் இறைவனே உணவைச் சமைத்து பரிமாறுகிறான். மற்றொரு பக்தரின் வாய் மூலம் அதை உண்கிறான். முடிவில் மனிதன் அருந்தும் உணவுமாக அவன் இருக்கிறான்.

"இன்றைக்கு கடவுள் அனுக்ரஹம் செய்வார் என்று நிச்சயமாக இருந்தேன்" என்று பூஜகரின் மனைவி கூறினாள். "இன்றைக்கு காலை எழுந்திருக்கும்போது கிழக்கில் பல்லி சொல்லிற்று. என் புருஷரிடம் சொன்னேன். இதோ நீங்கள் வந்துவிட்டீர்கள்."

சிறிது நேரம் சென்ற பின்பு தன்னை வரவேற்ற கைலாஸநாதர் என்ற பூஜகர், தன் எண்பது வயதான, பக்திக்குரிய தந்தையுடன் வந்து அக்கோயிலுக்குரிய மரியாதைகளை வன்யாவிற்கு செய்தார். மிகவும் புனிதத் தன்மை படைத்த இமயமலைச் சிகரமாகவும், ஒப்புமையற்ற இறைவனின் இருப்பிடமாகவும் இருக்கும் கைலாஸத்தில் விளங்கும் சிவனுக்காக அந்த அக்ரஹாரத்தில் உள்ள கோயில் எழுப்பப்பட்டிருந்தது. இச்சமயம் அந்த கோயிலின் பூஜகரும் அந்த நாமத்தை உடையவராக இருந்தார். உலகப் படைப்புக்காக விளங்கும் ஈச்வரனின் ஒப்பற்ற சக்தி - மனதிற்கு எட்டாத மகிமை பொருந்தியது - காமாக்ஷி அம்மன் என்ற பெயரால் அழைக்கப்பெற்றது. வன்யா கோயிலின் எல்லா சந்நிதிகளுக்கும் அழைத்துச்செல்லப்பட்டார்.

தேவகணங்களின் பதியாகவும், விக்னங்களின் நிவாரகருமான கணபதி - விக்நேச்வரர் - சந்நிதிக்கும், கரங்களை நீட்டி ஒரு கரத்தால் அபயமும், மற்றொரு கரத்தால் ஞானமும் வழங்கிக் கொண்டு, மௌனத்தில் ஆழ்ந்திருக்கும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதிக்கும், தொன்றுதொட்ட பண்டைய தமிழ் பண்பாட்டில் முருகன் என்றும் - வடநாட்டு பண்பாட்டின்படி பின்பு சுப்ரஹ்மண்யன், ஸ்கந்தன், ஷண்முகன் என்றும் - அழைக்கப்படுபவர் சந்நிதிக்கும் இறுதியில் முக்கியமான சந்நிதியாயிருக்கும் சிவலிங்கத்தின் கர்பக்ருஹத்திற்கும் அழைத்துச் செல்லப்பட்டார். கோயிலுக்குப் பின் சிறிய பூந்தோட்டமும், சில செடிகளும், மரங்களும் அபிஷேகம் முதலியவைகளுக்காகக் கிணறும் இருந்தன. கோயில் வாசலின் அருகே கிராமத்தினிடமிருந்து நன்கொடை பெற்று, சமீபத்தில் கட்டப்பட்ட மண்டபம் இருந்தது. கும்பகோணத்திலிருந்து, மாசி மகத்திற்குச் சென்ற யாத்ரீகர்களால், சமீபத்தில் வாங்கி வரப்பட்ட பூஜா பாத்ரங்களும் வன்யாவிற்கு பெருமிதத்துடன் காண்பிக்கப்பட்டன.

சூரியன் தாழ்ந்து அடிவானத்தைத் தொட்டதும், பூஜகர் சில கஜ தூரத்தில் இருக்கும் பெண்ணை ஆற்றுக்கு வன்யாவை அழைத்துச் சென்றார். பாதி ஆறைக் கடந்தபிறகு இருக்கும் குறுகலான ஊற்றைத் தவிர மற்றெங்கும் வரண்டு இருந்தது. கைலாஸநாதர் தன் கைகளையும் முகத்தையும் ஜலத்தினால் துடைத்துக்கொண்டு பக்தியுடன் சில ஜலத்துளிகள் எடுத்து ஆசமனம் செய்தார். எப்போதும் அவரை விட்டு நீங்காதிருந்த வீபூதிப்பையை இடுப்பிலிருக்கும் வஸ்திரத்தைப் பிரித்து எடுத்து, அதிலிருந்து சிறிதளவு எடுத்து, வீபூதியில் ஜலத்தையும் சேர்த்து குழைத்து ஆசார முறைப்படி நெற்றியிலும், மார்பிலும் மூன்று வெண்மையான பட்டைகளை அணிந்தார்.

பிறகு அவர்கள் கிராமத்திற்கு திரும்பினர். குருநாதர் வந்தவுடன் அவர்களுக்குத் தகவல் தெரியும் என்று அவர்கள் கூறியதால் அக்ரஹாரத்தில் அவர் வரும்வரை தங்கியிருக்கும்படி அவர்கள் கேட்டுக்கொண்டதற்கு வன்யா உடனே சம்மதம் தெரிவித்தார்.

மாலை பூஜை நேரம் வந்தது. பெரிய கோவில்களில், பூஜை நேரங் களில், வன்யா இருந்திருக்கிறர். ஆடம்பரமற்ற அந்த கிராமத்திலுள்ள கோயிலினுல் போல் வேறெப்போதும் அவர் மனம் கவரப்படவில்லை.

இங்கு ஒரு உண்மையை நினைவில் கொள்ளத்தகும். பண்டைய காலத்து கிறிஸ்தவர்களுக்கு எது மிகவும் புனிதமான நேரங்களோ அவைகளே தான ஹிந்துக்களுக்கு புனிதமாக இருந்தன. பகலும் இரவும், இரவும் பகலும், சந்திக்கும் நேரங்கள் - சூரிய உதயம், சூரிய அஸ்தமனம் - இவைகளை ஒட்டிய நேரங்கள் தான் சூக்ஷ்மமான, ரகஸ்யமான ஸந்த்யாகாலம்.

கிழக்கு வானத்தில் ப்ரகாசம் தெரியத் தொடங்கியதும் ப்ராம்மணன் அந்நேரத்திற்காக ஆற்றில் நின்றுகொண்டு காத்திருப்பான். தன்னருகே ஆறு ஒன்றும் இல்லாவிட்டால், சுத்த ஜலமுள்ள பாத்திரத்தை எதிரில் வைத்துக் கொண்டிருப்பான். ஒவ்வொரு கிரியையின் போதும் தீர்த்தம் சாக்ஷியாக விளங்குகிறது. மூர்த்தியின் உருவம் கிடைக்காவிடில் அதற்கு பதிலாக தீர்த்தம் வைக்கப்படுகிறது. ப்ராம்மணன் ஸ்நானம் செய்துவிட்டு மந்திரங்களை - முக்கியமாக காயத்ரியை - உச்சரிக்கிறுன்.

தன் சிரஸில் ப்ரோக்ஷணம் செய்துகொண்டு நெற்றி, காதுகள், கண்கள், ஒவ்வொரு இந்திரியம் ஒவ்வொரு அவயவம் - இவைகளைப் புனிதப் படுத்தி, இவைகளின் அதிபதியாக இருந்து எல்லா காரியங்களையும் செயல் படுத்தும் தேவதைகளுக்கு ஜலத்தினுல் அஞ்சலி செலுத்துகிறுன். நான்கு திசைகள் பக்கமும் திரும்பி அவைகளுக்கு அதிபதியாக இருக்கும் தேவதை களுக்கு கைகூப்பி வணங்குகிறுன். தன்னைச் சுற்றிலும் ப்ரதக்ஷிணமாக ஜலத்தை தெளித்து விரல்களால் மூக்கு காது துவாரங்களை மூடிக்கொண்டு நீரில் மூழ்குகிறுன். முடிவில், சூரியன் அடிவானத்தில் உதயமாகி முழுவதும் வெளிப்பட்டு உயரக்கிளம்பும்போது தலைக்கு மேலே தன் கைகளைக் கூப்புகிறுன்- ஹிந்துக்கள் அஞ்சலி செலுத்தும் உன்னத முறையில் நமஸ்கரிக்கிறுன்.

உள்ளும் புறமும் பரவி, அண்டசராசரமனைத்தும் தன் அருட்கோலமாக்கி, விளங்கும் ஒப்பற்ற ஜோதி ஸ்வரூபத்தின் உணர்வே அற்ற மனிதர்கள்தான் இந்தச் சடங்குகளை மூட வழிபாடு என நிந்திப்பர். இந்த அருட்கோலம் காலத் தின் கதியையொட்டி வெளிப்படுகிறது. புற உலகத்தின் மாறுதலைத் தோற்று விக்கும் இக்கால சக்தியே தனிப்பட்ட மனிதனை, சராசரமாய் தோன்றும் பரம்பொருளின் சுதந்தர நியதியோடு ஒன்றுபடுத்துகிறது. உண்மையிலேயே, இந்தியாவைப்போல் இந்த அருட்படைப்பின் ஆழ்ந்த உணர்வை - எப்போதும் ப்ரகாசித்துக்கொண்டும், பராசக்தியின் வடிவமாக பண்டைய ஜுவினர் மதத்தில் (Judaism) கூறப்படும் ஷேகினு (Shekinah) என்ற அருளொளி போன்று விளங்கும் இந்த தத்துவத்தை - வேறெந்த தேசமும் அறிந்துகொள்ள வில்லை. வேதகாலந்தொட்டு இந்தியா இந்த அருட்படைப்பின் உண்மையை

இறைவனின் படைப்பு ஒவ்வொன்றிலும் - மனிதனுடையவும், உலகத்தினுடையவும் ஒவ்வொரு நிலையிலும், கிரஹங்களின் நிலையையொட்டி விளங்கும் தின, மாதாந்திர, வருடாந்திர கதிகளிலும் - பிறப்பற்ற சைதன்ய பேரொளி மக்களின் நலனுக்காக எல்லா தோற்றத்திலும் ஊடுருவி நிற்பதைக் காண்கிறது.

இஜ்ஜோதியில் இலங்கும் பவித்ரத் தன்மையே, - எந்த நீரிலிருந்து வேதம் கூறுவதுபோல் அக்னி உத்பத்தியடைகிறதோ, எந்த நீர் புனிதத் தன்மையையும் ஜீவ சக்தியையும் தருகிறதோ, எந்த நீர் பைபிளில் படைப்பின் முறையில் உலகப்பொருள்களின் உத்பத்திக்கு முன் இருந்ததாக சங்கேதமாக கூறப்படுகிறதோ, எந்த நீரை கிறிஸ்தவ மதத்தில் புனர்ஜென்மச் சடங்கில் போற்றுகின்றனரோ - அந்தப் புனித நீரிலும் பரவியிருக்கிறது.

இந்தியாவில் ஸ்நானம் செய்வது என்பது சுகாதாரத்திற்காகச் செய்யப்படும் க்ரியை மட்டுமல்ல. குறிப்பாக ப்ராம்மணர்களுக்கு அது ஒரு வழிபாடு ஆகும். உண்மையாகவே இறைவாழ்க்கைக்கு முற்றிலும் சம்பந்தமற்ற செயல்கள் ஒரு மனிதனின் வாழ்வில் இருக்கின்றனவா? தளராமல் ஒவ்வொரு ப்ராம்மணரும் அனுஷ்டிக்கும் க்ரியைகள் 'தெய்வ சம்பந்தம் அற்றது ஒன்றும் இல்லை' என்பதை ஞாபகப்படுத்துவதற்காகத்தான். ஸ்நானம் செய்வதோ, மற்ற அர்க்யங்கள் அளிப்பதோ படைப்பின் மூல காரணமாயிருக்கும் ஜல தத்துவத்தினோடு ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்பேயாகும்; இது முக்கியமாக சூரிய உதயத்தில் புனித நீராடும்போது நிகழ்கிறது. தமிழ்நாட்டில் வசித்துவரும் ப்ராம்மணர்களுக்கிடையே புனித நீருக்கு தனித்த சொல் கிடையாது - எல்லா நீரும் புனித நீரே. அவர்கள் வழங்கும் தீர்த்தம் என்ற சொல் - புனித நீர் என்று பொருள்படும்.

பகலை வரவேற்கும் க்ரியைப்போல் மாலையில் விடையளிக்கும் க்ரியையும் அமைந்து இருக்கிறது. இருளும் ஒளியும் கலந்த இரவுக்கு வழிபாட்டுடன் கூடிய நுழைவாக இரு வழக்கங்களும் பண்டைய பண்பாட்டில் தோன்றி ஒரு யுகத்திலிருந்து மற்றொரு யுகத்திற்கு மாறி மாறி - உலக ஸ்திதிக்காகவும் பருவகாலங்களின் நியதியைக் காப்பாற்ற தேவைப்பட்டதாகவும் - ஆதிகாலந் தொட்டு வந்து கொண்டிருக்கின்றன. பகல் - இரவு இவைகளின் மாறுன, தொடர்ச்சியற்ற நிலைகளும், விழிப்பு நேரங்களும் துயிலும் நேரங்களும் லயித்து மீண்டும் வெளித்தோற்றம் அடைந்து நிலையானதாகவும், தொடர்ச்சியுள்ளதாகவும் தனிநிலையிலும், ப்ரபஞ்ச நிலையிலும் சந்த்யாகால வழிபாடுகளினால் ஆகின்றன என்று கருதப்பட்டது.

எல்லா நேரங்களைக் காட்டிலும் மாலை நேரம் ப்ரார்த்தனைக்குச் சிறந்தது. அந்நேரத்தில் மனிதன் தன் அலுவல்களிலிருந்து நீங்கி உலக சிந்தனைகளையும் வ்யவஹாரங்களையும் சுலபமாக விலக்கி, கவலைகளற்று சாந்நித்யமான சூழ்நிலையில் தெய்வத்யானத்தில் ஈடுபட வேண்டும். இந்தியாவில் ஒவ்வொரு

மூலையிலும் இந்நேரத்தில்தான் பக்தர்கள் பெருவாரியாக கோயில்களுக்குச் செல்கின்றனர்.

இந்த அக்ரஹாரத்தில் இருபத்தைந்து அல்லது முப்பது வீடுகள் இருந்தன. அங்கு வசித்த நூறு அல்லது இருநூறு பேர்களில் ஒவ்வொரு மாலையும், சில நிமிஷங்களாவது இறைவனின் ஆலயத்திற்குச் சென்று வணங்கி ரக்ஷிக்கும்படி பிரார்த்திக்காதவர்கள் வெகுசிலரே இருப்பர்.

பூஜகரான கைலாஸநாதரும் அவருடைய தந்தையும் கர்பக்ருஹத்தின் மண்டபத்தில் இருக்கும் தீபங்களைத் துடைத்து திரிபோடுவதில் சுறுசுறுப்பாக இருந்தனர். விக்ரஹங்களுக்கு அபிஷேகம் செய்வித்தல், மலர்களால் அர்ச்சனை செய்தல் போன்ற பூஜைக்குத் தேவையான க்ரியைகளையும் செய்தனர். இந்நேரத்தில் ப்ராம்மண ஆடவர்களும், மாதர்களும் வந்து ப்ராகாரத்தில் பல ப்ரதக்ஷிணங்கள் செய்து கொண்டிருந்தனர். ஒவ்வொரு மூர்த்திக்கும் ப்ரத்யேகமான முறையில் வணக்கத்தை தெரிவித்தனர். உதாரணமாக கணபதிக்கு முன் தோப்புக்கரணம் போடுவர்; தக்ஷிணாமூர்த்திக்கு முன் சில நிமிஷங்கள் மௌனத்தில் ஆழ்ந்துநிற்பர். சண்டிகேசருக்கு முன்னால் கைகளை தட்டுவர். ஏனெனில், அவர்கள் பின்பு விளக்கம் அளித்தபடி, அவர் எப்போதும் த்யானத்திலேயே லயித்திருப்பதால் அவரை எழுப்புதல் அவச்யமாகும். முடிவில் சிவலிங்கம் உள்ள கர்பக்ருஹத்திற்கு முன்வருவர்; வடதிசை பக்கம் தங்கள் முகங்களைத் திருப்பி எல்லோரும் நமஸ்காரம் செய்வர். ஆடவர், பெண்டிர், முதியோர், இளைஞர், - யாவரும் முடிவே இல்லாமல் வரிசை வரிசையாக பின்தொடர்ந்து வந்தனர். தங்கத்தைப்போன்ற சிவந்த மார்பும், ஆழ்ந்த சிந்தனையுடன் கூடிய நோக்கும், தலைமுடியும் உள்ள சிறுவர்களும் குழந்தைகளும் குறைந்த ஆவலுடையவர்களாக இல்லை. அவர்களுடைய முகங்களிலிருந்தும், நடைமுறைகளிலிருந்தும், இந்த பண்டைய ஒழுக்கத்தை எவ்வளவு ஆர்வத்துடன் கடைப்பிடித்தனர் என்பதை ஒருவர் கண்டுகொள்ள முடியும். பச்சிளங் குழந்தைகளை முதியவர்கள் இடுப்பில் ஏந்தி செல்வார்கள் - அந்த தாய்மார்களே த்வஜஸ்தம்பத்தின் அருகில் அக்குழந்தைகளை படுக்கவைத்து நமஸ்காரங்கள் செய்விப்பர்.

சற்று இருளுடன் விளங்கும் கர்பக்ருஹத்தில், புரோகிதர்கள் மந்திரங்கள் ஓதிக்கொண்டு புஷ்பங்களையும், பத்திரங்களையும் லிங்க உருவிற்கு சமர்ப்பித்துக்கொண்டிருந்தனர். தாழ்ந்த வளைவுகள் மூலம் மணி அவ்வப்போது ஒலித்தது. வழிபாட்டில், முக்கியமாக, ஆரத்தி எடுப்பது போன்ற தருணங்களை இது குறிக்கிறது. பக்தர்கள் அச்சமயங்களில் முன்னுக்கு வந்து சிறிய வாசலின் எதிரே புனிதமான தீபஒளியை தரிசிக்க சூழ்ந்துகொள்வர்.

எந்த கற்பூரம் எரிந்து மீதமற்று நிற்கிறதோ, எது ஒரு ஜீவன் முற்றிலும் அருள் பேரொளியோடு கலந்ததற்கு சின்னமோ, அந்த கற்பூரம்

எரியும் தட்டை பூஜகர், எல்லா வழிபாடும் முடிந்ததும், கையில் ஏந்தி வந்தார். பக்தர்கள் ஒவ்வொருவரும் அருகில் சென்றனர். கைகளால் கற்பூர ஜ்வாலையைத் தொட்டு கண்களை ஒத்திக்கொண்டனர். இறைவனோடு கலக்க விரும்புபவர் போல், லயித்த மனமுடையவர்களாய் நெற்றிகளில் விபூதியை அணிந்தனர்.

கூட்டம் கலைந்தது. கோயிலின் வெளிக்கதவுகள் மூடப்பட்டன. கர்பக்ருஹத்தில் மட்டும் தீபங்கள் ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. ஏனெனில் இறைவனின் ப்ரபாவத்தை விளக்க ஏற்றப்பட்ட தீபங்கள் தைலம் உள்ளவரை எரியவேண்டும். உள்ளபடியாக ஒருபொருளை அர்ப்பணித்துவிட்ட பிறகு அதைத் திரும்பவும் எடுத்துக்கொள்வது என்பது கிடையாது. புனிதமான சிவலிங்கம் தனித்து அமைந்திருக்கும் வழவழப்பான பீடத்தையுடைய அந்த குறுகிய கர்பக்ருஹத்தினுள், கவர்ச்சியையும் திகைப்பையும் தரும் அந்த அறையினுள் வன்யா தானாகவே வாய்ப்பை பயன்படுத்திக்கொண்டு நுழைந்தார்.

## 5. கோயிலில் தனிமையில்

சிவலிங்கம் வீற்றிருக்கும் கர்பக்ருஹத்திற்குள் சென்று நின்றுகொண்டிருக்கும்போது அதனால் ஆட்கொள்ளப்படாமலும், ஹ்ருதயத்தின் உள் உணர்வுக்கு வசப்படாமலும் இருக்கமுடியாது. சிறிதே ஒளி இருக்கும் அந்த அறைக்கும் பக்தர்கள் நிற்கும் மண்டபத்திற்கும் இடையே நீண்ட நடையும் ப்ராகார இடைவெளிகளும் இருந்தன. அவ்வறையின் நடுவே, உருவமற்ற பரம்பொருளைக் குறிப்பாக உணர்த்துவதற்குத் தேவையான உருவம் தாங்கி வட்டவடிவமான குழவிபோன்ற கல் நேராக எளிமையுடன் நின்றது.

நடு சந்நிதிக்கு வெளியே மற்ற மூர்த்திகள் இருந்தன. தேவகணங்களுக்குப் பதியான கணபதி இருக்கிறார். புராணக்கதையின்படி கணபதிபோல் சிவனுக்குப் பிறந்த முருகன் ஆறுமுகங்களுடன் மயில் மீது வேலுடன் காட்சி அளிக்கிறான். சக்தி தத்துவமாய் - பல அவசரங்களில் பல ரூபங்களை தரித்து கவர்ச்சிகரமாகவும், கம்பீரமாகவும் காட்சி கொடுத்துக்கொண்டு அருட்படைப்பின் சின்னமாக, எல்லையற்ற ஈசனுடைய ச்ருஷ்டிக்கும் ஆற்றலாக விளங்கும் - பார்வதி இருக்கிறாள். கடைசி சந்நிதியில் நடனத்திற்கு அரசனான நடராஜர் இருக்கிறார். சுற்றிலும் வேள்வித்தீ எரிய சிவன் ஆனந்த நடனம் புரிகிறான். அசுரனை சம்ஹரித்து காலடியில் வீழ்த்தியிருப்பதால் அது வெற்றி நடனமாகவும் இருக்கிறது. ப்ரளயகாலத்தில் ப்ரபஞ்சத்தை அழிக்கும் ருத்ர கோலத்தில் சிவன் தரித்த பைரவரூபமும் அங்கே இருக்கிறது. தெற்குப் பக்கத்தில் ஞான குருவாய் தத்துவத்தை - சொற்களைக் கடந்த நிலையில் ரகசியமாக - உணர்த்தும் தக்ஷிணாமூர்த்தி வீற்றிருக்கிறார். இவையெல்லாம் ஒரே இறைவனின் பலபல

கோலங்களே! உலக சிருஷ்டியில் ஒவ்வொன்றிலும் இறைதத்துவம் ஊடுருவி நிற்கிறது என்பதை புரிந்துகொண்ட மனிதனின் கற்பனே! இயற்கையின் எல்லா அம்சங்களுக்கும்-சாந்த நிலே, கோர நிலே, மிருகம், மனிதன், ஆணினம், பெண்ணினம், இவைகள் எல்லாவற்றிற்கும் - இந்த உண்மை பொருந்தும்.

எந்த அளவுக்கு மனிதன் புனிதத்தன்மை படைத்த சின்னமாகிய லிங்கத்தை உணர்ந்து கொள்கிருனே அந்த அளவுக்கு தன் இதயத்தில் ப்ரகாசிக்கும் ஆன்மாவின் சமீபத்திற்கு தொடர்ந்து அழைத்துச் செல்லப் படுகிருன். அந்த மையிருளில், இறை தத்துவமும், அதனுடன் உலகப் படைப்பின் மூல ரகச்யமும், அவன் ஆழ்ந்து தன் ஸ்வரூபத்தில் ஒடுங்கி யிருக்கும் நேரத்தில் விளங்குகின்றன.

உலகைப் படைக்கும் மாட்சிமை பொருந்தி அன்பு வடிவமாய் நிற்கும் தெய்வமே அது! உலகத் தோற்றமாகவும், மனிதனின் நோக்கில் ஜீவனே உய்விக்க வந்த அவதாரமாகவும் காணப்படும் தத்துவமே அது! எல்லாவற்றை யும் விட, - எல்லா சொற்களேயும், சிந்தனேகளேயும், உணர்ச்சிகளேயும் கடந்த நிலேயில், எல்லா நினேவுகளும் அழிந்த நிலேயில் - எந்த ஒரு பரம்பொருள் தானுகவே தன் மஹிமையிலேயே, அறிவுக்கு எட்டாமல் இயல்பாகவே விளங்குகிறதோ அந்த தத்துவமே அது! புத்தியிலிருந்து பிறக்கும் எந்த சிந்தனேயும் அதனே விளக்காது; காதுகளினுல் கேட்கப்படும் எந்த சொல்லும் அதனே அறிவிக்காது! கண்ணுக்குப் புலப்படும் எந்த ரூபமும் அதனேக் காட்டாது!

ஒலி வடிவில் மனதிற்கு எட்டாததான நிர்விசேஷ சைதன்யம் ப்ரணவம் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. அகார உகாரங்களின் விகாரமான 'ஓ' காரம் பரஸ்வரூபத்தின் நிரதிசிய உணர்வினுல் திகைப்பையும் களிப்பையும் அளித்து 'ம்' என்ற அர்த்த மாத்திரையில் முடிகிறது. எந்த 'ஓம்' எனும் நாதத்தை மனிதர்கள் இயல்பாகவே உணரமுடியாமல் இருக்கின்றனரோ, எந்த 'ஓம்' எனும் நாதத்தை மட்டும் சாந்த வெளியில் எப்போதும் கேட்டுக் கொண்டே இருக்கலாமோ, அந்த 'ஓம்' எனும் சொல்லால் - மனம் நிரந்தரமாக உபசாந்தியடையும் முன் - அந்தப் பரம்பொருளே மனிதன் ஒருவகையாகக் குறிக்க முற்படுகிருன்.

அதேபோன்று, உருவ அடிப்படையில், நன்ருக புலனுக்கு புலப்படும் நிலேயில், எந்த உருவமும் விளக்க சக்தியற்றதாய், அளவுபடுத்த முடியாமலி ருப்பதாய் நிற்கும் பரம்பொருளே காண்பித்துத்தரும் ஒரு சின்னமாக லிங்க வடிவம் விளங்குகிறது. சைவ நூல்கள் உரைப்பது போன்று லிங்கவடிவம் உருவமாயும், அருவமாயும் திகழ்கிறது. சாகார நிராகாரத்தின் மைய வரம்பாக விளங்கும் இவ்வடிவம், உண்மையிலேயே எல்லாம் கடந்து நிற்கும்

பரம்பொருளான பரமசிவத்தின் - அருணுசலத்தின் உச்சியில் தோன்றிய ஒளி வடிவம் போன்று - கண்ணுலும் மெய்யாலும் உணரப்படும் இறுதிச் சின்னம் எனலாம்.

சிவலிங்கம் வீற்றிருக்கும் அறை சம்ஸ்க்ருதத்தில் மூலஸ்தானம் அல்லது கர்பக்ருஹம் என அழைக்கப்படும். மூலம் என்ற சொல் ஆதாரம், அல்லது தோன்றுமிடம் என்பதைக் குறிக்கும். கர்ப்பம் எனில் அன்னையின் உதரம், ஸ்தானம் என்பது இருப்பிடம் அல்லது உறைவிடம் எனப்படும். க்ருஹம் எனில் வீடு. சின்னம் என்ற நிலையிலும், ஆலய வழிபாடு அடிப்படையிலும், சிவலிங்கம் வீற்றிருக்கும் கர்பக்ருஹம் - கிரேக்க - தீக்ஷா நிலையங்கள் போன்று- தெய்வீக மறுபிறப்பைத்தரும் ஒப்பற்ற ஸ்தானமாக விளங்குகிறதல்லவா ?

பண்டைய ரிஷிகளின் உபதேசங்களைப் பின்பற்றி, நாமரூபங்களைக் கடந்து, சொல்லையும் சிந்தனையும் தள்ளி - உணர்ச்சியற்று உயிரற்று இருக்கும் நிலையையும் அதிக்ரமித்து, தன் சைதன்ய ஸ்வரூபத்தை உணரும் நேரம் அவனுக்கு முடிவான புனர்ஜென்மம் ஏற்படும் தருணமாக ஆகிறது. ஏசுபிரான் இறந்தபிறகு, மரணத்தையும் நரகவாழ்வையும் கடந்தவராய், பின்பு உயிர் பெற்றெழுந்த சந்தர்பத்துடன் ஒப்பிட்டு இதை ஒரு கிறிஸ்தவர் உணரக்கூடும். தெய்வத்திடம் ஏற்படும் இந்த நேர் சந்திப்பு மரணத்திற்குப் பின் நிகழும் ஒரு புனர்ஜென்மம் எனலாம். அஹங்கார உணர்ச்சி அடியோடு மறையாத நிலையில் மனிதன் கடவுளைக்காண இயலாது. இறைவனுடன் ஒன்றிய நிலையை - ப்ரத்யக்ஷமாக விளங்கும் ஒப்பற்ற சித் வெளியில் இவ்வாறு முற்றிலும் மரித்துப் பிறந்தாலொழிய - மனிதன் அடைய இயலாது. இந்த ஓர் உண்மையை சிவலிங்கமும், இருள் சூழ்ந்த கர்பக்ருஹமும், தனித்த முறையில் சின்னமாக, உருவகமாக விளக்கிக்காட்டுகிறதல்லவா ? இறைவனின் சாந்நித்யத்தை உணர்த்தும் ஒவ்வொரு ஆலயமும், தரணியில் இறைவனின் இருப்பிடமாகத் திகழ்வதுடன் மனிதனின் புனர்ஜனன ஸ்தானமாகவும் விளங்க வேண்டும். இந்தப்புதிரான கர்ப்பஸ்தானத்திலிருந்துதான் புதுமையுடன் மனிதன் வெளிவருகிறுன். பிதாவின் பேரருளில் திளைத்து பிரிய மகனுகப் பிறந்திருக்கிறுன் - காலம் தொடங்கும்போதே. இதைப் புனித ஆன்மீக நீராடல் என கிறிஸ்தவன் பேசுகிறுன், உணருகிறுன்.

லிங்க உருவம் ஆண் குறியின் அடையாளமாக வைத்து தொழப்படுவதாகக் கருதி மேற்கு நாட்டினர் அடிக்கடி பழித்துக் கூறுகின்றனர். இச்சொல் சம்ஸ்க்ருதம், தமிழ், மற்ற மொழிகளிலும் பொதுவாக அடையாளம் என்ற முக்கிய பொருளையும், இதர பொருள்களுடன் தருகிறது. தற்காலத்தில் சைவ சித்தாந்திகள் இவ்விதமாகப் பொருள் கூறுவதைக் கண்டித்து இங்கும் அங்குமாக ஆண்குறியின் தோற்றத்தில் காணப்படும் லிங்கங்களை சில வகுப்பினரின் முடச் செயலாகக் கருதவேண்டும் என சமாதானம் தருகின்றனர்.

ஆண்குறியினேடு லிங்க வழிபாட்டுக்கு தொடர்பு இருப்பதாகக் கருதினாலும், அறிவீனர்கள் நினைப்பது போன்று - அதில் மோஹம் அடைந்திருப்பவனைத் தவிர - மற்றவர்கள் ஆபாச எண்ணத்தைக் கொண்டவர்கள் அல்ல. உண்மை யாக லிங்க வடிவிடம் பக்தி செலுத்துபவர்களிடையே தகாத உணர்ச்சியோ, தோற்றமோ ஏற்படுவதில்லை என்பது துணிவு. நாகரீகம் படைத்தது எனக் கருதப்படும் இவ்வுலகில், மனிதன் எவ்வளவு ஆபாசத் தன்மையை அதனுடன் பிணைத்தாலும், உயிரின் ஜனக ஸ்தானம் மிகவும் புனிதத் தன்மை படைத்தது என்பது உண்மையல்லவா ? தெய்வீக நோக்கில் ஜனன இந்திரியமே ஆன்ம மறுபிறப்பின் அடையாளமாக இருக்கக்கூடாது எனக்கருத ஏதாவது காரணம் இருக்கிறதா ? மேலும் இறைவனால் படைக்கப்பட்டதும், ஜீவனால் நாடப் பட்டதுமான மனிதனின் சரீரம் ஒப்புமையற்ற புனிதத் தன்மை படைத்தது என்பதும் ஞாபகப்படுத்தப்படுகிறதல்லவா ?

லிங்கத்தின் எதிரே - சிறிதே ஒளி விளங்கும் அறையில் - வன்யா, இச்சிந்தனைகளில் மூழ்கியவராய், அசைவற்றுத் தனிமையாக நெடுநேரம் நின்று கொண்டிருந்தார். அந்தி வேளையில் அமைதியும் இருளும் நிறைந்த அந்த மண்டபம் தெய்வீக சாந்தியுடன் கூடியதாய் இதயகுகையை - ஹிந்துக்களால் இறைவனின் உண்மையான உறைவிடமாகக் கருதப்பட்டு, பாவனையின் சக்தி யால் லிங்க உருவிலும் ஆகமவழிபாடுகளிலும் பிரதிபலிப்பு அடையும் புனித மான மறுபிறப்பின் ஸ்தானத்தை - நினைவுபடுத்துவதாய் இருந்தது. நிமிஷங்கள் செல்லச்செல்ல, ஒரு மந்த்ரசக்தியினால் தூண்டப்பட்டவராய், தன் இதய குகைக்குள்ளேயே அழைத்துச் செல்லப்பட்டவர்போல் அவர் ஆனார். மனித இதயத்தில் புதைந்து கிடக்கும் முதற்பொருளின் முக்கிய தத்துவங்களையே ஞாபகப்படுத்துவது போன்று அம்மண்டபத்தில் உள்ள ஒவ்வொன்றும் தோன்றியது. இதுதான் இந்திய நாட்டின் அத்புதமான தெய்வீகத் தத்துவம்- வழிபாடுகளாலும், கோவில்களின் அமைப்புகளாலும் சாஸ்வதமானப் பொருளை மனிதனுக்கு உணர்த்துவதுடன், சலிப்பின்றி அவனைத் தனக்குள் அழைத்துச் சென்று தன் ஸ்வரூபத்திலேயே உண்மையான விடுதலையையும், பரம் பொருளின் தர்சனத்தையும் அது தோற்றுவிக்கிறது !

இன்பமாகவும், அமைதியாகவும் நேரம் சென்றது. உள்மனதின் கிளர்ச்சிகளை புரிந்துகொள்ள முடியாதவராய் புற உலக வாழ்வைத் துறந்து ஆன்மீக வாழ்வைப்பெற விரும்பியவராய், கவலையற்று உணர்ச்சி வெள்ளத்தில் வன்யா மனதை மிதக்கவிட்டார்.

முழு இரவையும் வன்யா கோயிலிலேயே தனிமையில்-பரஸ்வரூப உணர் வில் லயித்தவராய்-கழித்தார். கைலாஸநாதர் கூறியபடி உலகவாழ்வில் ஈடுபட்ட மனிதன் ஒருவன் கோயிலில் - இறைவனின் இருப்பிடத்தில் - உண்ணுவதும் உறங்குவதும் பொருந்தாது. ஆனால் உலகவாழ்வைக் கடந்து தெய்வீகத்திற்கு அர்ப்பணித்துக்கொண்டவர்களுக்கு அது உண்மையான இருப்பிடமல்லவா ?

மண்டபத்தின் பெரும் கல் தூண்களுக்கு இடையே, வன்யா தூக்க நிலையும், விழிப்பு நிலையும் ஒன்றிய நிலையில் இரவு முழுவதையும் கழித்தார். அவருக்கு பின்பு ஏற்பட்ட நினைவும், அந்நேரத்தில் எழுந்த உள் உணர்வின் எழுச்சியும் ஓர் ஆழ்ந்த ஆன்மீக அனுபவத்தில் தோன்றியதுபோல் இருந்தன. அது கனவு நிலையா? அல்லது விழிப்புடன் செய்யப்படும் த்யானமா? யார் இதைப்பற்றிக் கூற இயலும்? பரதத்வத்தின் உணர்வு அவரை ஊடுருவிப் பாய்ந்து வெளிப்பட்டது. எந்த ஒரு பொருளும் இறைவனின் உருவாக, தோற்றமாக, ஆவிர்பாவமாகத் தோன்றியது. எல்லா உயிரினங்களும், எல்லா வழிபாடுகளும், சடங்குகளும், தோத்திரங்களும், மந்திரங்களும் இறைத்த்துவத்தை ப்ரதிபலிக்க முயல்பவனுய், ஒருங்கே இணைந்து, புராணக் கொள்கையின்படி, ஒப்பற்ற முடிவான சின்னமாக விளங்கும் சிவலிங்கத்தைச் சார்பவையாய் விளங்கின.

எங்கும் வியாபித்து, எல்லா ரூபங்களையும் கடந்து நிற்கும் பரம்பொருளின் சின்னமாக - அடையாளமாக, லிங்கமாக-உலகத்தில் காணப்படும் எந்த ஒரு பொருளும் விளங்கவில்லையா? "முதலாக நான் (லிங்கமல்லவா)?" என்று அவர் தனக்குள்ளே முணுமுணுத்துக்கொண்டார். வேதம் உச்சரிப்பதும் சிவலிங்கம்தான். பேசப்படும், காணப்படும், சிந்திக்கப்படும், கேட்கப்படும் எந்த ஒரு பொருளும் ரூபம் கடந்து நிற்பவனின் சின்னம்தான்.

இறைவனைச் சின்னத்திலிருந்து யாரால் பிரிக்க இயலும்? இறைவனின் படைப்பிலிருந்து, இவன் தோற்றத்திலிருந்து, இவனைத் தனிமைப்படுத்த யாரால் இயலும்? ஒரு சிறிய மணலும், நித்யமாயும் ஸ்வதஸித்தமாயும் இருக்கும் பரம்பொருளின் இருப்பை வெளிப்படுத்துகிறது. தனக்கு ஒரு காரணமும் அற்ற, நித்யமான பரம்பொருள் ஒன்று இல்லையானுல் அம்மணலும் இருக்க முடியாது. லிங்கவடிவம் சின்னமாக இருப்பதுடன் சிவபெருமானின் ஸ்வரூபமாகவும் விளங்குகிறது. எந்த சின்னமும், சின்னத்தினுல் உணர்த்தப்படும் பொருளைக்காட்டிலும் வேறன்று. தந்தை இல்லையானுல் மகனிருக்க முடியாது. சைதன்யத்தின் இருப்பை அறைகூவி தெரியப்படுத்தாத ஒரு ஜடப்பொருளும் இல்லை எனலாம். சின்னம் மெய்யுணர்வின் அடிப்படையாக, தூண்டுகோலாக விளங்குவதோடு பரம்பொருளினின்றும் பிரிக்கமுடியாததொன்றல்லவா? சிவபெருமான் லிங்கமுழுவதையும் வியாபித்து இருப்பதுடன், அதன் ஒவ்வொரு பாகத்திலும் பூர்ணமாகவே இருக்கிருன்.

சிந்தனையின் நிலையில், சிவபெருமானுக்கும் அவன் தோற்றமாகவிருக்கும் லிங்கவடிவத்திற்கும் பிரிவினையே கூறஇயலாது. இங்கு 'அத்வைதம்' - இரண்டற்றது - என்பதே பொருத்தமான சொல்லாகும். இந்நிலையில் இரண்டென்னும் கொள்கையோ ஒன்றென்னும் கொள்கையோ பொருந்தாது; திகைப்படைந்த மனிதன் அதிசயப் பரம்பொருளோடு ஐக்ய நிலையை இதய வெளியில் உணருகிருன்.

சிவபெருமான் சிவலிங்கத்தின் வடிவில், கர்பக்ருஹத்தில் உள்ள லிங்கத்தில், உலகமாகக் காட்சி அளிக்கும் லிங்கத்தில், உயிராகத் தோன்றும் லிங்கத்தில் முற்றிலும் பிரசன்னமாக இருக்கிறுன், - இதயத்தில் இருக்கிறுன், இதயமாகவே இருக்கிறுன். ஆனுல் அவ்விதயத்திற்கு இடைவெளியோ, சிந்தனை வடிவமோ புறப்பொருளுக்கு உரிய அமைப்போ கிடையாது. எல்லாவற்றையும் முற்றிலும் கடந்து நிற்பதாயுள்ள அவ்விதயம், அக்காரணத்திஞலேயே எல்லாவற்றின் உள்ளே கலந்து நிற்பதாயும், எல்லாவற்றையும் வியாபித்து நிற்பதாயும், கடந்து நிற்பதாயும் உள்ள ஒரு பூரணப்பொருளாகும்.

சின்னத்தின் தத்துவத்தை உணர்ந்த அளவிலேயே ஒருவன் எல்லா படைப்புகளுமே இறைவனின் தோற்றம், விபூதி என அறிகிறுன். தன்னிடமிருந்து தொடங்கி எந்த ஒரு உயிரிலும், சிறு அணுவிலும், அகண்டமான அண்டங்களிலும் வியாபித்து சின்னத்துடன் பிணைந்து நிற்கும் நிலையில், பல விதமான வடிவங்களுக்கிடையே காணப்படும் வேறுபாடுகளும் வித்தியாசங்களும் முக்கியமற்றதாகப் போய்விடுகின்றன. எந்த ஒரு பொருளிலும் இதயம் பிணைந்திருக்கிறது. எந்த இதயத்தில் எல்லாம் பிணைந்திருக்கின்றனவோ, எல்லாம் காணப்படுகின்றனவோ, எல்லாம் உணரப்படுகின்றனவோ அதில் பூரணமான இறை தத்துவம் விளங்குகிறது.

இறை ஸ்வரூபத்தின் உணர்வை இப்போது ஒருவன் பெறமுடிகிறது; இந்த உணர்வையே எந்த ஒரு பொருளிலும், எந்த ஒரு உயிரிலும் ஒருவன் அனுபவிக்கிறுன்.

சிருஷ்டிக்கப்பட்ட உலகில் இறைவன் உள் ப்ரவேசம் செய்வதின் அறிகுறியாகவும், உயிர்கள் மரணத்திற்கு அப்பால் அடையும் நிலையின் அடையாளமாகவும் சிவலிங்கம் விளங்குகிறது. உருவமுடையதற்கும் உருவமற்றதற்கும் இடையில், தோற்றத்திற்கும் தோற்றமே அடையாத தத்துவத்திற்கும் இடையில் காணப்படுவது லிங்க ஸ்வரூபம்.

இறைவன் கண்ணுல் காணப்படும் பொருளாயும், காட்சிக்கு அப்பாற்பட்டவனுயும் விளங்குகிறுன். ஆனுல் மனிதனுடைய காட்சியினுலோ காட்சியின்மையினுலோ இறைவன் அறியப்படுபவனுகக் கூற இயலாது; அவனுடைய செயலினுலோ செயலின்மையினுலோ இறைவன் அடையப்படுபவனுகக் கூற இயலாது. இறைவன் எல்லாம் கடந்து நிற்கும் பரம்பொருள்.

இறைவன் மிகவும் சமீபத்திலிருக்கிறுன்; எல்லாவற்றிற்கும் அப்பால் இருக்கிறுன்; எல்லாவற்றிற்குள்ளும் இருக்கிறுன்; எல்லாவற்றிற்கும் வெளியிலும் இருக்கிறுன்.

எந்த ஒரு இடத்திலும் கடவுள் பூரணமாக, அநந்தமாக விளங்குகிறுன்.

"அது பூரணம்; இது பூரணம்; பூரணத்திலிருந்து பூரணம் தோன்று கிறது; பூரணத்திலிருந்து பூரணம் எடுத்ததின் பின் பூரணமாகவே மிஞ்சு கிறது" (ஈசாவாஸ்ய உபநிஷத்)

இந்த பூரணத்தன்மையை உணரும் நிலையிலேயே மனிதன் கடவுள் தத்துவத்தையும் அறிகிறன்; தன்னையும் உணருகிறன். இதுவே என் புலன் களால் அறியப்படுபவையாய், என் சிந்தனைகளின் விஷயமாய், என் சூக்ஷ்மப் பொருளாய், எனக்கு நெருங்கிய சம்பந்தமுடையதாய், வெளிப்படாததாய் வெளிப்படுத்த இயலாததாய், உலகப்படைப்பின் அத்புத ரகச்யமாய் - என்னு டைய சிந்தனைக்கு எட்டாததாய் ஆனல் என் சிந்தனைக்கே ஆதாரமாய்- விளங்குகிறது.

சிவதத்துவமே லிங்கமாகி, எல்லாமாகி இருக்கும்போது, சின்னத்தைக் கடந்து செல்லுதல், லிங்கத்தைக் கடந்து செல்லுதல், என்று கூறப்படுவதின் கருத்தென்ன?

ஜீவ உணர்ச்சிகளையும் பாவனைகளையும் களைந்து நீக்கி ஆத்மாவை ஆத்மாவால் ஆத்மாவில் அறிவது என்பதுதான் சிவபெருமானை, ஒப்பற்ற தனிப்பொருளை, வியாபகமாயும், பூரணமாயும், இருக்கும் ஸ்வரூபத்தை, அறி வது என்பதாகும் ......

இந்த சாந்த ஸ்வரூபத்தை ஒருவன் உணர்ந்த நிலையில் உள்ளென்றும் வெளியென்றும் பிரிவின்றி அகண்ட ஆத்மாவாக விளங்குகிறன்.

நதியைக் கடந்து அக்கரை சென்றவனுக்கு, மெய்யுணர்வு உதய மடைந்தவனுக்கு, புத்தர் கூறியது போன்று, விலகவேண்டிய இடமோ, அடைய வேண்டிய இடமோ, கடந்து சென்ற நதித்துறையோ, கடக்க உதவிய ஓடமோ, கடத்திச்சென்ற படகோட்டியோ கிடையாது. ஓர் அதிசய உணர்வு ஸ்வரூபமே, மனிதப் படைப்பிற்கெட்டாத, ஆனல் மனித படைப்பிலேயே விளங்கக் கூடியதாய், அதிலேயே கலந்து நிற்கும் தன்மையதாய் இருக்கிறது.

சிவவடிவத்தை முற்றிலும் உணர்ந்தாலன்றி, - அவ்வடிவத்திற்குள்ளும் அப்பாலும் ஊடுருவினல் அன்றி - சிவலிங்கத்தின் தத்துவத்தை ஒருவன் உணர்ந்ததாகக் கூறமுடியாது. இதுவே ஒவ்வொரு மனிதனின் இதயத்திற்குள் பொதிந்து கிடக்கும் ரகச்யமாகவும், அவன் விடுதலை பெறும் நேரம் வரையில் பந்தமாகவும் விளங்குகிறது.

சிவலிங்கத்தில், சிவன் ஸ்பர்ச ரகிதனய், அக்ண்டமாய், புலனறிவுக்கு எட்டாதவனய், அதே சமயத்தில் பிரிவற்றவனய் விளங்குகிறன். எல்லா வற்றிலும் நிறைந்து, வியாபித்து ஆனல் எங்கும் அத்வீதியனய், அகண்டனய் - அவயவங்களோ, அம்சங்களோ, அற்றவனய் - புறம்பாக எந்த பொருளிலும்

இருப்பற்றவனுய் இருக்கிருன். இதே சமயத்தில் அவன் எதனுலும் பற்றப்படா தவனுய் அஸ்பர்சனுய், எவையாலும் பற்றமுடியாதவனுய், இருக்கிருன் ; முற்றிலும் தொடர்பற்றவனுய், சொல்லால் குறிப்பிட முடியாதவனுய் ஆனுல் முழுவதிலும் கூறப்படுபவனுய், விளங்குகிருன்.

பூரணமாகவே விளங்கும் சிவன், அவனது சின்னமாயும், தோற்றமாயும் இருக்கும் லிங்கத்திலும் பூரணமாகவே இருக்கிருன். சின்னத்தைக் காட்டிலும் பிரிக்கமுடியாதவனுய், ஆனுல் சுதந்திர ஸ்வரூபமாய் விளங்கும் அச்சிவத்தை இப்பிரபஞ்சமே, அதிசயப் படைப்பே சார்ந்து நிற்கிறது. ஆனுல் இதைச் சார்ந்த நிலேயில் சிவனில்லே.

என்னுடைய சூக்ஷ்ம நிலேயில், ஒன்றிேைடும் சம்பந்தமற்றவனுய் இருப்பதோடு, ஜோதி மயமாகவும், எல்லாவற்றையும் ப்ரகாசப்படுத்துவதாயும் நான் விளங்கவில்லேயா ? என்னுடைய சூக்ஷ்ம தத்துவம் பிரிந்து தனித்து இருப்பதுடன் விரிந்து வியாபித்து, புத்தி, இந்திரியங்கள், உடல் - இவைகளே ஊடுருவி புவனத்தின் தேசகாலங்களேக் கடந்து நிற்கிறதன்ருே !

தன்னேச் சோதித்து, தன் சூக்ஷ்ம நிலேயில் ஆத்மாவின் ரகச்யத்தையும், இறை தோற்றத்தின் அதிசயத்தையும் ஞானி உணருகிருன். தன்னே முழுவதும் பெற்றவனுய், தன்னேயே பிறருக்கு முழுவதும் அளிக்கவல்லவனுய், பூரணமாக அன்பு செய்யும் தன்மையனுய் அவன் விளங்குகிருன். முற்றிலும் தனித்திருக்கும் பொருள் மற்றதற்கு எதையும் வழங்க இயலாது. எல்லா வற்றையும் கடந்து நிற்கும் தன்மை என்பதே எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கும் தன்மைக்கும் காரணமாகிறது. வியாபித்திருத்தல் - அதீதமாக இருத்தல், என்ற மனிதனின் இரண்டு சொற்களும் இறைவனின் ரூப அரூப நிலேகளே, அதிசயப்பொருளின் ஊடுருவி நிற்கும் தன்மையையும், கடந்து நிற்கும் தன்மை யையும் உணர்த்துபவனவாம்.

தெய்வீக சக்தி நிறைந்த அந்த சிலேக்கு எதிரே பக்தர்கள் அம் மாலே யில் வீழ்ந்து வணங்கியதை வன்யா சிந்தித்துக் கொண்டிருந்தார். கர்பக்ருஹத்தில் உள்ள சிலேயைக்காட்டிலும் இப்பக்தர்களே சிவபெருமான் என்பது பொருத்தமில்லேயா ?

யார் வணங்குகிருர் - யாருக்கு வணங்குகிருர் ? தேகத்தில் அபிமானத்தை விட்டநிலேயில், புத்தியுடன் உள்ள தொடர்பை அறவே நீக்கிய நிலேயில், சாக்ஷி ஸ்வரூபம் இறுதியில் அடையப்பட்டதாக ஆகிறது ; அந்நிலேயில் தூயப்ரகாசம் கர்பக்ருஹத்தின் மத்தியில் விளங்கும் சிவலிங்க உருவில் தென்படுகிறது. எல்லா இன்ப உணர்ச்சியையும் சாந்தியையும் கடந்து நிற்பதாக புத்தரால் ஒரு சமயம் உபதேசிக்கப்பட்ட நிலே இதுவே ; புனிதமான சிவலிங்கம் இதயத்தில் உதயமாகி அந்தரங்க உணர்ச்சிகளில் பிரதிபலிக்க வேண்டுமானுல், எல்லாப் பொருள்களேயும் முற்றிலும் விலக்க

வேண்டும். சாந்தி, சாந்த உணர்ச்சி, சாந்தியைப்பற்றிய சிந்தனை, இன்பம், இன்பநினைவு, இன்பஉணர்ச்சி, சிந்தனைகள், கற்பனை வடிவங்கள், நானெனும் அபிமானம், சிந்தனைகளை விட்டுவிட்டோம்-எனும் அபிமானம்-இவை யாவையும் அறவே நீக்கவேண்டும்.

அத்தருணத்தில்தான் இதய கமலம் நேராகி விரியும்; அதன் இலை நீரில் பரவியும் நீரால் நனையாது. அதன்பிறகு தேனீ அதனை வந்தடைந்து இன்ப மதுவை ஆழ்ந்து பருகும்.

அருணாசல சிகரத்தின் ஒளிப் பிழம்பிலும், குக்கிராமத்தின் கோயிலுக்குள் உறைந்திருக்கும் எளிமையான லிங்க உருவிலும், எந்த அத்புத சிவஸ்வரூபம் விளங்குகிறதோ, அதே காவி உடை தரித்து மண்டபத்தினிடையே அமர்ந்திருப்பதாக எண்ணி அந்த லிங்கவடிவமாகிய தனக்கெதிரே அம்மாலையில் பலமுறை நமஸ்கரித்த அத்தனை பக்தர்களைப்பற்றியும் வன்யா சிந்திக்கத் தொடங்கினர்....

சிவனே சிவனை நமஸ்கரிக்கிருன்.
சிவனே சிவனை நோக்கி தன் கரங்களை நீட்டுகிருன்
எல்லாம் சிவலீலை....
எல்லையற்ற வெளியில் உருண்டு செல்லும் அண்டங்களும்
அணுவைச்சுற்றிக் கொண்டு அதனுடன் இணைந்திருக்கும்
அணுத்துளிகளும்
அணுவெடித்து அண்டங்களில் பரவுவதும்
யாவுமே சிவத்தின், லிங்கத்தின் லீலைகள்.
எல்லாத் தந்தையுமாகி, தாயுமாகி சேயுமாகி எல்லா
பிறப்புமாகி சக்தியுடன் சேர்ந்து பூரண மனிதனுய்
சிவசக்தியாய் விளங்கும் தத்துவத்தின் லீலை!

யாரோ ஒருவர் தன்னிடம் பெயர் கேட்பதாகவும் அதைச் சொல்ல தான் மறுப்பதாகவும் வன்யா உணர்ந்தார். அவர் திரும்ப வற்புறுத்தவே தான் இவ்வாறு சொல்லிக்கொண்டிருந்தார்:

என் பெயரை கேட்கும் நீ யார்?
உன்னுல் பெயர் கேட்கப்படும் நான் யார்?
இந்த கேள்வியின் கருத்துதான் என்ன?
இவை யாவுமே பெருமானின் லீலையன்றோ?
நீயும் - நானும் - நம் மொழிகளும்?
அப்படைப்பின் அத்புத ரகச்யம்!
அதன் இருப்பிடமாகிய இதயம்!
அச்சிவலிங்கம்!
ஓம்.

# 6. தனித்த கோயிலில்

காலையில் ஐந்து மணிக்கு திருக்கோயிலூரில் உள்ள சங்கு ஊதிற்று. வன்யா எழுந்து கோயில் கிணற்றுக்குச் சென்று குளிர்ந்த நீரை ஏராளமாக இறைத்து தன் மீது ஊற்றிக்கொண்டு குளித்தார். அவர் திரும்பிய தருணத்திலேயே கைலாஸநாதர் கோயிலின் கர்பக்ருஹத்தைத் திறந்து காலை வழிபாட்டிற்கு முன்னேற்பாடாக சிறு விளக்குகளுக்கு எண்ணெய் ஊற்றினர். விபூதி சம்படத்தை ஒரு கையில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையால் விபூதியை நெற்றியில் வேகமாகப் பூசிக்கொண்டு, உணர்ச்சி வசப்பட்டு ' திருநீறு! திருநீறு! ' என ஓதிக்கொண்டு அமர்ந்திருக்கும் அதிதியை நோக்கி வந்தார்.

வன்யாவின் அருகில் அமர்ந்துகொண்டு, சிறிது நேரம் அந்த தேவாரப் பாடலை பாடிவிட்டு அதன் கருத்தை எடுத்துரைத்தார். தமிழ்நாட்டின் தலை சிறந்த நாயன்மார்களிலும், புலவர்களிலும் ஒருவரான திருஞானசம்பந்தரால் சுமார் 300 வருஷங்களுக்கு முன் மதுரை நோக்கி பயணம் செல்லும் தருவாயில் இது பாடப்பெற்றது. அக்காலத்தில், இராஜ்யம் ஜைனர்களிடையே இருந்துவந்தது. சிவ பக்தர்களுக்கு கொடுமையான இன்னல் விளைவிப்பதில் அரசன் ஒருவித தயக்கமும் காட்டவில்லை. ஒருசமயம் இளவரசன் நோய் வாய்ப்பட்டான். வைத்தியர்கள் அவன் உயிரைக் காப்பாற்ற முயன்றும் பயன்பெறவில்லை. தன்னுடைய மத புரோகிதர்களின் உதவியை அரசன் நாடினன். ஆனால் அப்புரோகிதர்களின் மந்திரங்கள் வைத்தியர்களின் ஔஷதம்போல் பயனற்றுப் போய்விட்டன. சிவபெருமானிடம் ரகச்யமாக பக்தி பூண்டுவந்த அரசியின் வேண்டுகோளுக்கு இணங்கி மதுரையெங்கிலும் பேசப்பட்டு வந்த நாயன்மாரை அரசன் அழைக்க முற்பட்டான். ஞானசம்பந்தர் அரண்மனைக்கு வந்தார்.

நோய் அடைந்திருக்கும் குழந்தையை அணுகினர். " மந்திரமாவது நீறு . . . . " என்று ஓதிக்கொண்டே அக்குழந்தையின் நெற்றியிலும் உடலிலும் திருநீற்றைப் பூசினர். எதிர்பார்த்தபடி குழந்தை குணம் அடைந்தது; அரசன் மதமாற்றம் செய்து கொண்டான். ஜைனர்களை தன் நாட்டிலிருந்து விரட்டினன். தொன்றுதொட்டு நிலவியது போல் மீண்டும் சைவம் மதுரைப் பகுதியில் தழைத்தது . . . .

கைலாஸநாதர் மீண்டும் அப்பாடலை பாடத் தொடங்கினர். இன்னும் அழகாக இருந்தது பாடல்:

வேதத்திலுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு,
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு,
ஓதத் தகுவது நீறு வுண்மையிலுள்ளது நீறு,
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே.

மாணிக்கவாசகரின் அத்புதமான திருப்பள்ளியெழுச்சியை அவர் பாட ஆரம்பித்தார். தமிழ் சைவர்களின் ஒப்புமையற்ற சுப்ரபாதம் - உயிரினங்கள் யாவும் எழுச்சியடையும்போது, சூர்ய உதயத்தை எதிர் நோக்கியிருக்கும்போது அவர்கள் இதைப்பாடுகின்றனர். பள்ளி எழுந்து அருள் பொழிந்து, பக்தர் களுக்கு நலன்கள் தர கோயிலில் குடிகொண்டிருக்கும் சிவபெருமானிடம் ஆர் வத்துடன் செலுத்தப்படும் ஸ்தோத்திரம் இது!

சில நூற்றுண்டுகளுக்குப் பின்னர் அரசாட்சி செய்த மதுரை அரசனிடம் மந்திரியாக பணி புரிந்த புகழ்பெற்ற மாணிக்கவாசகரைப் பற்றி வன்யா இப்போது தெரிந்துகொண்டார். ஒரு தினம், அவர் கவர்ச்சிகரமான உடைகளை அணிந்துகொண்டு அரசனின் அலுவல் ஒன்றை கவனிப்பதன் பொருட்டு பெருந்துறை வழியாகச் சென்ருர். அங்கு, ஓர் ஆலமரத்தின் அடியே, ஒரு தெய்வீகப் புருஷன் மக்களுக்கு உபதேசம் வழங்கிக் கொண்டிருந்தார். வசீகரமான தோற்றமுடைய அமைச்சர் பல்லக்கிலிருந்து கீழே இறங்கி கூட்டத்தினரிடையே கலந்துகொண்டு நின்ருர். ஆனுல் விரை விலேயே தனித்து நிற்க இயலாதவரானுர். தன் கரங்களை சிரத்தின் மேல் கூப்பிக்கொண்டு குருவிற்கு ப்ரதக்ஷிணம் செய்து - தன் பதவியை மறந்த வராய், அரசனின் அலுவலைப்பற்றிய சிந்தனை அற்றவராய் - அவர் பாதங்களில் வீழ்ந்தார். தன் பட்டாடைகளையும், ஆபரணங்களையும் களைந்துவிட்டு, சிப்பந்திகளையும் பல்லக்கையும் துறந்து, உணவுக்கு பிச்சை எடுப்பவராய், மாறி மாறி பல கோவில்களுக்கு தன்னை ஆட்கொண்ட சிவபெருமானைப்பாடிய வண்ணம் செல்லலானுர். இங்கே ஒரு பிச்சைக்காரனுய், அங்கே ஒரு தத்துவ ஞானியாய் - தன்னுல் ஆட்கொள்ளப்பட்ட பக்தர்களின் உள்ளங்களைக் கவரும் பொருட்டு - சிவபெருமான் பலவிதமாகத் தோன்றியிருக்கும் தமிழ் நாட்டில், அவன் மேற்கொள்ளும் பல லீலைகளில் இதுவும் ஒன்று!

கைலாஸநாதர் தன் நண்பரிடமிருந்து (வன்யாவிடமிருந்து) விலகி, தீர்த்தத்தை முறையே சிரஸிலும் அங்கங்களிலும் புரோக்ஷித்துக்கொள்வது, சந்தனத்தை நெற்றியில் தரித்துக்கொண்டு, விபூதியை நெற்றியிலும் மற்ற பதினுறு ஸ்தானங்களிலும் பூசிக்கொள்வது காயத்ரியை ஜபிப்பது, திக் வந்தனம் செய்வது - இவைகளடங்கிய நித்ய கர்மாவாக இருக்கும் சந்த்யா வந்தனத்தை கிணற்றினருகே செய்தார். இதற்குப்பின் கர்பக்ருஹத்திற்கு எதிரே இருக்கும் அர்த்த மண்டபத்தில் தரையில் உட்கார்ந்து கொண்டார். அவருக்கே எதிரே இருந்த உயர்ந்த பலகையில் தீர்த்தம் நிறைந்த கலசங்கள், தயிர், புஷ்பங்கள், அக்ஷதை, மணி, அகல், விளக்குகள் உள்பட வேறு சில உபகரணங்களும் இருந்தன.

வழக்கமான கோயில் பூஜை தொடங்குவதற்கு முன் செய்யப்பட வேண்டிய ஆத்மபூஜை இது, என அவர் விளக்கினர். அவர் கூறிய கருத்தை

வன்யா புரிந்துகொண்ட அளவில் அது தேகத்தின் உள்ளே ப்ரகாசித்துக் கொண்டும், புற உலக பொருள்களுடன் தொடர்புடைய ஐந்து புலனறிவு களிலும், வாழ்க்கைக்கு ஆதாரமாக இருக்கும் ஐந்து ப்ராணன்களிலும் தோற்ற மடைந்திருக்கும் இறை தத்துவத்திற்கு செலுத்தப்படும் ஆகமபூஜை எனலாம்.

ஒவ்வொரு இந்திரியமும், ப்ராணனும் உள்பட மனித உறுப்பின் பாகங்கள் உலகின் பகுதிகளான பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்களோடும் அந்தரிக்ஷமுள்பட ஐந்து திக்குகளோடும், வானவெளியில் ஊர்ந்து செல்லும் சூர்யன், சந்திரன், கிரஹங்கள் இவைகளோடும், மேலுலகங் களில் ஆட்சிசெலுத்தும் தேவதைகளோடும் தொடர்பும் ஒற்றுமையும் உடையனவாகும். ஆதலால் இந்த ஆத்மபூஜையின் கிரியைகளும் மந்த்ரங் களும் ப்ரஹ்மாண்டத்தின், பிரபஞ்ச வாழ்வின் சாரமான ஆத்மாவை நடுவாகக்கொண்டதாய், ச்ருஷ்டியைப்பற்றியதான திகைக்கவைக்கும் தத்துவங் களை வெளிப்படுத்துவதாக இருந்தன. சாந்தோக்ய உபநிஷத்தில் சாண்டில்யர் கானம் செய்வதுபோல். **(14-18. 1-3)**

எந்த என் ஹ்ருதயத்திற்குள் இருக்கும் ஆத்மா பூமியைக் காட்டிலும் பெரியதோ, ஆகாசத்தைக் காட்டிலும் பெரியதோ, எல்லா லோகங்களைக் காட்டிலும் பெரியதோ,

அவனிடம் எல்லா கர்மங்களும், எல்லா காமங்களும், எல்லா கந்தங் களும், எல்லா ரஸங்களும் இருக்கின்றன. எல்லாம் வியாபித்துக்கொண்டு, என் ஹ்ருதயத்தில் உள்ள ஆத்மாவே ப்ரஹ்மம்.

(சாந்தோக்ய உபநிஷத் 3-14-3, 4)

இந்த ப்ரஹ்மபுரத்தின் நடுவில் ஒரு சிறு தாமரை க்ருஹம் இருக்கிறது; அதன் உள் ஒரு ஆகாசம் இருக்கிறது. அதற்குள் எது இருக்கிறதோ அதைத் தேடி அறியவேண்டும்.

இந்த ஆகாசம் எவ்வளவு பெரிதாக இருக்கிறதோ, அவ்வளவு இந்த ஹ்ருதயத்திற்குள் உள்ள ஆகாசம் பெரியதாக இருக்கிறது. அதனிடையே பூலோகமும், ஸ்வர்க்கலோகமும், அக்னியும், வாயுவும் இருக்கின்றன. சூரியனும் சந்திரனும், மின்னல்களும், நக்ஷத்ரங்களும் - எவை எல்லாம் இங்கு இருக்கின்றனவோ, எவை எல்லாம் இங்கு இல்லையோ - அவை யாவும் அடங்கி யிருக்கின்றன. இந்த ஆத்மா ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்கிறது. புண்ய - பாபம், பசி - தாகம், மூப்பு - மரணம் அற்றது. இதுவே ப்ரஹ்மலோகம்.

ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்கும் இவ்வாத்மா தேக பந்தங்களிலிருந்து விடுபட்டு பூரண ஸ்வரூபமாய் நித்யமாய், அபயமாய் ஆவிர்பவிக்கிறான். அதுவே ப்ரஹ்மம். (சாந்தோக்ய உபநிஷத்)

அகரம் கோயிலுடைய காலைப்பூஜையை கைலாஸநாதரின் தந்தை செய்துவந்தார். ஒவ்வொரு தினமும் காலையில், நிலங்களையும், கட்டாந்தரைகளையும் கடந்து சுமார் 5 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஒரு புராதனக் கோயிலுக்கு மழையிலும் வெய்யிலிலும் கைலாஸநாதர் பூஜை செய்வதற்கு செல்வார். அங்கு புறப்படுவதற்கு முன் ஒருபோதும் உணவு அருந்த மாட்டார். கடும் வெய்யிலாய் இருந்தாலும், கார் காலத்து கனமழை பெய்தாலும் செருப்போ, குடையோ, மற்ற மறைவோ எதுவும் பயன்படுத்தமாட்டார்.

கோயிலின் பொருளாதார வசதி மிகவும் குறைந்த அளவில் இருந்தது. தினசரி அன்ன நைவேத்யத்திற்கும் விளக்குகளின் எண்ணெய்க்கும்தான் அது போதுமானது. நைவேத்யமாக அளிக்கப்படும் அன்னத்தின் ஒரு பகுதியை தனது பங்காக, கடவுளின் ப்ரசாதமாகக் கருதி, அவர் பெற்றுக்கொள்வார். அதைத் தவிர வழக்கமாக ரூபாய் இருபதாவது பெற்றுக்கொள்வார். ஆனால், அச்சமயம், ஒரு வருட காலமாகவே அவர் ஒன்றும் பெற்றுக்கொள்ளவில்லை. தொடர்ந்து மழையும் பொய்த்துப் போனதால் கோயில் நிலங்கள் சாகுபடி தரவில்லை என மக்கள் கூறினர். பூஜகரின் மனைவி காமாட்சி அம்மாள் கணவரின் உதாசீனத்தை அங்கீகரிக்காமல் அதைப்பற்றி வன்யாவிடம் வெளிப் படையாகவே புகார் செய்தாள்.

கைலாஸநாதர் குறுக்கிட்டு மனைவியைக் கேட்டார்:

"அந்த காசு இல்லாததால், நான் கடமையை செய்வதிலிருந்தும் நிற்பதா? பத்து வருட காலமாக, தினந்தோறும், பாலசுந்தரேச்வரர் கோயிலுக்குச் சென்று பூஜை செய்துவிட்டு வருகிறேன். இந்த அற்ப பண விஷயத்திற்காக நான் அவ்வாறு செய்வதை நிறுத்துவதா? உண்மைதான்! நம்மையும் குழந்தைகளையும் காப்பாற்றிக்கொள்ளும் அளவிற்குத்தான் நமக்கு வசதி இருக்கிறது. இருப்பினும் கடவுள் அனுக்ரஹத்தால் எந்த ஒரு அவசியமானப் பொருளும் நமக்கு ஒரு போதும் இல்லாமல் போய்விடவில்லை. அந்த இருபது ரூபாய் பணத்திற்காக நான் போக மறுப்பேனுனல், அங்கு ஒரு பூஜையும் நடக்காது. ஆரத்தி ஒருவரும் காண்பிக்கமாட்டார்கள். இறைவன் ப்ரத்யக்ஷமாகி பக்தர்களை உய்வித்த அந்த ஸ்தலம் நம் முன்னோர்கள் பூஜை செய்ததல்லவா? நமக்கு அருள்செய்து கொண்டேயிருக்கும் கடவுளுக்கு இவ்வாறு நான் செய்வது முறையாகுமா?"

இவ்வாறு ஒவ்வொரு தினமும், மழையிலும் வெய்யிலிலும் கைலாஸநாதர் ஊருக்கு வெளியில் இருக்கும் அக்கோயிலின் பூஜையை செய்துவந்தார். வீட்டைவிட்டு உதயத்தில் கிளம்புவார்; பதினேரு அல்லது பன்னிரண்டு மணிக்கு முன்னர் திரும்பமாட்டார்.

அந்தக்கோயிலின் அமைப்பைப்பற்றியும், அதில் இருக்கும் தனிமையைப்பற்றியும், வன்யாவின் ஆவலைத் தூண்டும்படி அவர் விவரித்திருந்த

படியால், வன்யா அவரை 'உடன் வரலாமா?' எனக் கேட்டார். இருவரும் ஒன்ருகப் புறப்பட்டனர்; நெல் வயல்களின் வரப்பின் மீது ஒருவர் பின் ஒருவராக சென்றனர். வாய்க்கால்களையும் புதர்களையும் கடந்து சென்றனர். பூஜகர் நிதானமாக மந்த்ரங்களை உச்சரித்துக்கொண்டே வந்தார்; சில சமயங்களில் மாணிக்கவாசகரின் பாடலையாவது, மற்ற நாயன்மார்களின் பாடலை யாவது உரக்கப்பாடுவார். கொஞ்ச தூரம் சென்றதும், சதுப்பு நிலவெளியை அடைந்ததும், அமைதி மேலும் மேலும் உள்ளத்தைக் கவர்ந்தது. வன்யா அந்த அமைதியை விரும்பி மனமேங்கியிருக்கிருர். அதிசயத்தில் அதிசயம்! எதிரே அடிவானத்தில் அருணுசலத்தின் முழுவடிவம் அற்புதக்காட்சியளித்தது!

இடதுகை பக்கத்தில் வந்த ஒரு பெரிய கிராமத்தை கடந்து முடிவில் அவர்கள் கோயிலை அடைந்தனர். அக்கோயில் மிகவும் சீர்கேடான நிலையில், கவனிப்பற்றதாக இருந்தது என்று பூஜகர் கூறியிருந்தது மிகையல்ல. அக் கோயிலின் ப்ராம்மண நிர்வாகிகள் ஆற்றுக்கு அப்புறம் இருந்தனர். அகரத்தில் உள்ளவர்களைப் போன்று அவர்களிடம் ஈடுபாடு இல்லை. உலக நலன்களிலே அவர்களுடைய முக்ய கவனம் சென்றிருந்தது போலும். கோயிலின் மதில் சுவர்கள் நல்ல முறையில் இருந்தபோதிலும் மற்றவை யாவும் - மடப்பள்ளி முதலியன - இடிந்து கிடந்தன.

பரந்த வெளியின் நடுவே கர்பக்ருஹம், மண்டபம், அர்த்தமண்டபம் இருந்தன. கர்பக்ருஹத்தை சுற்றிலும் கணபதி, முருகன், தக்ஷிணமூர்த்தி போன்ற தெய்வங்களுக்கு ஆகம விதிப்படி சந்நிதிகள் இருந்தன. கிராமத்திலிருந்து வயதான கணக்குப்பிள்ளை ஒருவர் முன்னதாகவே வந்து பூஜகருக்காகக் காத்துக்கெண்டிருந்தார். கதவுகளைத் திறந்து விளக்குகளை ஏற்றிவிட்டு அக்னி வளர்த்து வைத்திருந்தார். உள் கிணற்றிலிருந்து பூஜகர் ஜலம் இறைத்து, சிரஸில் ஆகம முறைப்படி ப்ரோக்ஷணம் செய்துகொண்டு அன்னம் சமைக்க ஆரம்பித்தார்.

பிறகு கோவிலுக்குள் வந்தார். ஒரு புராதன கலாசார ஆராய்ச்சி நிபுணரையோ, கலை ரசிகர்களையோ கவரும்படியாக அங்கு ஒன்றும் இல்லை - இருள் சூழ்ந்த கர்பக்ருஹத்தில் நிராகார ஸ்வரூபத்தின் சின்னமாய், எளிமை யான தோற்றத்துடன் உள்ள சிலை வடிவத்தைத் தவிர. நண்பர் (பூஜகர்) பூஜை செய்துகொண்டிருக்க, வன்யா வெகுநேரம் மண்டபத்தில் இறைவனின் சாந்நித்யத்தில் லயித்து, ஆன்ம த்யானத்தில் இருந்தார்.

அந்த ஸ்தலம் மிகவும் வசீகரமாக இருந்தது - தனித்திருந்த அக்கோயில். அதைப்பெறும் தகுதி உள்ளவர்களுக்கு மட்டும் ஆன்ம த்யானத்தைத் தவிர, வேறு எதையும் தரவில்லை. அங்கு சூழ்ந்திருந்த அமைதியை அருகிலுள்ள கிராமத்திலிருந்தோ, துரிஞ்சல் ஆற்றின் அக்கரையில் இருந்தோ எந்த ஒரு சப்தமும் பாதிக்கவில்லை. என்றுமே வரண்டு போகாத அந்த ஆறு, அதன்

கரையின் மீதுள்ள மரங்கள், அமைதியான வெளிப்புறம். தனக்குள் சென்று, தன்னைக் கடந்து, வேறொன்றும் காணாமல் - அனுபூதி மயமான புனர் ஜென்மத்தின், நிரதிசய அனந்த கேவல ஸ்வரூப அனுபூதியின் அடையாள மாக, ஞாபகமாக - வெளியெங்கிலும் ஒரு சாந்தி நிலவியது. 'ஒரு தினம் இக்கோயிலுக்கே வந்து தங்கும்படி தனக்கு ஓர் வாய்ப்பு நேரும்; அங்கு ஒரு ஓரத்தில் அவர் தங்கியிருக்க கிராமத்திலிருந்து ஆஹாரமும் பண்டங்களும் கொண்டுவந்து தருவார்கள்' என வன்யா கற்பனை செய்துகொண்டிருந்தார்.

திரும்பும்போது, தன் சிந்தனையை வன்யா நண்பரிடம் தெரியப் படுத்தினார். ஆனால் அந்த திட்டத்தில் அவர் (பூஜகர்) உத்சாகம் காட்ட வில்லை.

"ஜனங்கள் ப்ரசாதத்திற்காகவும், தர்சனம் செய்வதற்காகவும் உங்களை அடிக்கடி தொல்லை கொடுத்துக்கொண்டிருப்பர். இந்த கிராமத்தில் உள்ள ப்ராம்மணர்களோ மிகுந்த ச்ரத்தையுடையவர்களல்ல; எவ்வாறு கோயிலை சீர்கெட வைத்திருக்கிறார்கள் என்பதை பார்த்தீர்கள் அல்லவா? சில நாட்கள் சென்றபின் உங்களுக்கு உணவு அனுப்புவதில் சலிப்புக்கொள்வர். சமையல் சாமான்களை நீங்கள் உடன் எடுத்துச்செல்லும் எண்ணம் கொண்டீரானால் அது இங்குள்ள காலிப்பையன்களுக்கு உதவி செய்வதுபோல் ஆகும். இந்தத் தனிமையான இடத்தில் நீங்கள் வைத்திருக்கும் பண்டங்கள் யாவையும் சுலபமாகத் திருடிக்கொண்டுவிடலாம்."

அவருடைய கோயிலில் வசித்துக்கொண்டிருக்கும் இந்த அயல்நாட்டு சாதுவின் முழுப்பொறுப்பையும் கைலாஸநாதர் ஏற்றுக்கொண்டிருந்தார்: 'அச்சாது ஒரு இன்னலையும் அடையாமல் இருக்கவேண்டும்' எனக் கவலை கொண்டார். இவ்வாறிருப்பினும், கைலாஸநாதரால் வன்யாவின் கருத்தை மாற்றமுடியவில்லை. இருவரும் குருவிடம் விஷயத்தை ஒப்படைத்துவிட முடிவு செய்தனர். ஸ்வாமிஜீ ஆமோதித்தால் எல்லாக் கஷ்டங்களுமே - அவரே (பூஜகரே) முதலில் ஒப்புக்கொண்ட மாதிரி - மாயமாய் விலகிவிடும் ஆனால், அதற்கான நேரம் வரவில்லை!

வன்யா அக்கிராமத்தின் அல்லது கோயிலின் விருந்தாளியாக - ஏன், அக்கைலாஸநாதனான பெருமானே அப்புதிய மனிதரை ஏற்று அவருடைய தேவைகளை, அவன் பெயரால் பக்தர்கள் கவனிக்கும்படி ஆட்கொண்டதனால், சிவபெருமானின் விருந்தினராக - தங்கியிருந்தார்.

இம்முறையில் வன்யா மூன்று அத்புதமான தினங்களை வெளிப்பார் வைக்குத் தென்படாத அந்த கிராமத்தில் ஹிந்து சகோதரர்களிடையே, அவர் களில் ஒருவராய் - ஆனால் துறவு பூண்டு இருப்பதால் தனித்த மரியாதைக்கு உரியவராய் - கழித்தார். தன் வாழ்வில் பல ஹிந்து மதத்தினரை

அவர் கண்டிருக்கிறுர். மனித உறவிலே வாணிபம் தொடங்கி எந்தத் துறை யிலும் - சமூகத்தொடர்பிலும் ச்நேக முறையிலும், ஆன்மீக லட்சியத்தில் உள்ள பற்றுதலின் ஒற்றுமை காரணமாகவும் - ஹிந்து மதத்தினரோடு பழகி யிருக்கிறுர். அவர்களைப்பற்றி வெகுவாக படித்திருக்கின்றுர்; ஆனுல் அவர் களுடைய வாழ்வோடு ஏற்பட்ட நெருங்கிய தொடர்பு அவருக்கு புதிய அறிவைத் தந்தது. ஒருவரைத் தெருவிலோ, அலுவலகத்திலோ சந்திப்பது என்பதில் விசேஷம் ஒன்றும் இல்லை. அச்சமயங்களில் நடை உடை பாவனைகளில் ஒரு பகட்டு உண்டாகிறது. ஒருவரைத் தன் ஆஸ்ரமத்தில் சந்திக்கும்போதும் இது நேரிடும். ஆனுல், ஒருவரை அவர் இல்லத்திலே, குடும்பத்தினரிடையே அல்லது கிராமத்தினரிடையே காண்பது என்பது வேறுனது. இவ்வுண்மை பண்டைய ஆசாரங்களிலும் பழக்க வழக்கங்களிலும் இருக்கும் நல்ல அம்சங் களை அனுபவத்தில் கடைப்பிடிக்கும் அகரத்திற்கு விசேஷமாகப் பொருந்தும்.

வீட்டிற்குத் திரும்பியவுடன் ஹிந்து மதத்தினன் பகட்டை விலக்கிவிடு கிறுன். தினசரி வழக்கங்களில் - ஸ்நானம் போஜனம் இவைகளிலிருந்து பூஜை செய்தல், கோயிலுக்குச் செல்லுதல், போன்ற பல கணக்கற்ற அன்ருட செயல்களில் - இயற்கையாக ஈடுபட்டிருக்கும் மனிதனை நீ காண்கிருய்.

நிச்சயமாக, ஹிந்து மதத்திலும் ஆசாரமற்ற நடத்தையினரும், கோயி லில் பூஜை செய்வதை சம்பாதிப்பதற்கு ஊழியமாகக் கருதும் பூஜகர்களும் தெய்வீகப் போர்வையை உபயோகித்துக் கொள்ளும் மோசடிக்காரர்களும், பகட்டு ஆசாமிகளும் கடவுளின் பெயரை உபயோகிக்கும் எண்ணமே நிறைந்த மூடஜனங்களும், தற்பெருமை படைத்தவர்களும் இருக்கின்றனர். ஆனுல் - இதற்கு இறைவனுக்கு நன்றி செலுத்துவோமாக! - நகரங்களிலும், கிராமங்களி லும் தன் பண்பாட்டில் பெருமிதம் வைத்திருப்பதுடன் கடவுள் வழிபாட்டில் கடமையுணர்ச்சியோடு இருக்கும் ஏராளமானவர்களைக் காணலாம். எது எப்படி யாயினும், அகரத்தில் செலவழித்த சில நாட்களும் அதன்பிறகு ஞானுனந்தரின் ஆஸ்ரமத்தில் தங்கிய இரண்டு வாரங்களும், 'இறைவன் தான் அளித்த நலன்கள் யாவையும் ஒருபோதும் எடுத்துக்கொண்டு விடவில்லை' என்ற பேருண்மையை வன்யாவிற்கு உணர்த்தி, மிகுந்த ஆனந்தத்தை அளித்தன. தங்களுடைய திறமையின்மையினுலோ, கர்வத்தினுலோ, தம் வம்சத்திற்குரிய லக்ஷ்யத்தை அடைவதில் பெரும்பாலோர் தவறினுலும், இறைவனின் அருளால் தர்மங்களைக் கடைப்பிடிப்பதிலும், ஆன்ம உணர்வு அடைவதில் ஈடுபடுவதிலும் உறுதியாக உள்ள ஒரு சிலராயினும் இருக்கின்றனர்.

இதைத் தவிர, கைலாஸநாதரின் கோயிலையும், - வெளியிலிருக்கும் கோயிலுக்குச் சென்றதிலும், தினமும் நதிக்கு சென்றதிலும் செலவழிக்கப்பட்ட மூன்று தினங்களையும் பற்றி வேறு என்ன கூறயிருக்கிறது? அன்னம் அளித் தவர்களைப்பற்றி கூறவேண்டும் எனக்கருதலாம். அநேகமாக காலையில் மூன்று இல்லங்களிலிருந்து வன்யாவிற்கு பால் அனுப்பப்பட்டது. மத்யானம் அவருக்கு

உணவு அளிக்கும் வாய்ப்பு யார் எடுத்துக்கொள்வது என்பதில் அவர்களுக்கிடையே வாக்குவாதம் இருக்கும்; மாலையில் பால், பழம், தித்திப்பு பக்ஷணங்கள் வேறு சில வீடுகளிலிருந்து அவருக்கு அளிக்கப்படும். பகலிலாவது அல்லது மாலையில் பூஜைக்குப் பிறகாவது ஜனங்கள் அவர் அருகில் உட்கார்ந்து கொள்வதும் உண்டு. அவர்கள் அதிகமாக கேள்வி கேட்க மாட்டார்கள். ஏனெனில் வன்யா பேசுவதில் விருப்பமுடையவர் அல்ல என்பது அவர்களுக்குத் தெரியும். அது அவர்களுக்கு நல்லதாகத் தோன்றியது. ஒரு சந்நியாசி வெளி வ்யவஹாரங்களைப்பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆத்மீக விஷயத்தைப் பற்றி எனில், தன் வாழ்க்கையின் மூலமாகவும் ஆத்மநிஷ்டையின் மூலமாகவும் அவன் திறமைபட உபதேசிக்கவில்லையா?

குழந்தைகள்கூட அவருக்கு நமஸ்காரம் செய்துவிட்டு அவர் அருகே உட்கார விரும்புவர். சில சமயம் அவர்கள் பள்ளியிலிருந்து திரும்பும்போது வருவர் - நிஜார்கள் அணிந்தவாறு, சொக்காய்கள் இடுப்பிடையே வெளி வந்தவாறு அவர்கள் வருவர். சீக்கிரமே அந்த வேஷத்தை நீக்கிவிட்டு வந்துவிடுவார்கள். இப்போது அவர்கள் சுத்தமான வேஷ்டி இடுப்பில் கட்டிக் கொண்டிருப்பர். அவர்கள் மார்புகள் திறந்தவாறு இருக்கும். வயதான பிள்ளைகளின் மார்புகளில் பூணூல் குறுக்கே இருக்கும்; வெள்ளையான விபூதி பட்டைகள் அவர்களின் நெற்றிகளிலேயும் கைகளிலும் ப்ரகாசிக்கும். நீண்ட முடி தோள் பட்டைகளில் தொங்கிக்கொண்டிருக்கும். அவர்கள் வன்யாவிடம் கொஞ்சம் பேசுவதுண்டு. தங்கள் பெயர்களைக் கூறுவார்கள். தங்கள் நண்பர்களின் பெயர்களைக் கூறுவார்கள். அவர்கள் விளையாட்டுகளையும் பாடங்களையும் பற்றி விவரிப்பார்கள். வன்யா அவர்களை த்யானம் செய்வதற்காக பத்மாஸனம் போட்டு, - கால்களை மடக்கிக் கொண்டு, பாதங்களை தொடைகளில் வைத்துக் கொண்டு, கைகளை முழங்கால்கள் மீது சின்முத்ரை செய்துவைத்துக்கொண்டு, முதுகை செங்குத்தாக நிறுத்திக்கொண்டு பேச்சும் சலனமும் அற்று- அமரும்படி செய்வார்.

நீண்டநேரம் அவர்களில் பெரும்பாலோர் சிறிய சலனமும் இல்லாமலும் கண்களைத் திருப்பாமலும் இருந்தனர் என்பதைப் பார்ப்பதற்கு மிகவும் வியப்பாக இருந்தது.

கைலாஸநாதரின் குமாரன் மிகவும் ச்ரத்தையுடைய பையன். உண்மையிலேயே சாப்பிடும் நேரம், பள்ளியில் இருக்கும் நேரம் இவைகளைத் தவிர வன்யாவை விட்டு ஒருபோதும் அவன் விலகியதில்லை. அவனுடைய பெயர் ஷண்முகம். தமிழில் ஷண்முகன் எனக்கூறுவர். முருகன் எனவும் சுப்ரமண்யன் எனவும் அழைக்கப்படும் ஆறுமுகங்கள் கொண்ட கடவுளின் பெயர் அது. அந்தக் கடவுள்தான் தன் ஒரே த்ருஷ்டியினுல் உலகம் முழுவதையும் திக், தேசம், காலம் இவைகளைக் கடந்த நிலையையும் அறிகிருன். முருகப் பெருமானுக்கு உரிய ஓர் இரவில் ஜனித்ததால் அக்குழந்தைக்கு அப்பெயர்

அளிக்கப்பட்டது. அச்சமயம் அவனுக்கு ஒன்பது வயது. அந்தக் கோயிலே அவனுடையதுதான் என்று ஒருவருக்குத் தோன்றக்கூடும். தந்தையையும் தாத்தாவையும் போன்று அவனும், சிவபெருமானின் - கைலாஸ அதிபதியின்- அக்கோயிலின் பாதுகாப்பாளராய், ஆகமபூஜை செய்பவராய் தன் வாழ்வு முழுவதையும் அர்ப்பணிக்கக்கூடும்.

அவன் பக்தியுடன் சந்நிதிகளை ப்ரதக்ஷிணம் செய்வதும், மூர்த்திகள் எதிரே ஸ்தோத்ரம் செய்வதும், கல்லாலான சிவலிங்கத்தின் எதிரே நமஸ்காரம் செய்வதும் பார்ப்பதற்கு உணர்ச்சி ஊட்டும் வகையில் இருந்தன. உச்சரிக்க வேண்டிய மந்த்ரங்கள் முழுவதும் தனக்குச் சொல்லவராது என்றும், ஆனால் எவ்வாறு புஷ்பங்களால் அர்ச்சிக்க வேண்டும், தீபாரதனையின்போது எவ்வாறு தீபங்களை காட்டவேண்டும் என்று தனக்கு நன்ருகத் தெரியும் என்று வன்யாவிடம் அவன் ரகஸ்யமாகச் சொன்னான். ‘தீட்டு’ ஏற்பட்டபடியால் தன் தந்தை பூஜை செய்ய இயலாதபோது தந்தையின் ஸ்தானத்தில் இருந்து பூஜைசெய்ய அவனுக்கு வாய்ப்பு கிடைத்திருக்கிறது.

‘இந்தக் குழந்தைக்கு கடவுளின் அன்பை எவ்வாறு உணரவைப்பது ?’ என வன்யா யோசித்தார். இதயத்தில் கடவுள் இருப்பதைப்பற்றி அவனுக்குக் கூறுவது அந்த வயதிற்கு மிகவும் எட்டிய விஷயமாகும். ஆதலால் அவனை அமைதியாக உட்காரச் செய்து ‘தத்துவம் தானே வெளிப்படுத்திக் கொள்ளும்’ என உறுதி கூறி, ஒன்றும் உச்சரிக்காமல் திறந்த இதயத்தில் மன நாட்டத்தை செலுத்துமாறு சொல்வார்.

ஒரு மாலை அக்குழந்தை பேயைப்பற்றி பேசிக்கொண்டிருந்தது. பேய் என்னும் சொல் ‘ஆவி’ ‘பிசாசு’ என்பவைகளைக் குறிக்கும். முன் இரவு ஷண்முகனின் சிநேகிதன் ரோட்டிலிருந்து கிராமத்திற்கு வரும் பாதையில் ஒரு பேயைப் பார்த்திருந்தான். “பயம்-ஸ்வாமி, பயம்-ஸ்வாமி, எனக்கு பயமாயிருக்கு, எனக்கு பயமாயிருக்கு” என அப்பாலன் கிலியுடன் கூறினான்.

“எதைக்கண்டு பயம் ?” என வன்யா மிருதுவாகக் கேட்டார்.

“அந்தப் பேயைக் கண்டுதான், அது என்னைப்பார்த்தால் கடித்து விடும் அல்லது எடுத்துப்போய்விடும், அல்லது கொன்றுவிடும்.”

“பேய் அவ்வளவு பலமானதா ? உன்னுடைய அப்பா உன்னோடு இருப்பதாக வைத்துக்கொள். அப்போதும் நீ பயப்படுவாயா ?”

“கண்டிப்பாய் இல்லை, ஸ்வாமி”.

“அப்படியானால் உன்னைக் குழந்தைபோன்று நேசிக்கும் பகவான் - இறைவன் - உன் இதயத்தில் இருந்துகொண்டு உன்னுடன் எப்போதும் இல்லையா ?”

“ஆமாம் இருக்கிறார் ஸ்வாமி”.

" அந்த பகவான் பேயைக்காட்டிலும் பலமுள்ளவரில்லையா ?"

" சந்தேகமில்லாமல் அப்படித்தான் "

" பகவான் உன்னுடன் இருக்கும்போது, பிறகு நீ ஏன் பேய்களைக் கண்டு பயப்படுகிறாய் ?"

" அப்படியானால் பேய்களைக் கண்டு பயப்படவேண்டாமா ?"

" கண்டிப்பாக வேண்டாம்,"

" நல்லது ஸ்வாமி, நான் இனிமேல் பயப்படமாட்டேன் ".

கோயில் கதவு மூடிவிட்ட பிறகும் ஷண்முகன் மண்டபத்தின் அருகே அடிக்கடி வருவான் - அவன் வீடு கோயிலோடு இணைந்திருப்பதால். அவன் வரும் சில சமயங்களில் வன்யா த்யானத்தில் ஆழ்ந்திருப்பார். அப்போது அக்குழந்தை அமைதியாக நமஸ்காரம் செய்துவிட்டு அவர் முன் உட்கார்ந்து கொள்ளும். அவர் அவனை நோக்குவார். தன் பெரிய கண்களால் அவன் மீது பார்வைகளை பொழிவார். வன்யாவைப் பொறுத்தவரை அவனுடைய விசாலமான கண்களை ஆழ்ந்து நோக்கி, அவைகளைக் கடந்து, இறைவன் ப்ரஸன்னம் ஆகியிருக்கும் அக்குழந்தையின் இதயத்தை நோக்குவதில் ஈடுபடுவார்.

புதன்கிழமை மாலை ஸ்ரீ ஞானானந்தர் (தபோவனம்) வந்துவிட்டதாக செய்தி வந்தது. வன்யா அவர்களிடமிருந்து இறுதியாக, சிற்றுண்டியைப் பெற்றுக்கொண்டு தனக்கு உபசரிப்பு செய்தவர்களிடமிருந்து விடைபெற்றார்.

அவர் முக்ய சாலையை அடைந்த அளவிலேயே அவரை நோக்கி வந்த கார் ஒன்று அவர் அருகே நின்றது. ஸ்வாமியின் சிஷ்யர்களில் ஒருவர் அதில் இருந்தார். குருவை சித்தலிங்க மடத்திலிருந்து அழைத்துக்கொண்டுவந்த பிறகு, இப்போது வன்யாவை அழைத்துச்செல்ல வந்து கொண்டிருந்தார். "ஸ்வாமிக்காகக் காத்திருக்கும்போது தன் இல்லத்திற்கு வந்து உணவு எடுத்துக்கொண்டிருக்கலாமே" என அன்புடன் கடுமையாக அவர் கேட்டார். " உங்களை உபசரிப்பதில் மிகவும் மகிழ்ச்சி அடைவேன் " என்று கூறினார். மேலும் அவர் கூறியதாவது "உண்மையில் நீங்கள் இங்கு வந்திருக்கும் செய்தி எனக்கு எட்டியதும் உங்களை அழைத்துவர ஒருவரை அனுப்பினேன். ஆனால் நீங்கள் மறைந்துவிட்டீர்கள்."

முன் தினம் மாலையில் துரிஞ்சல் ஆற்றிலிருந்து திரும்பிக்கொண்டிருக்கும் போது வன்யா மற்றுமொரு பக்தரை சந்தித்தார். அவரும் திருக்கோவிலூரில் இருக்கும் தன் இல்லத்திற்கு அழைத்திருந்தார். ஆனால் ஏசுவின் உபதேசம் எவ்விடத்திலும் பொருந்துமல்லவா ? "ஒவ்வொரு வீடாக அலைந்துகொண்டு இருக்காதே. எந்த இல்லத்தில் நீ தங்கும் வரை உன்னை அன்புடன் வரவேற்கின்றனரோ அவர்களின் உபசரிப்பை எளிமையான முறையில் ஏற்றுக்கொள்". நடப்பது யாவும் இறைவனின் அருள்லீலை அல்லவா ?

# 7. அருள்மாரி பொழிந்த தினங்கள்

குருநாதரோடு தங்கியிருந்த இரண்டு வாரங்கள் - சாந்தியும் நிறைவும் அளித்த தினங்கள், மனிதன் திரும்பத் திரும்ப வாழ விரும்பும் உன்னத காலங்கள், தான் உண்மை ஸ்வரூபத்தில் ஒடுங்கி, வெளித்தோற்றங்களைத் துறந்து, தத்துவத்தோடு ஒன்றிய நிலையில் ஒருவன் இருப்பதாக உணரும் ஒப்பற்ற நேரங்கள்! - இவைகளை வன்யா ஒருபோதும் மறக்க இயலாது.

தினப்படியான நிகழ்ச்சிகள் வெகுசில. அவைகளில் மாறுதல் ஏற்படுவதும் உண்டு. விடியற்காலையில் தபோவனத்திற்குள் இருக்கும் ஒரு பெரிய கிணற்றின் அருகில் குளிக்க வேண்டும் அல்லது சற்று தொலைவிலுள்ள ஆற்றில் குளிக்கலாம். ஆனால் அந்த ஆறு துரதிருஷ்டவசமாக வரண்டு இருந்தது. மார்ச் மாதத்தில் அநேகமாக வரண்டுதான் இருக்கும். 9 அல்லது 10 மணி அளவில் போஜனம் நடைபெறும். மத்யானம் சிற்றுண்டி இருக்கும். பகல் முழுவதும் அருகிலுள்ள இடங்களிலிருந்து பக்தர்கள் வந்து சென்றுகொண்டிருப்பர். ஞானியின் தர்சனத்திற்காக வெகுதூரத்திலிருந்தும் அன்பர்கள் வருவார்கள். வன்யா அங்கு இருந்த தினங்களில் ஒரு ஞாயிற்றுக்கிழமை அன்று, யாத்ரீகர்கள், பக்தர்கள், சாதகர்கள் காலை 7 மணியிலிருந்து இரவு 8 வரை வந்தவண்ணம் இருந்தார்கள்; தன் பகல் உணவிற்காக குருவினால் பத்து நிமிடங்கள் கூட விலகுவதற்கு கடினமாக இருந்தது.

உணவு அநேகமாக ஒரு விருந்தாகவே இருந்தது. நகரத்திலிருந்தோ அல்லது அகரத்திலிருந்தோ ஒரு பக்தர் தன் குடும்பத்தில் யாருடைய பிறந்த நாளுக்காகவாவது அல்லது வேறு ஏதாவது விசேஷத்திற்காகவாவது அந்த தினத்தில் உணவு அளிப்பதாக இருக்கலாம். இல்லாவிடில் குருவிற்கு போஜனம் செய்வித்து அதனால் அவருடைய அனுக்ரஹம் பெறவேண்டும் என்ற எண்ணத்தினாலும் விருந்தளிக்கலாம். ஏனெனில் ஹிந்துக்களின் அனுஷ்டானங்களிலும் சமூகப் பழக்கங்களிலும் அன்னதானம் முக்கியமான அம்சமாகும்.

இம்மாதிரியான தினங்களில் போஜனத்திற்கு முன் அர்க்யமளித்தல் ஒரு விசேஷ க்ரியை ஆகும். சாப்பிடும் இடமாகவும் அமைந்திருக்கும் சாமான்களின் அறையினருகே ஸ்வாமியை ஒரு கல்லின் மீது நிற்கும்படி கோருவர். பக்தர் அவர் பாதங்களை, ஜலத்தைவிட்டு கைகளினால் பக்தியுடன் மெதுவாக அலம்பி அவைகளுக்கு சந்தனம் இடுவார். பிறகு கைகளினால் வந்தனம் செய்துகொண்டு அவரை வலம் வந்து மிக்க பக்தியுடன் வீழ்ந்து நமஸ்கரிப்பார். காஷாய உடை தரித்திருந்ததால் வன்யாவிற்கும் இந்த உபசாரம் நடைபெற்றது.

எத்தனை எத்தனை உண்மைகள் அந்த தினங்களில் வன்யா கற்றுக் கொண்டார்! அதே சமயத்தில் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்து தான்

செய்யக்கூடிய தவறுகளிலிருந்தோ, அல்லது தமிழ் நாட்டில் நல்ல ஆசாரங்களை அனுஷ்டிக்கும் பிராம்மணர்களின் பழக்கத்திற்கு விரோதமான செயல்களிலிருந்தோ காப்பாற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. மற்றவரைக் காட்டிலும் அவர் விஷயத்தில் மன்னித்துவிடுவது என்பது இயலாததாகும் - ஏனெனில் இந்தியாவில் எல்லாவற்றையும் துறந்தவர்களுக்கே உரிய காவியுடை சின்னத்தை அவர் தரித்திருந்தார்!

உதாரணமாக ஒரு நாள் காலை இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த ஒருவருக்கு ஸ்ரீ ஞானனந்தர் காபி அளிக்க ஏற்பாடு செய்தார். இங்கிதம் தெரியாத அந்த விருந்தாளி ஐரோப்பியர்களும் வடக்கு நாட்டவர்களும் அருவருப்பான முறையில் செய்வது போன்று கோப்பையை உதடுகளில் வைத்து குடித்தார். இதன் விளைவு உயர்ந்த ஜாதியைச் சார்ந்த யாவரும் இந்த பாத்திரத்தை எடுத்து அலம்பி வைப்பதற்குக்கூட தொடமாட்டார்கள். அதே சமயத்தில் அங்கு அருகில் ப்ரான்ஸ் பாஷை கற்றுக்கொடுக்கும் ஒரு ப்ரான்ஸ் மாது இருந்தாள். அவள் ஆஸ்ரமத்தில் இருக்கும் நாள் முழுவதும் பானம் பருகுவதையே தவிர்த்துவிட்டாள். ஏனெனில், அவள் தான் விளக்கியபடி, தமிழர்கள் குடிப்பது போன்று அவளால் குடிக்க பழக்கிக்கொள்ள முடியவில்லை. ஆனல் அங்குள்ள பழக்கத்திற்கு புறம்பாகவும் அவள் நடக்க விரும்பவில்லை.

ஒரு தினம் எல்லோரும் போஜனத்திற்காக தரையில் வாழை இலைகளுக்கு முன் உட்கார்ந்து ப்ரோக்ஷணம், ஆசமனம், முதலியவைகளை ச்ரத்தையுடன் செய்துகொண்டிருக்கும்போது ஸ்வாமி ஞானனந்தர், திடீர் என நிமிர்ந்து நோக்கி விருந்தினரை "நீங்கள் செய்வதின் கருத்தை உணர்ந்து இருக்கிறீர்களா?" எனக் கேட்டார். அங்கிருந்த ப்ராம்மணர்கள் - இந்த கிரியையை அவர்கள் குழந்தைப் பருவத்திலிருந்தே தினமும் இரண்டு மூன்று தடவைகள் செய்தும், அவர்கள் எல்லா மந்த்ரங்களையும் உச்சரிக்க வல்லவர்களாயிருந்தும் - தங்களுக்குத் தெரியாது என கூற வேண்டியிருந்தது.

"நீங்கள் செய்வதின் கருத்தை புரிந்துகொள்ளவேண்டும்" என குரு மீண்டும் தொடர்ந்து கூறினர்" "இல்லாவிடில் க்ரியைகளை செய்வதாலும் மந்த்ரங்களை உச்சரிப்பதாலும் என்ன பயன்? இங்கு கவனியுங்கள். முதலில் ஜலம் தெளித்து பூமியையும் இலையையும் சுத்தம் செய்கிறீர்கள். பிறகு உள்ளங்கையில் சிறுதுளி தீர்த்தம் எடுத்து அன்னமுள்ள இலையைச்சுற்றி ப்ரதக்ஷிணமாக தெளிக்கிறீர்கள். இவைகள் யாவும், உங்களுடைய ச்ரத்தைக்குத் தகுந்தவாறு, கவனத்திற்கு தகுந்தபடி உங்கள் தேகத்தை போஷிப்பதற்காக, ஆகாரத்தை தனிப்படுத்துவதற்காக, உண்மையிலேயே தூய்மைப்படுத்துவதற்காக ஆகிறது. நம் வாழ்வில் ஆபாசத் தன்மை படைத்தது ஒன்றும் இல்லை. ஒன்றுமே, எந்த ஒரு அவயவத்தின் செயலும், எந்த இந்த்ரியத்தின்

தொழிலும் நமக்குள்ளும் புறமாயும் சூழ்ந்திருக்கும் புனித தத்துவத்தின் சம்பந்தமற்றதாக இல்லை. ஜலம் புனிதப்படுத்தும் சக்தி படைத்தவைகளில் ஒன்று. நீர் தேகங்களின் அசுத்தங்களை நீக்குவதோடு ஆசாரக் குறைகளினுல் ஏற்படும் அசுத்தியையும் நீக்கி அதைப்போன்று முக்கியமான உள்ளத் தூய் மைக்கும் ஒரு உபாயமாகிறது. எந்த ஒரு தெய்வீகக் கார்யத்திற்கும் முன்பாக ஸ்நானம் இருக்கிறது. இந்த ஒரு அனுஷ்டானத்தைக் கடைபிடிக்காமல் நீங்கள் கோவிலுக்குச் செல்வீர்களா? நீங்கள் வீட்டுக்குத் திரும்பியபோது கால்களை அலம்பாமல் உள்ளே நுழையலாமா? உள் அந்தரங்க மனதை எந்த ஒன்றும் தூய்மையற்றதாக ஆக்கக்கூடாது என்பதற்கு இது ஓர் அடையாளம்: கோவிலி லிருந்து அல்லது ஆற்றிலிருந்து வரும்போது இந்தப் பழக்கத்திற்கு விலக்கு இருப்பது இக்கருத்தை ஊர்ஜிதம் செய்கிறதல்லவா?

தேகம் இறைவனின் ஆலயம். உள்ளே இருக்கும் இறைவனுக்காகத் தான் - வேள்வியில் அளிப்பதுபோல் - அன்னத்தை இதை தகித்துவிடும் ஐந்து ப்ராணன்களுக்கும் அளிக்கிறோம். ஆத்மாவிற்காக செய்யப்படும் அக்னி ஹோத்ரம் போன்று, ஐந்து துளிகள் சாப்பிட்டுவிட்டு அன்னம் புஜிக்க ஆரம்பிக்கிறீர்களல்லவா? நீங்கள் உண்ணும் அன்னம் புனிதமானது. நீங்கள் உணவு அருந்தும் நேரமும் புனிதமானது. ஆதலால்தான் அவற்றை அசுத்தமான, அழுக்கான கரங்களால் தொடக்கூடாது. பாபச்செயலுடைய ஒருவன் தயாரித்த உணவை உண்பீர்களானுல், அவன் பாபத்தில் நீங்களும் பங்குபெற்று இவ்வுலகிலும் மேல் உலகிலும் துன்பம் உறுவீர்கள். அசுத்தமான கரங்களால் உண்பது மனதிற்கு அசுத்தியை உண்டாக்கி ஆசாரத்தில் இருந்து விலகும்படி செய்கிறது. இக்காரணத்தினுலேயே உங்கள் இலையில் உணவு பரிமாறியதும், அதை வலமாக உள்ளங்கையில் உள்ள நீரால் சுற்றி பரிஷேசனம் செய்து, மற்ற அசுத்தமான, தூய்மையற்ற, பதார்த்தங்களி லிருந்து பிரித்து உங்கள் தேகத்தை போஷிக்கும் சக்தியுடையதாக செய்கிறீர்கள். பிறகு ஒரு துளி ஜலம், உணவை ஏற்று ஜீரணம் செய்து கொள்ளும் வயிற்றை சுத்தம் செய்யும் பாவனையாக, அருந்துகிறீர்கள். பிறகு ஒரு துளி ஜலம் பூமியில் விட்டு அதைத் தொடுகிறீர்கள் - கடவுள் கொடுத்த எல்லா நலன்களையும் நமக்குப் பெற்றுத் தரும் பூமாதேவிக்கு நன்றி செலுத்து வதற்காக.''

ஸ்வாமி ஞானுனந்தர் உபசரிப்பதில் அளவு கடந்தவிருப்பமுள்ளவர். விருந்து அளிப்பவர்களையும் அல்லது அன்னம் தயாரிப்பவர்களையும் திகைப்பு அடையும்படி செய்துவிடுவார். பதினைந்து அன்பர்களை எதிர்பார்த்து சமைத்திருப்பார்கள்; வந்திருப்பவர்கள் எல்லோரையும் ஸ்வாமிஜி திடீரென அழைத்து சாப்பிடச் சொல்வார். ஆதலால் 20, 30 அல்லது 40 பேர் அதிகம் விருந்துக்கு வந்துவிடுவர். ஒரு சமயம் எல்லோரும் திகில் அடையும் வண்ணம் ஞானுனந்தர் கோபமடைந்து தனக்கு வழக்கமில்லாத முறையில் கடுமையாகப்

பேசினுர். காரணம் என்னவெனில், ஆஸ்ரம புது சமையல்காரன் மிகவும் பக்தியுடையவனுக இருந்தும், ஆஸ்ரம வழக்கத்தைத் தெரிந்துகொண்டு இராததனுல், எவ்வளவு முயற்சி செய்தும் வந்திருந்தவர்கள் எல்லோருக்கும் அவனுல் உணவு அளிக்கமுடியவில்லை. எல்லோரும் சாப்பிட்டாலொழிய அல்லது அவ்வாறு சொன்னுலொழிய தன் உணவை எடுத்துக்கொள்வதற்கு உட்கார குரு சம்மதிக்கமாட்டார். மறுதினம், சமையல்காரர் விடியற்காலையில் வந்து நமஸ்கரித்துவிட்டு "எத்தனை பேருக்கு அன்னம் தயாரிப்பது?" எனக் கேட்டார். "அறுபது பேருக்கு" என ஞானுனந்தர் சுருக்கமாக பதில் கூறினுர். உண்மையில், அன்றைய தினம் சாப்பிடும் வேளையில் சுமார் பன்னிரண்டு விருந்தினரே இருந்தனர்.

மாலையில், வழக்கமாக சந்நியாசிகளைத் தவிர மற்றவர்களுக்காக அன்னம் தயாரிக்கப்படும். அகரத்துப் பெண்மணிகள் தவருமல் கொண்டுவரும் பழங்களையும், பக்ஷணங்களையும் குருவும் மற்ற சந்நியாசிகளும் எடுத்துக் கொள்வர். சாதுக்கள் ஒரு நாளில் ஒரு தடவை மட்டுமே அன்னம் எடுத்துக் கொள்வது வழக்கம்.

வன்யா முதல் சந்திப்பின்போது கண்டிருந்தபடி, அகரத்து ப்ராம்மணர் கள் மந்திரங்கள் சொல்ல வழக்கமாக மாலையில் வருவார்கள். கைலாஸநாதர் மிகவும் ச்ரத்தையோடு உள்ளவர்களில் ஒருவர்; பள்ளியில்லாதபோது ஷண்முகனும் உடன்வரத் தவறமாட்டான். ஸுக்தங்களும், ஸஹஸ்ரநாமாக் களும் உச்சரித்த பின்னர் கைலாஸநாதர் ஞானசம்பந்தர் அல்லது மாணிக்க வாசகர் இயற்றிய தேவாரப் பாடல்களைப் பாடுவார். ஒரு மாலை குருவின் சந்நிதியில் விசேஷ பூஜை செய்ய வேண்டுமென்று பூஜா உபகரணங்கள் கொண்டு வந்தார். அவர் பூஜை செய்வதையும் பாடல்கள் பாடுவதையும் கவனிப்பதற்கு மிகவும் களிப்பாக இருக்கும்; ஏனெனில் அவர் அவைகளில் தன்னை முற்றிலும் மறந்து விடுவார்.

மேலும் அவருடைய குரல் அதிசய த்வனிகளோடு கூடியதாக இருந்தது; பூஜா க்ரியைகளை ஒத்து இருந்ததோடு அழகும் ஆர்வமும் பெற்றிருந்தது.

ஸ்வாமி ஞானுனந்தரோடு ஆலோசனை செய்து கொண்டபடி வன்யா ஆஸ்ரமத்தில் தான் தங்கிக் கொண்டிருக்கும் காலம் வரை குருவோடு மட்டும் பேசுவதைத் தவிர மற்ற யாரிடமும் - வரும் அன்பர்களின் பயனற்ற உரை யாடல்களையும் கேள்விகளையும் தவிர்ப்பதற்காக - பேசாமல் இருக்க நிச்சயித் திருந்தார். ஞானியிடமிருந்து எதைக் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டுமோ அதை செய்து வந்தார். பெரும்பாலும் தர்சனம் கொடுக்கும் அறையில் அவருக்குப் பக்கத்தில் அமர்ந்தார். காஷாய உடையை அணிந்திருந்ததால் இந்த இடம் அவருக்கு உரியதுதான்; ஆனுல் அவர் இத்தருணங்களில் உரையாடல்களைக் கேட்பதிலேயே நிம்மதி பெற்றுர். குருநாதரோடு அவர்

நிகழ்த்திய உன்னத உரையாடல்கள் வேறொருவரும் இல்லாதபோது நிகழ்ந்தன; அல்லது காலையிலோ, மாலையிலோ, ஆஸ்ரமத்தைச் சேர்ந்த நெருங்கியவர் களைத் தவிர வேறு யாரும் இல்லாதபோது நிகழ்ந்தன.

மேற்கு நாட்டவர்கள் வந்தபோது, வன்யா பண்பை அனுசரிக்க விரும்பியவராய், அங்கு இருக்கும் ப்ராம்மணர்கள் யாரிடமாவது மொழி பெயர்க்கும் பணியை, கௌரவத்தை விட்டுவிடுவார். உண்மையில் அவர்கள் குரு சொல்வதை தன் அபிப்ராயத்தை ஒட்டி மொழிபெயர்த்துக் கூறுவர். மேலும் அது மிகவும் குழப்பமான முறையில் இருக்கும். மொழிபெயர்ப்பாளர் குருவின் மொழிகளை தன் கருத்திற்கிணங்க புரிந்துகொள்வார்; தான் புரிந்து கொண்ட சிறிய அம்சத்தை, தான் கருதும் வண்ணம் அம்மேல் நாட்டவர் மதச்சார்புடையவர் என நினைத்து, அதற்குத் தக்கவாறு கூறுவார். இது பெரும்பாலும் பொதுவான உபந்யாஸம் போல் இருக்கும். மேலும் இந்திய பாஷைகளில் வேதாந்த அனுபூதி நிலைகளைப்பற்றி வழங்கும் சொற்களுக்கும், சங்கேதங்களுக்கும் நேரான சொற்கள் மேல்நாட்டு பாஷைகளில் இல்லை. மேலும், அந்த பயிற்சியற்ற மொழிபெயர்ப்பாளர் கிறிஸ்துவமத, ஹிந்துமத தெய்வீக அனுபூதிகளைப் பற்றி ஏதோ சில கருத்துக்களை சொல்லளவிலேயே தெரிந்துகொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு எவ்வாறு மொழிபெயர்த்து உதவ இயலும்? யாராவது ஒருவர் ஸ்ரீ ஞானனந்தரிடம் மொழிபெயர்ப்பில் இருக்கும் ச்ரமத்தைப்பற்றி கூறுவார்களானால், அவர் இவ்வாறு பதிலளிப்பார்: "உண்மை யான ஞானத்தையும் அனுபூதியையும், மேலைநாட்டு பாஷைகள் மூலம் தெரிவிக்கக்கூடும் என எவ்வாறு நீங்கள் நம்பலாம்? அந்த பாஷைகள் சப்த ப்ரஹ்மத்தை - அந்த தெய்வீக சக்தியை, அதாவது அனுபூதியை அளிக்கவல்ல திறமையை - பெற்றிருக்கவில்லை. அவைகள் விஞ்ஞானத்தை, உலகியல் சாஸ்திரங்களை விளக்கவல்லதாக அமைந்திருக்கின்றன; ஆனால் ஞானத்தைப் பற்றி, உத்தமமான ப்ரஹ்ம வித்யையைப்பற்றி சம்பாஷிப்பதற்கு அவை முற்றிலும் பயன்படா."

சில சமயங்களில், வழக்கமாக மொழிபெயர்ப்பவர்கள் இல்லாதபோது, இந்த வேலையை வன்யா செய்யநேரிடும். குருநாதரின் கருத்துக்களையும் உபதேசங்களையும் அவர் சரியான முறையில் மொழிபெயர்த்துக் கூறியதாக சிலர் நினைத்தனர். 'இதன் ரகஸ்யம் என்ன?' என அவர்கள் கேட்டனர். நிச்சயமாகவே புத்தியினாலோ, சிந்தனையினாலோ இல்லாமல் வேறு நிலையில் சப்தத்தை க்ரஹிக்கவேண்டும். ஒரு தினம், மேல் நாட்டினர் ஒருவரின் ஐயத்தை குருநாதரிடம் தமிழில் எடுத்து சொல்லியபோது, 'நீங்கள் அவருக்கு என்ன பதில் தருவீர்கள்?' என அவர் கேட்டார். வன்யா பதிலளிக்கையில் ஸ்வாமி வழக்கமாக கூறும் பாடல் ஒன்றையும் கூறினார்போலும். "சரி, நீங்கள் ஏன் தாமதம் செய்யவேண்டும்? நீங்களே ஏன் அவருக்கு விளக்கக் கூடாது?" என ஸ்வாமி கூறினார்.

மற்றொரு தினம் பீட்டர் என்ற ஐரிஷ் நாட்டைச் சேர்ந்த ஒரு இளைஞர் வந்திருந்தார். பலர் சென்றுகொண்டிருந்தமாதிரி இந்தியா முழுவதும் ஒவ்வொரு குருவாக மாறி மாறி, அனுபூதி நிலைகளாகக் கருதப்படும் சித்திகளை நாடி அவர் அலைந்துகொண்டிருந்தார். அவர் டப்ளினில் (Dublin) ஓர் சிற்றுண்டி சாலையில் பணியாளராக இருந்துகொண்டிருந்தார். அப்போது கீழை நாடு தன்னை அழைப்பதாக உணர்ந்தார். ஒரு கணமும் தாமதிக்காமல், ஹிமாசலத்திற்கு செல்வதற்காக எல்லா உடமைகளையும் விட்டுவிட்டார். தான் வந்த வழியில் இருக்கும் ஸவாமியையோ, ஆஸ்ரமத்தையோ அவர் சென்று பார்க்க தவறவில்லை. இங்கிலையில் திருக்கோயிலூர் அடைந்தார். தபோவனத்தில் சேவையில் ஈடுபட்ட மாதர்கள் பீட்டரிடம் விசேஷ அன்பு செலுத்தினர். அவருக்கு சாதம் பரிமாறி, சாம்பார், ரஸம் முதலியவைகள் பரிமாறி, பொதுவாக அன்னையின் பரிவை காட்டினர். ஒரு மாலை சிற்றுண்டிக்குப் பிறகு, ஸ்ரீ ஞானனந்தர் வன்யாவைப் பார்த்து "எதற்காக இந்தியா வந்தாய்?" என பீட்டரிடம் கேட்குமாறு கூறினர். "யோகத்திற்காக" என பீட்டர் பதிலளித்தார். "நீ யோகம் செய்ய விரும்புவாயானல் 'யார் யோகம் செய்ய விரும்புவது?' என்ற கேள்வியை உன்னைக் கேட்பதில் தொடங்குவாயாக. வேறு எவ்வித நாட்டத்தையும், படித்தல், பேசுதல், ப்ரயாணம் செய்தல், யாத்திரை செல்லுதல், போன்றவைகளை அகற்றி அதற்குரிய விடையை அறிய முற்படுவாயாக. அதுவே யோகமாகும்."

ஸ்ரீ ஞானனந்தரின் உபதேசம் மஹரிஷியின் உபதேசத்தை ஒத்திருந்தது - ஆனல் அதனை வழங்கும் முறையிலும் உபதேசத்தின் தரத்திலும் வேறுபாடு இருந்தன.

ஸ்ரீ ரமணரை பொறுத்தவரையில் தன்னிடம் வரும் சாதகர் விஷயமாக அவர் ஒரு பொறுப்பு உணர்ச்சி ஏற்றுக்கொண்டதில்லை, எந்த ஒரு நபரையும் தனது சிஷ்யனக அவர் குறிப்பிட்டதில்லை. தன்னையும் யாராவது ஒருவருக்கு குருவாகக் கருதியதில்லை. மக்கள் வருவார்கள், நமஸ்கரிப்பார்கள், தங்கள் பொருளாதார, மானசீக அல்லது ஆத்மீக ப்ரச்னைகளைப்பற்றி அவரிடம் கூறுவார்கள். அவரை சில கேள்விகள் கேட்பார்கள். அவர்கள் அதிர்ஷ்டசாலிகளாக இருப்பின் அவரிடமிருந்து ஆறுதலாக சில மொழிகளைப் பெறுவர். பொதுவாக அவருடைய சம்பாஷணை ஆஸ்ரமத்தை சேர்ந்தவர்களுடன் அல்லது வழக்கமாக வரும் பக்தர்களுடன்தான் இருக்கும். மேலும் அஹம் (நான்) எனும் அபிமானமோ, மாயையினல் தோற்றுவிக்கப்பட்ட ப்ரபஞ்ச சிந்தனைகளோ அற்ற நிலையில்தான் எப்போதாவது பேசினல் அவர் பேச்சு இருக்கும்.

ஆஸ்ரமத்தின் நிழலில் குழுமியிருந்த பக்தர்களுக்கு இது மிகவும் பொருத்தமாகத்தான் அமைந்திருந்தது. மாதர்கள் - நேர்த்தியான ஆபரணங்களையும், பட்டாடைகளையும் உடுத்திக்கொண்டு காலையும், மாலையும் சடங்கு

அனுஷ்டிப்பது போல், குறித்த நேரத்தில் பகவானின் தர்சனத்திற்காக வரு வார்கள். சிறிது நேரம் த்யானம் செய்துவிட்டு, அவர் உடலிலிருந்து வெளி வருவதாகச் சொல்லப்பட்ட ஞான சக்தியில் லயித்திருப்பதாக பாவனை செய் வர். முன்வாசலின் அறைகளில் ஆத்மீக விஷயத்தைப்பற்றிய உரையாடல்கள் உச்சத்வனியில் நிகழும்; மெள்ளமாக டீ அருந்திகொண்டே அவர்கள் அடைந் திருக்கும் ஆத்மீக முன்னேற்றத்தைப்பற்றி விவாதிப்பர். தன்னைச்சூழ்ந்திருக்கும் பகட்டுத்தனத்தை மிகவும் புத்தி நுட்பமுள்ள ஸ்ரீ ரமணர் அறிந்துகொள்ளாமல் இல்லை. ஆனால் அதைப்பற்றி ஒரு வார்த்தையும் அவர் எப்போதும் பேச வில்லை; அவர் எந்த கட்டளையும் போடுவதில்லை. எந்தவிதத்திலும் தன்னை சுற்றியிருப்பவர்கள் வாழ்க்கைகளில் அவர் குறுக்கிடுவதில்லை.

ஞானனந்தர், இதற்கு மாறாக, உதாசீனமாக இருப்பதில் நம்பிக்கை கொண்டவர் அல்ல. இயல்பாகவே குடும்ப வாழ்விலும், சமூகப் பொறுப்பு களிலும் ஈடுபட்ட வெளிபக்தர்கள் ஸ்வாமியை தரிசிக்க வருவதிலும் பணிவிடை செய்து அருள்பெற்றுச் செல்வதிலும் அக்கறையுடன் இருப்பதை அவர் கண்டிக்க வில்லை. அவர்களுக்கு சற்று உத்சாகமும் அளிப்பார். சற்று பகட்டுத்தனம் இருந்தாலும் பொருட்படுத்த மாட்டார். அவர்கள் அடைந்திருக்கும் மனப் பக்குவத்தைக் கருதியும், அவர்கள் நிலையில் இதற்குமேல் ஒன்றும் கடைப்பிடிக்க முடியாது என்று கருதியும் அவர்கள் நடைமுறையை போதுமானதாக எண்ணி னார். ஆனால் ஒருவர் உலக கடமைகளை விட்டு விலகியவராய், தெய்வீக வாழ்க்கைக்கும் ஆத்ம விசாரத்திற்கும் தன்னை அர்ப்பணித்துக்கொண்டவராய் கூறினால், ஞானனந்தர் கடுமையாக இருந்தார். எவனொருவனும் ஞானமார்க் கத்தை விளையாட்டாக அணுகக்கூடாது - கடவுள் விஷயத்தில் இது அதிகமாகப் பொருந்தும். ஈச்வர தர்சனத்திற்கு உபாயமாக இருக்கும் பாதையில் செல்ல தன்னை முழுவதும் ஈடுபடுத்திக்கொண்டதாக கருதுபவனுக்கு, அவ்வாறு செய் யாமல் இருக்க ஒரு உரிமையும் இல்லை. த்யானத்தைப்பற்றி ஒருவன் அளவ ளாவிக்கொண்டிருக்கமாட்டான்; எல்லாவற்றையும் விட்டு விட்டு த்யானத்தில் மூழ்கியிருப்பான். தன்னை சிஷ்யனாகக் கூறிக்கொள்பவனே ஒத்துக்கொள்வது போல் வாழ்க்கையில் எந்தவித அவசரமும் தேவை இல்லை. ஒவ்வொரு இடமாக போய்க்கொண்டிருப்பதையும் எல்லாவற்றையும் பற்றி எல்லோரிடமும் பேசுவதையும், கைக்குக் கிடைத்தப் புத்தகத்தை எல்லாம் படிப்பதையும் அவன் விட்டுவிடவேண்டும். ஓரிடத்தில் நிலைபெறவேண்டும், உள் நாட்டத்திலேயே மனதை ஈடுபடுத்தவேண்டும். ஒரு தினம் இந்த கடினமான - ஆனால் வெளிப் படையான - உண்மைகளை ஆஸ்ரமத்திற்கு வழக்கமாக வரும் பக்தர் ஒருவருக்கு உணர்த்தவேண்டிய பொறுப்பை, குருநாதரின் சார்பில், வன்யா நிறைவேற்ற வேண்டியிருந்தது.

ஒரு பிற்பகல், திருவண்ணுமலையிலிருந்து சிலர் கூட்டமாக வந்திருந்தனர். சம்பாஷணையின் போது ஞானனந்தர் தன்னிடம் ஏற்கனவே

வந்திருந்த பலரைப்பற்றி கேட்டார். பேச்சுப்போக்கில், சித்தலிங்கமடம் வழியாக முந்திய மாதம் சென்ற ஒரு ஆங்கில மாதுவைப்பற்றி தகவல் விசாரித்தார். அந்த மாது ஒரு பிரயாணம் செல்ல இருப்பதாக யாரோ ஒருவர் பதில் கூறினர். செல்லவிருந்த இடங்கள் கொஞ்சமாக இல்லை! பிலிப்பைன்ஸ், ஈராக், ஜப்பான், ஹாலண்டு, கானடா இவைகளும் வேறு சில நாடுகளும் திட்டத்தில் அடங்கியிருந்தன. இவையெல்லாம் என்னவாக இருக்கும் என்பதைப்பற்றி ஞானனந்தர் சற்று ஆழ்ந்து சிந்தனைசெய்து புரிந்துகொள்ள வேண்டியிருந்தது. நிலைமையைப் புரிந்துகொண்டதும், மனதை இடிக்கும்படியான பதிலளித்தார்: என்ன அவள் வயது? இது என்ன வேடிக்கை? அவள் வயது 70க்கு மேல் இருக்கும். குடும்பப் பொறுப்புகள் ஒன்றும் அவளுக்குக் கிடையாது. தனக்குத் தேவையான எல்லா வசதிகளையும் பெற்றிருக்கிருள். எவருடைய உதவியும் அவள் நாடவேண்டியது இல்லை. எவருக்கும் இவள் செய்யவேண்டிய கடமை இல்லை. திருவண்ணுமலைக்கு த்யானம் செய்ய வந்திருப்பதாகவும், ஆத்மவிசாரத்திலேயே ஈடுபடப் போவ தாகவும் அவள் கூறுகிருள். இப்போது உலகம் முழுவதும் சுற்ற கிளம்புகிருள்! இதனல் அவளுக்கு என்ன கிடைக்கும்? கடவுளிடத்திலோ, ஞானப்பயிற்சி யிலோ ஒருவர் இம்மாதிரி விளையாட்டாக இருப்பதற்கில்லை. அவள் உண்மை யாகவும், ஆத்மீக முன்னேற்றத்தில் ஆர்வமுள்ளவளாகவும் இருந்தால் அருணுசலரின் பாதங்களை விட்டு அகலக்கூடாது. எல்லாவித பயனற்ற பேச்சையும், பொழுதுபோக்கையும் விட்டுவிட்டு முழுமனதுடன் மௌனத்திலும், த்யானத்திலும் ஈடுபடவேண்டும்.

அன்றைய மாலையே இந்த சம்பாஷணை குறிப்பிட்ட மாதுவுக்கு தெரியப்படுத்தப்பட்டது. அவள் ஆத்திரமடைந்து கூறினுள்: "எதற்காக இந்த ஆசாமி குறுக்கிடுகிருர்? பகவானைப் போல் இவர் ஞானியில்லை என்பது நன்ருகத் தெரிகிறது. மக்களின் சொந்த வ்யவஹாரங்களில் அவர் தலையிட மாட்டார். அவர் எந்த மனிதனையும் ஆமோதித்தோ கண்டித்தோ பேசிய தில்லை. ஞானி ஒருவர் இருந்தால் அவர்தான் ஞானி."

## 8. அவச்யமான ஒன்று...

ஞானனந்தரின் கருத்தில் த்யானம் முக்கியமான ஒரு ஞான சாதன மாகும். அவர் நோக்கில் அதுவே ராஜமார்க்கம் - ப்ரஹ்மஸ்வரூபத்தை தன் ஹ்ருதய குகையில் உணருவதற்கு பயன்தரவல்ல ஒரே நெறி. எவனெருவன் சமூகப் பொறுப்புகளிலிருந்து விடுபட்டவனுய் இந்த அனுபூதியைப் பெற விரும்புகிருனே அவன் அமைதியுடன் த்யானத்தை செய்வதற்காக எல்லா வற்றையும் விட்டுவிடவேண்டும். தேகத்தின் இன்றியமையாத தேவைகளுக்கு - உணவு, நீர், தங்க இடம் முதலியவைகளுக்கு - ஏற்பாடு செய்துகொண்ட

பிறகு அவனுக்கு ஒரே லஷ்யம்தான், ஒரே தொழில்தான் இருக்க வேண்டும். அதுதான் அந்தர்முகமடைந்த மனதுடன் ஆத்மசிந்தனம்.

'த்யானம் என அவர் எதை கூறுகிறுர்?' என்று தெரிந்துகொள்வதற்காக ஸ்ரீ ஞானனந்தரை விளக்கிக்கூறுமாறு கோரினுல், அவர் சந்தோஷத்துடன் சிறு வரிகளைக் கொண்ட தமிழ் பாடல்களைப் பாடி சலிப்படையாமல் அவைகளை விளக்கியும் கூறுவார்.

உள் மனத்தே ஒடுங்கி உள்ளொளி காண்பாயே!
சிந்தனை நீங்கி சின்மயமாய் நிற்பாயே!
பாழான இடத்திலே பரிபூரணனைப் பார்ப்பாயே!
பொருளினைக் காணுமல் புண்ணியனைக் காண்பாயே!
சித்தம் ஒடுங்கியே சிவமதுவாய் திகழ்வாயே!
த்யானம் இதுவே, கேட்டிடுவாய் நன்மகனே!

ஓர் தினம் தமிழ்நாட்டு இளைஞர் ஒருவர் தபோவனம் வந்திருந்தார். வெகுதூரத்திலிருந்து அவர் வந்திருந்தார்; அவருடைய எண்ணம் என்னவெனில் அருகில் உள்ள நகரத்தில் ஒரு அறையில் வசித்துக்கொண்டு, குறிப்பிட்ட சமயங்களில் வந்து குருநாதரிடம் உபதேசம் பெற்று, அவருடைய கவனிப்பில் த்யானத்தில் ஈடுபடவேண்டும் என்பதாகும். தன்னுடைய திட்டத்தை ஸ்வாமியிடம் விளக்கிக் கூறி, ஒழிந்த நேரத்தில் சம்ஸ்க்ருதம் கற்றுக்கொள்ளப் போவதாயும் கூறினுர். ஸ்ரீ ஞானனந்தர் இடையே கூறியதாவது: "அறைக்காகவோ, உணவு வசதிக்காகவோ நீ கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. நீ நன்ருக இங்கு தங்கிக் கொள்ளலாம்; இங்கேயே உணவும் அருந்தலாம். மீதி நேரங்களில் நீ த்யானம் செய்துகொண்டிருக்கலாம். சம்ஸ்க்ருதம் கற்றுக்கொள்வதைப்பற்றி, சொல்வதைக் கேட்பாயாக. நூற்றுக்கணக்கான மொழிகள் உலகில் இருப்பதாகக் கூறுகின்றனர். சம்ஸ்க்ருதம் பயில ஆரம்பிப்பாய், பிறகு மராத்தி, வங்கம், சைனம் என படித்துக்கொண்டே இருப்பாய். உன்னுடைய தாய்பாஷை தமிழ் இல்லையா? நீ திருக்குறள் படித்திருக்கிறுய். இந்தக் குறள்களை கவனி. (சில குறள்கள் குறிப்பிடுகிறுர்) இவைகள் ஆன்மீகத்திற்குத் தேவையான எல்லாவற்றையும் கூறவில்லையா? இதைத் தவிர தேவாரம், திருவாசகம், இன்னும் பல நூல்கள் பண்டைய ஞானிகள் எழுதி வைத்திருக்கிறுர்கள். வேதாந்த நூல்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு இருக்கின்றன. ஆன்ம ஞானம் அடைவதற்கு தேவையான எல்லாம் உன் மொழியிலேயே இருக்கின்றது. தேவையற்ற விஷயங்களை ஏராளமாகக் கற்றுக்கொள்வதில் ஏன் நேரத்தை வீணுக்குகிறுய்? நீ த்யானத்தில் முன்னேற வேண்டுமானுல் புதிதாகக் கற்றுக்கொள்வதை விட, ஏற்கனவே நீ கற்றுக்கொண்டவைகளை அறவே மறப்பதுதான் முக்கியம்.

ஓர் சமயம், "ஓரளவு தவமும் விரதானுஷ்டானமும் த்யானத்திற்கு உதவியாக இருக்க வேண்டியது அவச்யமல்லவா?" என வன்யா குருநாதரைக் கேட்டார். மேலும் வன்யா கூறினர்: "உங்களுடைய வாழ்க்கையிலேயே பார்த்தால் ஏகாந்தவாஸம், விரதம், இந்தியா முழுவதும் க்ஷேத்ராடனம் போன்றவைகளை காஷ்மீரில் இருந்த நாட்களில் செய்துவரவில்லையா? ஆதலால் சந்நியாசியாய், சம்பிரதாய முறைப்படி ஒரு பொருளையும் சேகரிக்காமல், வறுமையாக இருக்கவேண்டியதில்லையா?"

ஸ்ரீ ஞானனந்தர் பதிலளித்தார்:

"த்யானம் ஒன்றுதான் அவச்யம். மற்றவையெல்லாம் - தவம், தனிமை, கண்விழிப்பு, விரதம், எளிமை - இவையாவும் அவ்வளவு முக்கியமன்று, ஞானத்தோடு நேர் தொடர்புடையதன்று. அந்தரங்க மனதில் ஆழ்ந்து த்யானத்தில் மூழ்கியிருப்பதற்கு இடையூருக என்ன என்ன இருக்கிறதோ அவை யாவற்றையும் முற்றிலும் விடுதலே முக்கியமாகும். சந்நியாசம் என்பதும் தேவையற்றது. இந்தக் காவியுடை நாம் தரிப்பது நமக்காக அல்ல மற்றவர்களுக்காகத்தான். இதை அணிந்திருக்கும் மனிதரை 'பயனற்ற வ்யவஹாரங்களைப் பேசி தொல்லை கொடுக்கக் கூடாது; அவருடைய தனிமையையும் தெய்வீக ஈடுபாட்டையும் பாதுகாக்க எல்லாவிதத்திலும் உதவவேண்டும்,' என்பதைத் தெரிவிப்பதற்காக காவியுடை தரித்திருப்பது மற்றவர்களுக்கு ஒரு அறிகுறி. ஒருவர் அலுவலக ஆடை அணிவது மற்றவர்களுக்காகவே அல்லாமல் தனக்காக அல்ல. மற்றவர்களைப்போல் சாதாரண ஆடை உடுத்திக்கொண்டிருந்தாலும் ஹோட்டல் சிப்பந்தியோ, பஸ் கண்டக்டரோ தங்கள் வேலைகளை நன்கு செய்யமுடியும். அவர்களுடைய விசேஷ உடை, மற்றவர்கள் குறிப்பிட்ட ப்ரச்னைகளுக்கு அவர்களை அணுக வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. ஆன்மசாந்தியின் பொருட்டு சந்நியாசியை மக்கள் நாடிவருவதால் சந்நியாசிக்கும் இது பொருந்தும். போலீஸ் காவலாளியின் காக்கி உடை, ஜனங்கள் சற்று தூரத்திலேயே இருக்கவும், தவறு செய்பவர்கள் உஷாராக இருப்பதற்கும் உதவுகிறது. இதற்கும் சாதுவின் காவியுடைக்கும் சற்று ஒற்றுமை இருக்கிறதல்லவா?

ஒருநாள் கூட்டமாக சிலர் தர்சனத்திற்கு வந்திருந்தபோது, ஸ்ரீ ஞானனந்தர் தனக்குப் பிடித்தமான பாடலை பாடினர்.

சில அன்பர்கள் அப்பாடலின் கருத்தை தமிழிலும், ஆங்கிலத்திலும் தங்கள் புலமைக்குத் தகுந்தவாறு விளக்கினர். ஒருவர் 'இல்லை' என்னும் சப்தத்தை **'VOID'** என்ற சொல்லால் மொழிபெயர்த்துக் கூறினர். மற்றும் ஒருவர் **'VOID'** என்ற சொல் சம்ஸ்க்ருதத்தில் 'சூன்யம்' என்ற சொல்லின் கருத்துடையதாகும் எனக்கூறினர்.

"அப்படியானுல் இயல்பாகவே எந்த நாமத்தினுலும் குறிக்கமுடியாத ஓர் பொருளுக்கு எப்படியாவது ஓர் நாமம் சூட்ட ஏன் முற்படுகிறீர்கள்? ஒரு தன்மையும் இல்லாத பொருளை ஓர் நாமத்தினுல் குறிப்பிட்டால் அது அத் தன்மையை உடைய பொருளாக ஆகிவிடுகிறது. ஒன்றுமில்லாத இடத்தில் 'சூன்யம்' இருக்கிறது என்று கூறினுல் அங்கு ஒரு இருப்பை குறிப்பிட்டதாக ஆகிவிடுகிறதல்லவா? பிறகு திரும்பவும் இதே நிலையை தவிர்க்க வேண்டி யிருக்கிறது" என ஸ்ரீ ஞானுனந்தர் குறிப்பிட்டார்.

இந்த சம்பாஷனையை வன்யா பிறகு நினைவு கூர்ந்தபோது, த்யானத் தில் தொடர்ந்து செய்யவேண்டியதாக புத்தர் கூறியிருந்த நுட்பமான அப் யாஸங்களை, அவர் அந்நேரம்வரை புரிந்துகொள்ளவில்லை என உணர்ந்தார். - சிந்தனையைக் கடந்து, சுக அனுபவத்தைக் கடந்து, சாந்தி உணர்வையும் கடந்து செல்லவேண்டும். 'படிப்படியான இந்த அப்யாஸ நிலைகளில் ஆதார மாக இருந்த நிஷேத உணர்வுகளையும் ஒருவன் கடந்துசெல்லவேண்டும்; விதி முகமாகவும் நிஷேத முகமாகவும் இருக்கும் அறிவுகளைக் கடந்து, 'தான் சாந்தியாக இருக்கிறேம்' என்ற உணர்வையும் அற்றவனுய் பூரணமான சாந்த நிலையை அடைகிறுன். ஏனெனில், இதய ஆகாசத்தில் - 'அங்கு' 'இங்கு' 'இது' 'அது' என்று சுட்டிக்காட்டவொணுத பரவெளியில்-லயமடைந்து விடுகிறுன்.

யாரோ ஒருவர் "ப்ராணுயாமம் - ப்ராணனை அடக்குவது - உதவி செய்கிறதா?" என ஞானுனந்தரைக் கேட்டார். பொதுவாக மற்றவர்கள் அங்கீகரிப்பது போன்று அவரும் ப்ராணுயாமம் உதவி செய்வதாகக் கூறினுர்; ஆனுல் ப்ராணனை கட்டுப்படுத்துவதற்காகக் கூறப்படும் பயிற்சிகளை அவர் குறிப்பிடவில்லை. இப்பயிற்சிகள் மேலெழுந்தவாரியான பயனைத்தான் அளிக்கவல்லன. அதாவது ப்ராண ஓட்டத்தை மிருதுவாக்கி, தேக சேஷ்டை களை சீரான முறையில் ஒழுங்குபடுத்தி, மனதிலும் சாந்த உணர்ச்சிகளை அது தோற்றுவிக்கிறது. ரமண மஹரிஷி அபிப்ராயப்படுவது போன்று, ஞானுனந்தரும் 'ப்ராணனைக் கட்டுப்படுத்துவது என்பது முக்யமாக உள், வெளி ச்வாசங்களை ஊன்றி தொடர்ந்து கவனிப்பது' என்று கருதினுர்.

மேலும் அவர் விளக்கினுர் "எங்கு ப்ராணன் தோன்றுகிறதோ, அங்கு தான் எண்ணங்களும் எழுகின்றன. முக்கியமானதென்னவெனில் எண்ணம் உதயமாகும் இடத்தில் மனதை நிறுத்தி கவனத்துடன் இருந்து எந்த புற விஷயங்களாலும் சிந்தனைகளாலும் அலைவுருமல் உணர்வின் தூய்மையையும் சாந்தியையும் காக்கவேண்டும். எண்ணங்கள் எழும்போது, - இயற்கையாகவே இது நிகழக்கூடியது - வெளியுலகத்திற்கு உன்னை அடித்துச் செல்லும் அவ்வலைகளை ஊடுருவி கவனித்து "இந்த எண்ணம் யாருக்கு எழுகிறது?" என்று எல்லா சிந்தனைகளுக்கும் அடிப்படையான எண்ணத்தை ஆராய்வது, மனதை அதனது இருப்பிடத்தில் நிறுத்துவதற்கு உபாயமாம். இம்முறையில்

நீ உன் இயல்பான இடத்திற்கு - இதய ஆகாசத்திற்கு, எல்லையற்ற வெளிக்கு - செல்கிறாய்; ஸ்வரூபத்தில் - 'நான்' எனும் உணர்ச்சியற்ற இடத்தில் - லயமடைகிறாய். ச்வாசங்களைக் கூர்ந்து கவனிப்பது மனதை உள்நாட்டமடையச் செய்கிறது. ச்வாசத்தை கவனித்து அது உதயமாகும் இடத்திற்குச் சென்றால் நீயும் உன் ஸ்வரூப உணர்வை அடைகிறாய்.

எங்கு 'நான்' தோன்றுகிறதோ, அங்கு ப்ராணனும் உதயமாகிறது. எங்கு 'நான்' எனும் உணர்ச்சி தோன்றுகிறதோ, அங்கு சிந்தனையும் எழுகிறது. ச்வாசத்திற்கு ஆதாரம் எதுவோ 'நான்' எனும் எண்ணத்திற்கும் ஆதாரம் அதுவே. 'நான்' எனும் உணர்ச்சியின் ஆதாரம் எப்போது விளங்குகிறதோ அப்போது ஆத்மா ப்ரகாசமாகிறது.

அன்றைய தினத்தில் வந்திருப்பவர்களிடையே பல ஆச்ரமங்களையும், ஸ்வாமிகளையும் பார்த்துவிட்டு வந்திருந்த ஒரு சாதகர் இருந்தார். அவர் இந்த குருவினிடம் (ஞானானந்தரிடம்) மிகுந்த ஆர்வமும், அவருடைய உபதேசத்தில் பூரண நம்பிக்கையும் கொண்டிருந்தார். ஆனால் இந்த குருவே 'அவர் இறுதியாக முடிவுசெய்து ஏகாந்தமாயும் மௌனமாயும் த்யானத்தில் பல வருஷங்கள் ஈடுபட வேண்டும்' என வற்புறுத்தினால் அவருக்கு சிந்தனை வேறுவிதமாக எழலாம். எந்த குருவும் தவறாமல் பெற்றிருக்கும் சித்திகளையும் சக்தியையும் உபயோகப்படுத்தி, மந்திரக்கோலால் செயல்படுத்துவது போன்று, அந்த குருநாதர் தான் அடிக்கடி கூறும் இதயகுகைக்கு நேராக அந்த சாதகரை அழைத்துச் சென்றால் மிகவும் எளிதாக இருக்கும் அல்லவா? ராமகிருஷ்ணர் விவேகாநந்தருக்கு ஞானோதயம் உண்டாக்கியது போல் வேறு சில உதாரணங்களும் இந்தியாவில் இல்லையா? அவருடைய மதத்திலேயே (அச்சாதகர் முதலில் கிறிஸ்தவ மதத்தை சார்ந்திருந்தார்) டார்சல் நகரத்தைச் சேர்ந்த பால் (Paul) டமாஸ்கஸ் நகரின் எல்லையில் கடவுளின் கருணையால் ஆட்கொள்ளப்படவில்லையா? உண்மையில், ஈச்வர பக்தியில் முழுவதும் தோய்ந்து அஹங்கதையோ, அச்ரத்தையோ இல்லாமல் இருக்கும் மனிதர்கள் கண்டிப்பாக இருந்திருக்கிறார்கள். அவர்களைப் பொறுத்தவரையில் பரஸ்வரூபத்தை அவர்களுக்கு மறைக்கும் திரையைத்தான் விலக்கவேண்டும்; அவர்களுடைய மனம் இயற்கையான வேகத்தினாலேயே பரதத்வத்தை நோக்கி பறந்து செல்லும்.

அச்சாதகர் படிப்படியாக சம்பாஷணையை - இறைவனின் பிரதிநிதியான குருவின் - அருளைப் பற்றிய விஷயத்திற்கு கொண்டுவந்தார். ஞானானந்தர் அதை அங்கீகரித்து பதிலளித்தார்.

"தன் ஸ்வரூப நாட்டம் ஒருவனுக்கு ஏற்படும்போது குரு தோன்றுவார். அது ஏற்படுவதற்கு ஒருவன் முயற்சி எடுத்து அப்யாஸமும் செய்யவேண்டும். ஒப்பற்ற லட்சியத்தில் ஈடுபடுவது மனோசக்திகள் யாவற்றையும் திரட்டி ஒன்று

படுத்தி முயற்சிக்கு பலம் தருகிறது. ஆன்மஞானம் அடைவதற்கு இன்றி யமையாத - தனித்ததொரு - நிபந்தனை என்னவெனின் ஒரே லட்சிய நோக்கோடு, ஒரே மனதுடன் ஆத்மாவிலேயே நாட்டம் கொள்வதுதான்.

"சமுத்திர கட்டங்களில் யாத்ரீகர்கள் போடும் காசுகளை முழ்கி எடுப்பதற் காகக் காத்திருக்கும் பையன்களைப் பார்த்திருக்கிறீர்களா ? ஆத்மா ஜலத் தேக்கத்தின் அடியே விழுந்திருக்கிற ஒரு சிறு நாணயம் போன்றது. அதைப் பெறுவதற்கு ஒருவன் தன் மூச்சை நிறுத்திக்கொண்டு தன் தேகத்தை அம்பு போல் நேராக வைத்துக்கொண்டு மூழ்கவேண்டும். மனம் சமுத்திரம் போன்றது. அதன் எண்ணங்கள், ஓயாத சிந்தனைகள் அலைகள் போன்றவை. அலைகளை நிறுத்தினால்தான், எங்கு மூழ்கவேண்டும் எனத் தெரிந்துகொள்ள முடியும். எண்ணங்கள் சாந்தமடைந்தால்தான் ஆத்மாவின் ஸ்புரணம் தெரியும். அலைகளை நிறுத்தவேண்டுமானால், அவைகளின் மூல காரணங்களை - எங்கிருந்து அவைகள் வருகின்றன - என கண்டறிய வேண்டும். அம்மாதிரியே நமக்குள் சோதித்து 'எங்கிருந்து எண்ணங்கள் வெளிவருகின்றன ? எங்கிருந்து பல விஷயங்களை நோக்கி செல்கின்றன ?' எனத் தெரிந்துகொள்ளவேண்டும். நீர் சலனமற்று, தெளிவான தன்மையை அடைந்ததும் காசை எடுப்பது எளிமையான காரியம். இம்முறையில் ஆத்ம சைதன்யமும், அவர் புன்முறு வலுடன் கூறினர், ஒருமைப்பட்டு ஐஸ்கட்டி போல் உறைந்து அசைவற்று தோன்றும்."

"குருவின் அருள், ஈசனின் அருள் பூமியில் போடப்படும் வித்து போன்றது. அது வளர்ந்து பழம் தராமல் போகாது. ஆனால் விதையை போட்டால் மட்டும் போதுமா ? அதற்காக நிலத்தை பண்படுத்தவேண்டாமா, உரமிடவேண்டாமா, நீர் பாய்ச்ச வேண்டாமா ? இல்லையானால் விதை போட்டதால் என்ன பயன் ? விதையிலிருந்து முளை வந்தவுடன் தொடர்ந்து நீர் பாய்ச்சி, கொத்தி களைபிடுங்க வேண்டாமா ? இவைக்குத் தேவையான முயற்சியை ஒருவனும் தவிர்க்கமுடியாது. அந்த முயற்சி இல்லாமல் அருள் உனக்கு ஒரு பயனையும் அளிக்காது."

"நீ பச்சை மரத்திலிருந்து நெருப்பு உண்டாக்க முடியுமா? முதலில் நீ அதன் கிளைகளை துண்டித்து உலரவைக்கவேண்டும். அப்போதுதான் அதில் நெருப்பு பிடித்துக்கொள்ளும். நெருப்புதான் அருள்; மரத்தை வெட்டி உலர்த்துவதுதான் சாதனை - சாதகன் தன் லட்சியத்தை அடைய எடுத்துக் கொள்ளும் முயற்சி."

"நீ ஒரே லட்சியம் உடையவனாக இருக்கவேண்டும். அந்த லட்சி யத்தைப்பற்றி தேவையான விபரங்களைக் கேட்டு அறிந்துகொள்கிறாய்: அவை களைத் தெரிந்து கொண்டவுடன் இங்குமங்கும் பார்த்துக்கொண்டு நேரத்தை வீணாக்குவதில்லை . . . உறுதிப்படுத்திக் கொண்ட லட்சியத்தை நோக்கி நேராகச் செல்கிறாய்."

"ஒவ்வொரு குருவாக மாறி சென்றுகொண்டிருப்பதில் பயன் என்ன? பல சாதனை நெறிகளைப்பற்றிப் படித்து விஷயங்கள் சேகரிப்பதனுல் என்ன பயன்? படிப்பதும், விஷயங்கள் சேகரிப்பதும் வரைபடத்தையோ கால அட்ட வணையையோ பார்ப்பது போன்றன. வரைபடத்தில் குறிப்பிட்டிருக்கும் இடத் திற்கு நீ போகவேண்டுமானுல் அட்டவணையில் குறிப்பிட்டிருக்கிற ரயில் வண்டியில் ஏறிச்செல்ல முடிவுசெய்ய வேண்டும். ரயில் வண்டிதான் மதரா சுக்கோ பம்பாய்க்கோ செல்லுமேயொழிய அட்டவணை செல்லாது. திட்டத்தை நிறைவேற்ற வேண்டும். இல்லாவிடில் முயற்சி பயனற்றது. ரயில் நிலையத் திற்கோ, கடைத்தெருவிற்கோ போகும்போது நீங்கள் பார்க்கும் ஒவ்வொரு வரையுமா வழி கேட்கிறீர்கள்? வழிகாட்டியிருக்கும் ஒவ்வொரு இடத்திலுமா நீங்கள் வழியைக் கேட்டுத் தெரிந்துகொள்கிறீர்கள்? அவ்வாறு செய்வீர்களா னுல் நீங்கள் ரயில் நிலையம் வந்து சேரும்போது ரயில் போய்விட்டிருக்கும், கடைத்தெரு அடையும்போது சாமான்கள் காலியாய்விட்டிருக்கும்."

"உண்மையாக ஒரு லட்சியத்தை நாடுபவன் அதில் முழுமனதுடன் ஈடுபடுகிருன், அதை அடைவதற்காக எல்லாவற்றையும் விட்டுவிடுகிருன். வேதாந்தத்தில் கூறப்படும் உதாரணம் உனக்குத் தெரியும் - உன்னுடைய ஆடைகளில் நெருப்புப் பற்றிக்கொண்டால், அருகில் குளமிருந்தால் அதை நோக்கி வேகமாக ஓடுகிருய், யோசனை ஒன்றும் செய்யாது நீரில் வீழ்கிருய். இதயத்தில் பொதிந்து கிடக்கும் ரத்னத்தை பெற உண்மையாக விரும்புவனும் இவ்வாறு செய்கிருன். அதைப்பற்றி விவாதிப்பதில் அவன் நேரம் கழிப்பதில்லை."

"மரத்தில் உள்ள எல்லா பழங்களையும் தொட்டுதொட்டு பார்ப்பதில் என்ன பயன்?... இது மிகவும் பழுத்திருக்கிறது. இது நன்ருக பழுக்கவில்லை. இந்த உபதேசம் எனக்கு பிடித்திருக்கிறது. ஆனுல் அதில் ஒரு அம்சம் ப்ரயோஜனமற்றதாக, திருப்தியில்லாததாக இருக்கிறது. மற்றுமொரு சாதனத் தில் இந்த அம்சம் இல்லை. இன்னெரு அம்சம் இருக்கிறது... பசியுடன் இருக் கும் மனிதன் பழத்தை பொறுக்குவதிலே நேரம் செலவழிக்கமாட்டான்; பழத் தைப் பறித்து வேகமாக சாப்பிடுவான்."

எந்த சாதகனை உத்தேசித்து குருநாதர் இந்த அறிவுரைகள் கூறினுரோ அந்த சாதகன் கூறினுன்:

"சில சமயங்களில் த்யானத்தில் ஈடுபடுகிறவர்கள் சிலர் ப்ரக்ஞையை இழந்துவிடுகின்றனரே!"

"பக்கத்து வீட்டிலிருப்பவர்களின் குழந்தை இறந்துவிட்டது என்பது நான் கல்யாணம் செய்து கொள்ள மறுப்பதற்குத் தகுந்த காரணமாகுமா?" என ஞானனந்தர் பதிலுக்குக் கேட்டார்.

"எனக்கு ஒரு நிலம் இருக்கிறது. அதற்கு தண்ணீர் பாய்ச்ச ஒரு கிணறு தேவைப்படுகிறது. நான் தோண்ட ஆரம்பிக்கிறேன். கற்பாறை தென்படுகிறது. உடனே கைகளை கட்டிக்கொண்டு சும்மாயிருக்கிறேனா? நான் உண்ண அரிசி வேண்டும், அதற்கு சாகுபடி செய்ய நிலம் வேண்டும். அதைப்பயிரிட தண்ணீர் வேண்டும். எது எப்படியானாலும் சரி, இந்த வழியிலாவது எந்த வழியிலாவது நான் தண்ணீர் பெறவேண்டும்."

அந்த சாதகர் பிடிவாதமாக வற்புறுத்தினர்:

"அது இயற்கையாகவே நிறைவேறும் வரை ஒருவன் பொறுமையுடன் இருக்கமுடியாதா? வெய்யிலில் ஒருவன் வைக்கும் பழம் இயற்கையாகவே கனிகிறதல்லவா?

குரு உடனே மறுமொழி அளித்தார்: "அப்படியும் ஒருவன் அதை வெய்யிலில் வைக்க வேண்டியிருக்கிறது. அதுதான் சாதனை எனப்படுகிறது."

மற்றொரு சமயம் ஒருவர் கேட்டார்! "சடங்குகளும், ஸ்தோத்ரங்களும், பாடல்களும், ஜபங்களும் என்ன பயனுடையன? இவைகள் தேவையா? ஆத்மஞானம் பெறுவதற்கு இவைகள் ஒரு நல்ல உபாயமா?"

"ஆத்ம ஞானத்தை அடைவதில் ஈடுபடுபவனுக்கு இவைகள் உபயோக மற்று, பயனற்று இருப்பதுடன் இடையூருகவும் இருக்கின்றன. அவைகளை அறவே நீக்கவேண்டும். த்யானம் ஒன்றுதான் தேவையானது, இன்றியமை யாதது. பூஜை, ஜபம், கர்மா, அனுஷ்டானம், ஸ்தோத்ரம் போன்றவைகள் எல்லாம் நாமரூப ப்ரபஞ்சத்தைச் சார்ந்துள்ளன. தத்துவத்தோடு தொடர் புடையன அல்ல. அவைகளில் திருப்தி அடைந்து ஈடுபடுவது, அவைகளை ஆத்மஞானத்திற்கு சாதகமாகக் கருதி அனுஷ்டிப்பது சாதகனை லஷ்யத்தை அடையமுடியாமல் தடுக்கும் ஒரு பெரிய பிசகாகும். ஆரம்ப நிலையில் உள்ளவர்களுக்குத்தான், ஆத்மாவை அறியவேண்டும் என்ற ஆவல் எழாத வர்களுக்குத்தான், விவாகம் செய்துகொண்டு உலகப்பொறுப்புகளினுல் நீடித்து த்யானம் செய்ய முடியாதவர்களுக்குத்தான் அவைகள் பயன்படும். ஸ்வர்கத்தை அடைய உத்தேசித்து, யாகங்களும் யக்ஞங்களும் செய்பவர்களைப் பற்றி உபநிஷத் நிந்தித்துப் பேசியிருப்பதை கவனியுங்கள். கண்டிப்பாக அவர்கள் ஸ்வர்கத்திற்கு செல்வார்கள். ஆனுல் ப்ரஹ்ம சாக்ஷாத்காரம் அடைய ஒரு சமயம் திரும்பித்தான் வரவேண்டும். ப்ரஹ்மமோ எந்த ஸ்வர்கத்துடனும் எந்த சம்பந்தமும் உடையதன்று."

"ஆனுல் அந்த க்ரியைகளை சமூக அல்லது உத்யோக நிர்பந்தங்களை உத்தேசித்து செய்ய வேண்டியிருக்கிறது எனின்?" என அச்சாதகர் கேட்டார்.

"அப்படியானால் அவைகளை எந்தவித ஆசையும் அபிமானமும் அற்று, கீதை உபதேசிப்பதுபோல் செய்யுங்கள். அவைகளை நீங்கள் பிறருக்காக செய்கிறீர்கள், உங்களுக்காக அல்ல."

"உன்னைப் பொறுத்தவரையில் இவைகள் நாமரூப மயமான ப்ரபஞ்சத்தைச் சேர்ந்தது எனக் கருதவேண்டும். பிறர்கள் நீங்கள் செய்யும்படி விரும்புகிறார்கள். அவர்களுடைய மனோபாவனையையும் உலக சூழ்நிலைகளையும் கவனிக்குங்கால் அவர்களுக்கு அவைகள் தேவைதான். அவர்கள் விரும்பும் எல்லா சடங்குகளையும் அனுஷ்டி, எல்லா பூஜைகளையும் செய், எல்லா மந்த்ரங்களையும் உச்சரித்து அவர்களுக்கு சந்தோஷத்தைக்கொடு. ஆனால் நீ அவைகளில் ஈடுபாடு கொண்டுவிடாதே. உண்மையில் நீ அவைகளோடு ஈடுபடாதவனாக இல்லையா? மாய வித்தை செய்யும் மாயாவி அவைகளை நம்புகிறானா? அவனுக்குத் தெரியும் அவை யாவும் தோற்றமாத்திரமே என்று. ஸ்தூல நிலையில் இருந்துகொண்டு வ்யவஹாரங்கள் செய்பவர்களிடம் ஸ்தூல த்ருஷ்டியிலேயே பேசவேண்டும். எவன் பட்டினியுடன் இருப்பதாகக் கனவு காண்கிறானோ - அவன் படுக்கப் புகுமுன் நிறைய உணவு உண்டிருந்தாலும் - அவன் கனவிலேயே உணவு உண்டால்தான் அந்தப்பட்டினி தீரும். குழந்தைகள் தெருவில் விளையாடுவதை கவனியுங்கள். அவர்கள் வீடுகள் கட்டுகிறார்கள், சாமான்கள் வாங்குகிறார்கள், விற்கிறார்கள், சமைக்கிறார்கள், கல்யாணம் செய்து கொள்கிறார்கள். பள்ளிக்குச் செல்லும்போது வீடுகளைப்பற்றியும், வியாபாரத்தைப் பற்றியும் கல்யாணத்தைப்பற்றியும் மறந்துவிடுகிறார்கள். ஒரு நிழல் படம் திரையின் மீது தோன்றி மறைகிறது. அத்திரை, படத்தின் ஏதாவது அம்சத்தை, பாகத்தை நிறுத்திக்கொள்கிறதா? தத்துவத்தை உணர்ந்தவனுக்கு இந்நிலையே பொருந்தும் - நாம ரூப நிலையில் அவன் வ்யவஹாரம் செய்ய நேரும்போது ஆத்மஞானம் பெறாதவர்களாயும், உதவி செய்ய வேண்டியவர்களாயும் இருப்பவர்களின் தகுதிக்கிணங்க அவன் பழக நேரிடுகிறது."

"த்யானம் ஒன்றுதான் முக்கியம். ஆத்மவேட்கை - தத்துவத்தின் கூக்குரல் - ஏற்பட்டவுடன் த்யானத்திற்காக எல்லா நேரங்களையும் ஒதுக்கிவிட வேண்டும். தன் ஸ்வரூபத்தில் ஒருவன் பூரணமாக நிலைபெற்றுவிட்டானாகில் தினந்தோறும் உலக வ்யவஹாரத்தில் எந்தவித பாதகமுமில்லாமல் ஈடுபட முடியும்."

மறுபடியும் ஒருவர் கேட்டார்:

"உபவாசம் இருந்துகொண்டு, இரவில் கண்விழித்து, ஜபம் முதலியவை செய்யவேண்டாமா?"

"அவைகள் தேவையில்லை" என்று ஞானானந்தர் மறுமுறையும் பதிலளித்தார்.

"எந்த ஒரு ஆன்மீக சாதனையும் இயல்பாகவே பயனுடையதன்று. எது த்யானத்திற்கு சாதகமாக இருக்கிறது, எது இடையூருக இருக்கிறது என ஒருவன் ஆராய்ந்து அறியவேண்டும். உன்னுடைய உணவுகளையும், துயிலும் நேரங்களையும் - இரவு நேரங்கள் த்யானத்திற்கு மிகவும் ஏற்றவை என்பது உண்மையாயினும் - இந்த லட்சியத்தை வைத்துக்கொண்டு ஒழுங்கு படுத்திக்கொள்."

அன்பர்கள் அவரை அடிக்கடி சமாதியின் பல பிரிவுகளைப்பற்றி கேள்வி கேட்பார்கள். சமாதி ஹிந்துமத போதனையில் த்யானத்தின் முடிவான நிலையாகக் கருதப்படுகிறது. இது **Concentration** எனவும் சிலசமயம் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படுகிறது. பரவச நிலையே அனுபூதி நிலை; அனுபூதி நிலையே பரவசநிலை. இந்நிலை உள்ளும் புறமும் அற்றநிலை - புறத்தை ஆக்ரமிக்காத உள் உணர்வும், உணர்வை வியாபிக்காத பரதத்துவமும் இல்லையாதலால்.

குருநாதர் இம்முறையில் விளக்கம் அளிப்பார்: சமாதியில் மூன்று விதமான பிரிவுகள் உண்டு.

முதலாவது சவிகல்பக சமாதி எனப்படும். அதில் 'நான்' எனும் தனி அறிவும், நினைவுகளும் இருக்கின்றன. இரண்டாவது நிர்விகல்பக சமாதி. இந்நிலையில் உள்ளென்றும் புறமென்றும், 'நான்' என்றும் 'அவன்' என்றும் உணர்ச்சிகள் கிடையாது. தேக சம்பந்தமான அல்லது மனது சம்பந்தமான உணர்ச்சிகள் தாக்குவதில்லை. சிந்தனையோ, உணர்ச்சியோ இந்நிலையில் இருப்பதில்லை. அந்நிலையில் உள்ளவனைத்தொடலாம், நகர்த்தலாம், தூக்கலாம். அவன் அதை உணரவே மாட்டான். அது பூரணநிலை, ஆனந்த அனுபவம், பரிச்சின்னமற்ற ஆனந்தம்; தூய்மையான, பூரணமான ஆனந்த அனுபவம்; ஆத்மானந்தம் - ப்ரஹ்மானந்தம்- பூர்ணானந்தம்-அகண்டானந்தம்! ராகத்துடன் ஸ்வாமி ஒவ்வொரு 'ஆனந்தம்' சொல்லும்போதும் அவர் உடலின் அபிநயத் திறன் நன்கு வெளிப்பட்டது.

இவைகள் எல்லாவற்றிலும் சிறந்தது ஸஹஜ சமாதி. இந்நிலையில் ஆத்மாவின் இயல்பான நிலையை ஒருவன் அடைகிருன். இயல்பான - ஆத்மா வுடன் பிறந்த அல்லது பிறப்பற்ற எனவும் கூறலாம் - ஏனெனில் ஸ்வரூபத் திற்கு எப்போது தோற்றம்? அனுபூதி, பரவசம் போன்ற நிலைகளை ஒருவன் கடந்துவிடுகிருன். எங்கிலும் தனித்த விஷயத்தின் தோற்றம் கிடையாது. ஞானியும் மற்றவர்களைப்போல். ஆனல் புறப்பொருள்களை வெவ்வேறானவை யாக மற்றவர்கள் காணும்போது அவைகளைத் தொகுதியாக ஞானி காண்கிருன். அவன் தன் ஸ்வரூபத்தை உணரும்போதே அவன் தன்னையும் உலகப் பொருள்களின் ஸ்வரூபத்தையும் உணருகிருன். 'நான்' எனும் எந்த உணர்ச்சி

முன்பு பிறரிடமிருந்து அவனைத் தனிப்படுத்தியதோ, உண்மையான ஸ்வரூபத்திலிருந்தும் பிரித்துவைத்ததோ அது முற்றிலும் மறைந்துவிட்டது. இனிமேல் தன்னையே தத்துவமாகக் காண்பதில் தடையொன்றுமில்லை...

தன்னைத்தான் அறிந்தான் தரணியெல்லாம் தானுனன்,
நீரின்மேல் நடந்திடுவான்; நெடுந்தூரம் கண்டிடுவான்,
பாராதி பூதமெலாம் ஒழிந்திடவே பார்த்து நிற்பான்,
தோன்றாத ஒரு பொருளைத் தோற்றத்திலெங்கும் கண்டிடுவான்,
பூரணைப் பொருளையே புவி எங்கும் பார்த்திடுவான்,
தன்னை அறிந்திடுவான், தன்னிலனைத்தும் கண்டிடுவான்,
காலம் கடந்திடுவான், கதியை வென்றிடுவான்,
அவன் புகழ் பாடிடுவாய், நாளும் நீ, நன்னெஞ்சே!

• • •

"ச்வேதகேது! ஆலமரத்துப்பழம் கொண்டு வா"
"இதோ, பகவன்"
"அதை உடை"
"உடைத்துவிட்டேன், பகவன்"
"என்ன காண்கிறாய்"
"சிறு விதைகள்"
"அவைகளில் ஒன்றை உடை"
"உடைத்தேன், பகவன்"
"அங்கு என்ன காண்கிறாய்?"
"ஒன்றும் தெரியவில்லை, பகவன்"

அவனிடம் கூறினார் "குழந்தாய், எந்த இந்த அணுபோன்ற விதையில் நீ ஒன்றும் காணவில்லையோ, அதில்தான் இப்பெரிய ஆலமரம் நிற்கிறது. நம்பிக்கையுடன் இரு.... அந்த அணுபோன்ற ஆத்மாவில் தோன்றியவை இவை யாவும். அது சத்யம். அது ஆத்மா, அது நீயாக இருக்கிறாய், ச்வேதகேது."

"இந்த உப்பை ஜலத்தில் போடு. நாளைக்காலை என்னிடம் வா."
அவன் அவ்வாறே செய்தான்.

"எந்த உப்பை ஜலத்தில் போட்டாயோ அதைக் கொண்டுவா"
அவன் அதைத் தேடிப்பார்த்தும் காணவில்லை.

"ஜலத்தின் மேல் பாகத்திலிருந்து துளி ஜலம் எடுத்துக்குடி. எப்படியிருக்கிறது?"

"உப்பாக இருக்கிறது"

"ஜலத்தின் மத்தியிலிருந்து சிறு துளி எடுத்துக்குடி, எப்படியிருக்கிறது ?"

"உப்பாக இருக்கிறது"

"ஜலத்தின் அடியிலிருந்து சிறு துளி எடுத்துக்குடி, எப்படியிருக்கிறது ?"

"உப்பாக இருக்கிறது"

"அந்த ஜலத்தைக் கொட்டிவிட்டு வா"

அவன் அவ்வாறே செய்தான்.

"ஜலத்தில் நீ உப்பைக் காணவில்லையாயினும் அது இருந்துகொண்டிருக்கிறது. அதேபோல் ஆத்மாவும் காணமுடியாதபடி இருக்கிறது...

"அந்த ஆத்மாவில் தோன்றியது இவை யாவும். அது சத்யம். அது ஆத்மா. அதுவாக நீ இருக்கிறாய், ச்வேதகேது !"

**(சாங்தோக்ய உபநிஷத் 6 (12, 13))**



"அது தான் கார்கி, அக்ஷரம் - அழிவற்றது - எனக் கூறப்படுகிறது," என யாக்ஞவல்கியர் கூறினார். "அவன் பார்க்கிறான், அவனைப் பார்க்க முடியாது; அவன் கேட்கிறான், அவனைக் கேட்க முடியாது; அவன் சிந்திக்கிறான், அவனை சிந்திக்க முடியாது; அவன் அறிகிறான், அவனை அறிய முடியாது. அவனைத் தவிர பார்ப்பவன் கிடையாது, கேட்பவன் கிடையாது, சிந்திப்பவன் கிடையாது, அறிபவன் கிடையாது .... அறிபவனை எதனால் அறியமுடியும்? ... இதுவே அம்ருதத்வ நிலை."

**(ப்ருஹதாரண்யக உபநிஷத் 3-(8-11) 4-(5-15)**

சலனமற்ற அது மனதைக்காட்டிலும் வேகமாகச் செல்கிறது. அதை மற்ற தேவர்கள் அடைய முடியாது. அது நின்று கொண்டே ஓடிச் செல்பவர்களையும் தாண்டிவிடுகிறது.

அது செல்கிறது. செல்லாமல் நிற்கிறது. தூரத்தில் இருக்கிறது. அருகிலும் இருக்கிறது. எல்லாவற்றிற்குள்ளும் இருக்கிறது. எல்லாவற்றிற்கு வெளியிலும் இருக்கிறது.

"எவனொருவன் எல்லாப் படைப்புகளையும் ஆத்மாவில் காண்கிறானோ, எல்லாவற்றிலும் தன்னை காண்கிறானோ அவன் எதிலும் வெறுப்புக்கொள்வதில்லை; எல்லாவற்றையும் தானாகப் பார்க்கிறவனை எவ்வாறு மோஹம் வசப்படுத்தும்?

**(ஈசாவாஸ்ய உபநிஷத் (4-7))**

கணக்கு ஆசிரியையாக பணியாற்றிய ஒரு மாது ஞாயிறன்று வந்தாள். அவள் த்யானத்திற்கு லஷ்யமாக (ஸ்வாமி) சொல்லியிருந்த புறப்பொருள்களும் குறிகளும் கலக்கம் விளைவிப்பதாகக் கூறினாள்.

அவர் பதிலளித்தார்:

“அவைகளெல்லாம் படங்கள் - தற்காலிகமான உதவியாகவும், அடையாளமாகவும், வழிகாட்டியாகவும்தான் பயன்படும். இயல்பாகவே அவைகளுக்கு ஒரு சக்தியும் கிடையாது. குழந்தை “சந்திரன் எங்கே இருக்கிறது?” எனக்கேட்டால் கைவிரலாலோ, கம்புனாலோ அதை ஒருவன் காட்டுகிறான். எந்த புறக்குறியும் லஷ்யமாகாது. இதயாகாசம் பரந்தவெளியைப் போன்றது. அதை அளவுபடுத்த இயலாது. ஒலி நிலையில் உச்சரிக்கப்படும் ஒரு சப்தத்தின் த்வனியில் தொடங்கி எல்லா சப்தங்களுக்கும் ஆதாரமாகவிருக்கும் ஓம் எனும் ப்ரணவநாதம் வரையில் செல்லலாம். அந்த உச்சரிக்கப்படும் ப்ரணவத்திலிருந்து அநாஹதமாக ஒலிக்கும் ப்ரணவத்திற்குச் செல்லவேண்டும். முக்கியமானது என்னவெனில் அஹங்காரத்தின் பிடியிலிருந்து விடுபட்டு ஆன்மவெளியில் தாவுவதற்குமுன் ஜீவனுக்கு ஆதாரமானப் பிடிப்பு ஒன்று தேவைப்படுகிறது. நிரந்தர எண்ண அலைகளிலிருந்தும் தன்னை விடுவித்துக்கொள்ள அது பயன்படும். ப்ராணனை நிதானமாக விடுதல், ஒரு ஒலி, ஒரு குறி அல்லது ஸ்வரூப சிந்தனம் - இவை யாவுமே உபாயங்கள், ஆத்மதரிசனத்திற்காக கடைபிடிக்கப்படும் தற்காலிகமான உபாயங்கள்.

“எப்படி இதை அடைகிறான் என்பது விஷயமல்ல; ஏதாவது ஒரு முறையில் ஸ்வரூபத்தில் மனம் லயமடைய வேண்டும். இறுதியில் உள்வெளி என்ற பாகுபாடும் அகலவேண்டும். உள்நாட்டத்துடன் மூழ்கி இறுதியில் ஸ்வரூபத்தில் ஒன்றிப்போவாயாக” - தமிழ் பாடலில் உள்ளபடி.

சிந்திக்குந்தோறும் தெவிட்டாவமுதேயென்
புத்திக்குணிதான் பொருந்திடவுங் காண்பேனோ. 1.

கேவலத்தினுன் கிடந்து கீழ்ப்படாதின்பவருட்
காவலன் பாலொன்றிக் கலந்திடவுங் காண்பேனோ. 2.

துரியங்கடந்தவொன்றே தூ வெளியாய் நின்ற
பெரிய நிறைவேயுனைநான் பெற்றிடவுங் காண்பேனோ. 3.

மாசற்றவன்பர் நெஞ்சே மாருக பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் றேசினையுங் காண்பேனோ. 4.

மாயாவிகார மலமகல வெந்தைபிரான்
நேயானுபூதி நிலைபெறவுங் காண்பேனோ. 5.

"எண்ணங்கள் மேலோங்கி வந்த வண்ணம் இருக்குமானுல், அவைகள் வெட்டவெளியில் பறந்து செல்லும் பக்ஷிகள் போன்று, உள் ஸ்வரூபத்தை ஒருவிதத்திலும் பாதிக்காமல் சென்றுவிடும்."

"முக்கியமானது என்னவெனில், உன் மனத்தை ஒருவரும் நுழைய முடியாதபடி, உன்ஊை ஒருவரும் கண்டு தொல்லே கொடுக்காதபடி இருக்கும் ஒரு கோட்டையாக ஆக்கிக்கொள்வாயாக. குறுக்கீடு செய்பவர்களுக்கு எட்டாமல் உன் இருப்பிடம் இருக்கவேண்டும். நம் வீடுகளில் சமையலறையை எவ்வாறு பாதுகாப்புடன் வைத்திருக்கிறேமோ அவ்வாறு வைத்துக்கொள்ள வேண்டும். உனக்குத் தெரியும் எப்படி நெருப்பு மூட்டி உணவு தயாரிக்கும் இடத்தை புனிதமாக நாம் வைத்திருக்கிறேம் என்று. அதே குடும்பத்தைச் சேர்ந்த அல்லது சில சமயங்களில் அந்த ஜாதியைச் சேர்ந்தவர்களேத் தவிர வேறு யாரும் அவ்விடத்திற்குச் செல்ல அனுமதி இல்லே. எவ்வளவு வேண்டியிருந்தாலும் வேறு எவரும் அழைத்துக்கொண்டு போகப்படமாட்டார்கள். வராண்டாவிலாவது, தோட்டத்திலாவதுதான் அவர் சாப்பிடவேண்டும். உன்னுடைய சமையலறையை எவ்வாறு பாதுகாப்புடன் வைத்துக்கொள்கிருயோ அவ்வாறு இதயத்தையும் எந்த ஒரு மாசும் அணுகாத வண்ணம் வைத்துக் கொள்ளவேண்டும்.

அச்சமயம் வன்யா சாந்தோக்ய உபநிஷத்திலிருந்து தன்ஊை மிகவும் கவர்ந்த ஒரு பகுதியை குருநாதரிடம் எடுத்துரைத்தார்.

எவன் என் ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்கிருனே, அவனே ஆதித்ய மண்டலத்தில் வீற்றிருக்கிருன்; பூமியிலும் விளங்குகிருன்; எந்த ஒரு உயிரிலும் படைப்பிலும் காணப்படுகிருன்.

**( சாந்தோக்ய உபநிஷத் )**

'இறைவன் எங்கும் பேதமற்று அகண்டமாய் இருக்கிருன்' என மீண்டும் ஸ்ரீ ஞானனந்தர் தொடர்ந்தார். "இதயமாகிய கண்ணுடியில்தான் ஒருவன் அவரைக் காணலாம். உலகத்தில் அவஊக் காண்பது என்பது அவஊை பின்னமாக, வெவ்வேருக பார்ப்பதாகும். இதயக் கண்ணுடியில் பார்ப்பது என்பது அவஊை உள்ளவாறு, அகண்டமாக, பிரிவற்று ஏகமாய் தரிசிப்பதாகும்.

உள்நாட்டமடைந்து இதயக் கண்ணுடியில் அவஊக் காண்பாயாக"

த்யானம் செய்வதற்கு ஞானனந்தர் வன்யாவுக்கு காண்பித்த வழியாவது: வெளிப்பொருள்களில் இருந்து-நானற்றவைகளிலிருந்து-தன்ஊைப் பிரித்துக் காட்டுவதாக 'நான்' எனும் உணர்ச்சி முதலில் உதிக்கிறது. இவ்வாறு புறப்பொருள்களோடு தொடர்புடையதாய், அவைகளிலிருந்து பிரித்து 'நான்' எனும் உணர்ச்சி உதிக்கும் வரை, ஒருவன் தன் ஸ்வரூபத்தை

உண்மையில் உணர்ந்ததாகக் கூறமுடியாது. நான் என்று வழக்கமாக வழங்கப்படும் சொல் வெளி உணர்ச்சிகளால் தாக்கப்படும் தேக, இந்திரிய, மனத்தொகுதியில் தொடர்ந்து காணப்படும் எழுச்சியாகும். இவ்வுணர்ச்சிகள் நீடித்து இல்லாமல் ஒவ்வொரு கணமும் தோன்றி மறைவதால், நிலைபெற்ற ஆத்மா ஒன்றிருப்பதாக புத்தர் ஒத்துக்கொள்ளவில்லை. தன்னுடைய உண்மை யான ஸ்வரூபத்தை உணர விழைபவன் 'நான்' எனும் உணர்ச்சிக்கு ஆதார மாக, தனித்து பூரண சுதந்திரத்துடன் இலங்கும் சைதன்ய உணர்வை அறியவேண்டும். அஹம் - புறம், உள் - வெளி பதார்த்தங்களின் அறிவு கள் ஏற்படும்போது எழும் நான் எனும் உணர்ச்சியாகவும் இருந்து, அவைகளைக் கடந்து, சாந்தோக்ய உபநிஷத்தில் கூறும்படி, 'அத்ருஸ்யமாகவும் - காணமுடி யாததாகவும் - சுதந்திரமாகவே இலங்குகிறது. இருப்பே அது; புலனறிவுகள் இருக்கும்போது அவைகள் மூலமாக எவ்வாறு பின்னமாய் பிரகாசிக்கிறதோ, அவ்வாறே அவைகள் இல்லாதபோதும் பிரகாசிக்கிறது. இந்த உண்மை தூக்க நிலையை நன்கு பரிசீலிப்பதால் விளங்குகிறது. தூக்க நிலையில் விசேஷ அறிவு ஒன்றும் இல்லை. ஆனால் ஜீவன் உறக்கத்திலும் இருந்துகொண்டே இருக்கிறான். கிருஷ்ணன் கீதையில் கூறுவதுபோன்று "எல்லாம் என்னிடத் தில் இருக்கின்றன. நான் அவைகளில் இல்லை."

ஸ்வரூபத்தை நன்றாக உணராத வரையில், 'நான்' என்பதுவும் சரியாக அறியப்படவில்லை. தன் ஸ்வரூபமாக இறைவனை உணராதவரை இறைவனையும் ஒருவன் உணர்ந்ததாகக் கூற இயலாது. இல்லாவிடில் உலகத்தோடுள்ள தொடர்புக்கு அன்யமாக நானும், ஸ்ருஷ்டிக்கப் பட்ட உலகுக்கு அன்யமாக இறைவனும் இருக்கமுடியாது. இதுதான் முக்கிய மான தத்துவ ஆராய்ச்சிக்குரிய ப்ரச்னை ஆகிறது. ஒன்று-பல; சாமான்யம் - விசேஷம்; வ்யக்தம் - அவ்யக்தம் – இவைகள் யாவும் குறிப்பிட்ட கோட்பாட்டின் கீழ் கொண்டுவர இயலாது. ஏனெனில் சிந்திப்ப வனைப்பற்றி யார் சிந்தனை செய்யமுடியும்? சிந்திப்பவனே சிந்தனையை தொடங்குவதால் சிந்திப்பவனையே திரும்பவும் அடைகிறோம், வேறு மார்கமாக. தேவைப்படுவது என்னவென்றால் தொடர்ந்த சிந்தனைச் சுழல்களைக் கடந்து சிந்தனைப் பிறக்கும் இடத்தை - சிந்தனையாலும் சுட்டிக்காட்டமுடியாத ஆதார மான சைதன்ய உணர்வை - அடையவேண்டும்.

கீதை கூறுவதுபோல் எவனும் தானாகவே தன்னில் தன்னை அறிய வேண்டும். வேறுவழியில் ஒருவனும் அடையமுடியாது. ஆத்மனி, ஆத்மனா, ஆத்மானம் - தன்னில் தன்னை தானாக அறிகிறான். எந்த மனிதனும் - யாராய் இருந்தாலும் சரி - ஆத்ம குகையின் வாயில்வரைதான் ஒருவனை அழைத்துச் செல்ல இயலும். அவனை ஸ்வரூபத்தோடு ஐக்யமாகுமாறு கூறிவிட்டு அவன் விடைபெற்று மறைய வேண்டியதுதான். விகாரமடையும் எந்தப் பொருளும் விகாரமே அடையாத சைதன்யமாக மாறமுடியாது. அனுமானத்தினால்

அடையப்படும் ஞானமோ, சிந்தனையைப் பற்றிய சிந்தனையோ ஒப்பற்ற உணர்வுமயமான பூரண தத்துவத்தை அறிய இயலாது.

அனந்தத்தில்தான் சுகம், அளவுக்குட்பட்ட பொருள்களில் சுகம் இல்லை· எங்கு வேறொன்றையும் காணவில்லையோ, வேறொன்றையும் கேட்கவில்லையோ, வேறொன்றையும் அறியவில்லையோ, அதுதான் அனந்தம். அதுவே அம்ருதம் அது எந்தவித எல்லையுமற்றது. ஆத்மாவை அறிந்தவனின் நிலையும் அதுவே.

(சாந்தோக்ய உபநிஷத்)

உள்நாட்டம் பெற்று ஆத்ம அனுசந்தானம் செய்வதே பயன்தரும் உறுதியான வழி. இம்முறையில் லஷ்யத்தை அடைந்தவுடன் வழியும் மறைந்து போகிறது. அந்தர்முகத்துடன் விசாரம் செய்யும் போது, - 'அந்த:' என்பதுவும் ஒரு எண்ணம் தான். எந்தக்கருத்தும், த்வைதத்தை - வேறு பாட்டை அடிப்படையாகக் கொண்டவை. ஆதலால் அச்சிந்தனை சாதனை பயிலும் 'என்னை' அடைய வேண்டிய ஸ்வரூப உணர்விலிருந்து பிரித்து நிறுத்துகிறது. ஸ்வரூபத்திலிருந்து 'நான்' பிரிந்து நிற்கும்வரை 'நான்' ஸ்வரூபத்தில் லயமடையவில்லை. இந்த விவேகம் ஏற்பட்ட அளவில் லஷ்யமும் மறைகிறது. லஷ்யத்தை அடைய விரும்புபவனும் மறைகிறான். அல்லது உண்மையில் ஒன்றையே இவ்விருவிதமாக அறியும் திருஷ்டி மறைகிறது. ஆத்மா - ஸ்வரூபம், சைதன்யம், உணர்வு, அகண்டஜோதி, சித்விலாஸம், ஸ்வப்ரகாசமாயிருத்தல், பூரண ஆனந்தம், ஆத்ம ப்ரஸாதம் — இவைகளைத் தவிர இந்நிலையில் வேறொன்றும் இல்லை.

ஞான சாதனையில் ஈடுபட்டவனின் இறுதிக்கடமை இந்த வேற்றுமை உணர்ச்சியைக் கடப்பது; லட்சியம் - லட்சியத்தை அடையும் உபாயம், லட்சியம் - லட்சியத்தை அடைய விரும்புபவன் — இவைகளிடையே உள்ள பேதம் மறையவேண்டும். உண்மையில் ஆத்மஞானத்தை விரும்புபவன், தன் லட்சியத்தின் கடைசி எல்லையாக, தான் கருதும் இடத்தை நெருங்கும்போது ப்ரமிக்கவைக்கும் உணர்ச்சிக்கு வசமாவான். அவன் இத்தருணத்தில் எவை யெல்லாம் தன் இருப்புக்கு ஆதாரமாகவும், தானாகவும், தன்னுடன் பிணைந்தி ருப்பதாகவும் கருதினானோ அவை யாவையும் முற்றிலும், பின்பு தொடராத வகையில் விட்டுவிடவேண்டும். நிர்விசேஷமான ஸ்வரூபத்தில் மனம் லயம் அடைய லயம் அடைய ஆன்மவெளியினால் 'ஆகர்ஷிக்கப்பட்டு ஆலம்பன மற்றதாய் விசேஷப் பிடிப்பு அற்றதாய் அம்மனம் ஒடுங்குகிறது. அது அனந்த மான - எல்லையற்ற - ஆகாசம்; நிரந்தரமானது - இடைவெளியற்றது; ஏகரஸமானது - ஒரே தன்மையானது. எந்தவிதமான விசேஷ அறிவுமற்ற வெளியில், 'தான்' எனும் தனித்த அறிவும் இருப்பும் கூட நீங்கி ஆனந்தமாய், கேவலமாய், பூரணமாய் நிற்கிறான். உபநிஷத்துக்கள் அடிக்கடி வற்புறுத்துவது போன்று இறுதியான இந்த ஹ்ருதய க்ரந்தியை துண்டிக்காமல் ஒரு சாதகன்

ஓய்வதிற்கில்லை. இக்கிரந்தி (அஹங்காரம்) தான் ஆத்மாவை தேசகாலங் களுக்குக் கட்டுப்படுத்தி, இயல்பான சுதந்திரமான நிலையை அனுபவிக்க விடாமல் தடுக்கிறது. இந்த அப்யாசம்தான் ஸ்ரீ ரமணரின் தனித்த ஒரு உபதேசமாக இருந்தது-ஆத்மாவினிடமிருந்து வேருகிய 'நான்' எனும் எண்ணமே மேலெழுந்தவாரியாகத் தோன்றினுலும், அதைத் தொடர்ந்து ச்ரத்தையுடன் கவனித்து மறையும்படி செய்யவேண்டும். திருடும்போதே ஒரு திருடனைப் பார்த்து விட்டால், ஒரு நொடியில் அவன் ஓட்டம் பிடிப்பது போல் - என ரமணரை அனுசரித்து ஞானனந்தரும் மொழிவதை விரும்புவார்.

இதனுல், ஒரு எண்ணத்தைத் துரத்த மற்றுமொரு எண்ணத்தை மேற் கொள்ள வேண்டும் என்பது கருத்தல்ல; அவ்வழியில் 'நான்' எனும் தனித்த உணர்ச்சியை புறக்கணிப்பதுபோல் ஆகும். ஆத்மா ஒன்றிருக்கிறது, அது பேதமற்றது, அதுதான் ஒருவனின் இயல்பான நிலை என்று நம்புவது மட்டும் போதாது. இது சிந்தனை நிலையிலே, கற்பனை நிலையிலேதான் நிகழ்கிறது. இவ்வாறு செய்வது மலையைச் சுற்றிச்சுற்றி வருவதுபோலாகும். மேல் நோக்கி செல்லும் பாதையில் சென்றுல்தான் மலையின் உச்சியை அடையமுடியும். ஆரம்ப வேதாந்த நூல்கள் சாதகனுக்கு அடிக்கடி அறிவுறுத்துவது என்ன வெனின் சாதகன் திரும்ப திரும்ப "நான் நித்யன், அஜன், அத்விதீயன், அனந்தன், ஆனந்தன்," என்று சிந்திக்கவேண்டும் என்பது. இவையாவும் அதே மாதிரி பயனற்றவைதான். 'நான்' எனும் உணர்ச்சியை நீக்கி அதற்கு சாக்ஷியாய் இருக்கும் நித்யமான சைதன்யத்தை உணரவேண்டும். எந்த கருத்தும் இந்த ஸ்புரணத்தை உண்டாக்காது. எந்த சிந்தனையும் இந்த தத்துவத்தினிடம் அழைத்துச்செல்லாது. இந்த உணர்வுதான் கைவல்ய நிலைக்கு உபாயம். தத்துவ உணர்வை வெளியில் இருந்து பெறமுடியாது. உள்ளே யிருக்கும் சாக்ஷியும் உணர்த்தாது. விசாரம் பரிபாகத்தை அடைந்த நிலையில் தானுகவே ஸ்புரணம் உதயமாகிறது, அது இதயகுகையில் உதயமாகும் ஜோதிர்மயமான சைதன்ய ஸ்வரூபம்!

இந்த ஞானேதயத்தை அது நேரும் சமயத்தில்தான் ஒருவன் உணரு கிருன்; உதயம் ஏற்பட்டவுடன் இந்த தத்துவம் தன்னிலோ, வெளியிலோ, ஒரு காலத்தில் இருந்ததாகவோ, இருக்கப்போவதாகவோ உணரமாட்டான். ஆத்மாவாகவும், எந்த ஒரு பொருளிலும், தேசகாலங்களிலும் தேசகாலங் களுக்கு அப்பாற்பட்டும், அதன் இருப்பு இருந்துகொண்டே இருக்கிறது. (ஆனுல்) சூர்யனை நோக்கி திரும்பியிருக்கும் பூமியின் பாகத்தில் உள்ள மனிதன்தான் சூர்யோதயத்தை காண்கிருன்.

"அந்நிலையிலிருந்து ஆதித்யன் மேலே செல்கிருன்; பிறகு உதிப்பதும் இல்லை. மறைவதும் இல்லை. மத்தியில் நிற்கிருன்... அதை அறிபவனுக்கு

எப்போதும் ப்ரகாசித்துக்கொண்டே இருக்கிருன்... அம்ருதத்திற்கு அடைவிக்கும் பாலம் அதுவே... மரணமோ, தீமையோ, பிணியோ அதை அண்டாது.''
(சாந்தோக்ய உபநிஷத்)

இந்த தத்துவத்தை - தர்சனத்தை - அடைவதற்கு நேர்வழி குருவின் உபதேசத்தில் நம்பிக்கை வைத்து த்யானத்தில் ஈடுபடுவது, ஆழ்ந்து மௌனத்தையும் இந்திரிய - மன - அடக்கத்தையும் கடைபிடிப்பது என்ற சாதனையாகும்.

'நான் அனுபூதியைப் பெறவேண்டும், ஆத்ம தர்சனத்தை அனுபவிக்கவேண்டும்' என்ற எண்ணத்தை அறவே விடவேண்டும்.

கடவுளைப் பார்க்கும் இன்பத்தை, கடவுளைச் சொந்தமாக்கிக்கொள்ளும் எண்ணத்தைத் துறக்கவேண்டும். ஆத்ம தர்சனம் பெற்று அந்த ஜோதியில் ஒன்றியவனுக்கு எந்த இன்பமும் அவனுடையது என்று கூறத்தகுந்தது அல்ல. பார்ப்பதற்கோ, அனுபவிப்பதற்கோ 'நான்' என்ற ஒருவன் இல்லை, தக்க அனுபவமும் நேரிடுவதற்கில்லை. ஒரே சுகம், சுக உணர்வு, ஆத்ம சைதன்ய ஸ்புரணம், எல்லாமாய், இறைவனுய் இருக்கும் ஸ்வரூபம்.

ஒரு தினம் இக்கருத்துக்கள் யாவையும் திரட்டி ஞானனந்தர் வன்யாவிடம் ஒரு பாடலாக பாடினுர்:

**உன்னைப்புகுந்து நான் கண்டபோது—ஜீவக்கிளியே!**
**நானென்பது ஏது? நீ என்பது ஏது?**
**என்னைப் புகுந்து கண்டபோதும்—ஜீவக்கிளியே!**
**நீ என்பதில்லை, நானென்பதுமில்லையே!**

# 9. குருநாதர்

ஒரு தினம் வன்யா காலையில் 4 மணிக்கே எழுந்தார். பக்கத்துக் கூடத்தில் நடந்துகொண்டிருந்த உரையாடலைக் கேட்டார். விடியற்காலையிலிருந்தே ஞானனந்தருடன் அன்பர்கள் பேசிக்கொண்டிருந்தனர்போலும். வன்யா அந்த வாய்ப்பை நழுவவிடக்கூடாது என அவசரப்பட்டு எழுந்தார். ஆனுல் அவர் சிரமப்பட்டு உரையாடல்களின் சில சொற்களைக் கேட்டவுடன் ஸ்வாமியின் குரல் கேட்கப்படவில்லை என உணர்ந்தார். 'கும்பகோணத்திலிருந்து சங்கராச்சாரியாரின் சிஷ்யர்கள் இரண்டு பேர் முந்திய மாலை வந்திருந்தவர்கள்தான் இவர்கள்' என வன்யா உடனே புரிந்துகொண்டார். ஸ்வாமியிடம் சம்பாஷணை செய்வது போன்று தங்களுடைய பாண்டித்யத்தை அடக்கமின்றி காட்டிக்கொண்டனர். "வெறும் பேச்சாளிகளாகிய இவர்களைக் கேட்பதால் என்ன பயன்?'' என வன்யா நினைத்தார். தனது சிறு அறையிலேயே உட்கார்ந்துகொண்டு மௌனமாக த்யானம் செய்தார்.

இரண்டு மணி நேரம் சென்றபிறகு, ஸ்நானத்தை முடித்துக்கொண்டு, ஞானனந்தரை அணுகி அவருக்கு நமஸ்காரம் செய்தார். குருநாதர் அவரிடம் சொன்னர். "நீங்கள் காலையில் வரவில்லையா? அபாரமான ஞானம்! ஆத்மா வைப்பற்றியும் ப்ரஹ்மத்தைப் பற்றியும் ஏகப்பட்ட விவாதங்கள்!"

வன்யா கூறினர் "என்ன நடந்துகொண்டிருந்தது என நான் தெரிந்து கொண்டேன். அக் காரணத்தினுல்தான் முதலில் போய் உரையாடலைக் கேட்கவேண்டும் என்று நினைத்துப் பிறகு மறு சிந்தனையின் பேரில், மௌன மாக தியானத்தில் இருப்பது நல்லது என முடிவு செய்தேன்."

"நீங்கள் செய்தது சரியே" என்று ஸ்வாமி பதிலளித்தார். "ஞானத் தைப்பற்றியும் ப்ரஹ்மத்தைப் பற்றியும் இந்த பேச்சுகள் வெறும் முழக்கம். த்யானம் ஒன்றுதான் ப்ரஹ்மமாயிருக்கும் ஆத்மாவின் ஞானத்தை அடையும் வழி. மற்றவை யாவும் பொழுதுபோக்கு, வேடிக்கை!"

ஞானனந்தரைப் பற்றிய சில விஷயங்களும் வன்யா ஏற்றுக் கொள்வதற்கு சிரமப்பட்டார். ஞானியைப்பற்றியே அவர் கொண்டிருந்த பொதுவான அபிப்ராயம் ரமண மஹரிஷியின் உதாரணத்தை ஒட்டியிருந்தது. ரமணரின் இறுதி ஆண்டில் அவரை வன்யா இருமுறை சந்தித்திருக்கிறர். ஒரு கட்டிலின் மீது ரமணர் வந்தனை வழிபாட்டுகளிடையே-வெளியில் நடப்பது யாவையும் கவனியாமல் அமைதியாக சலனமற்று - அமர்ந்திருப்பார். ஆனல் ஞானனந்தரால் சும்மா இருக்கமுடியாது போல் தோன்றிற்று. ஆஸ்ரமத்தில் உள்ள எல்லா ஏற்பாடுகளிலும் அவர் அதிகமாகவே ஈடுபட்டிருந்தார். பக்தர்களை அவர்கள் விருப்பப்படி பேச அனுமதிப்பார்; அவரும் அவைகளில் விருப்பத் துடன் கலந்துகொள்வார் போல் தோன்றிற்று. இது போன்ற அம்சங்கள் ஐரோப்பிய சாதுவிற்குப் பிடிக்கவில்லை...

இவ்வாறிருப்பினும், என்ன எண்ணங்கள் அடிக்கடி வன்யாவின் மனதில் குறுக்கே ஓடினலும், குருநாதருக்கு நமஸ்காரம் செய்யவரும்போது-காலையிலும், மாலையிலும் குறிப்பாக அவரோடு தனித்திருந்து அவர் மொழிகளை கேட்கும் போது - 'இவர் தான் நான் நெடுங்காலம் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த குருநாதர்; இவரிடம் அடைக்கலம் புகுந்தால், அகந்தைப் பிடியிலிருந்து விலக்கி அகவெளியில் உலவச்செய்வார்' என்ற பூர்ண நம்பிக்கையை உடையவராக வன்யா இருந்தார். ஆன்மீக அடிப்படையில் இவர்களிடையே ஓர் பிணைப்பு ஏற்பட்டிருந்தது போல் தோன்றிற்று. வேறு ஒருவரும் செய்திராத வகையில், குருவின் வசனங்கள் இவருடைய இதயத்தில் ஒலி எழுப்பின. இத்துணை காலம் அடி உள்ளத்தில் புதைந்து கிடந்த ரகச்ய உணர்வுகள் தற்சமயம் வெளிக்கிளம்பினபோல் தோன்றிற்று. குருவின் மொழிகள் இவர் தேகம் முழுவதிலும் ஊடுருவிச் சென்று அவருடைய இதயத்தில் ஒப்பற்ற சித்விலாஸங்களை எழுப்பின.

ஞானனந்தரின் முழு உருவமும் கனிந்த, தூய்மையான அன்பையே பொழிந்தது. அந்த அன்பு பூரணமாயும் எல்லோரிடத்தும் சமமாயும் நிறைந்திருந்தது. அவருடைய அன்புக்கு பாத்திரமாக ஆவது என்பது தனித்த, ஓர் பெரும் பற்றின்மையை உள்ளத்தில் பாய்ச்சியது. யார்தான் மற்றவர்களைக் காட்டிலும் தனித்ததொரு விசேஷமான அன்புக்கு பாத்திர மாவதை விரும்ப மாட்டார்கள் ? அதே சமயத்தில் ஒவ்வொருவரும் அவருடைய பூரண அன்பில் அமிழ்ந்திருப்பதாக உணர்ந்தார்கள். ஞானனந்த ரின் பார்வையில் எல்லா பேத உணர்ச்சிகளும் முற்றிலும் மறைந்தன. எவனொருவனையும் ஆத்மீக நோக்குடனேயே, ஆத்மஸ்வரூபமாகவே அவர் கண்டார்.

ஐரோப்பியராயிருந்தாலும் சரி, இந்தியராயிருந்தாலும் சரி - ப்ரஹ்ம ஞானத்தின ரகசியத்தை உணராதவருக்குத்தான், அரைகுறையாகத் தெரிந்து கொண்டிருந்த போதிலும் நன்ருகத் தெரிந்துகொண்டிருப்பதாக அபிமானம் உடையவர்களுக்குத்தான், இவை யாவும் முரண்பட்ட தன்மை உடையன போலத்தோன்றும். ப்ரஹ்மாத்ம ஞானத்திலே - இரண்டற்ற அனுபூதியிலே - ஒருவன் நிலைபெற்றிருப்பதோடு உலகத்தோற்றத்தில் வ்யவஹாரம் செய்யும் தன்மையை அறிந்துகொள்ளவோ, விளக்கவோ எந்த ஒரு கோட்பாட்டினுலும் எக்காலத்திலும் முடியாது. இந்தியாவிலுள்ள ஞானிகளும் தன் மனோவாசனை களை ஒட்டி, கருத்தளவிலே, பல சமாதானங்களை அளித்து இக்கூற்றை மறுப்பர். அவர்களுடைய பூரணமான வாழ்க்கையும், குறிப்பாக அவர்களின் தந்நலமற்ற அன்பும், அந்த மனிதர் பரிபூரண ஸ்வரூபத்தோடு ஒன்றியதால் எந்தவிதமான நலனையும் இழக்கவில்லை என்பதை வெளிப்படுத்துகின்றது. தன்னுடைய பாவனைக்கப்பால் ஞானி தன்னுடைய இதயமாகிய கண்ணுடியில் அதிசய சைதன்யத்தை, ஆத்மஸ்வரூபத்தை, ஈச்வர தத்வத்தை எவ்வித களங்கமுமில்லாமல் உணருகிருன்; அவனை ஆட்கொண்ட சித்சக்தி, அதற்கே தெரிந்திருக்கும் ரகச்யமான நன்மைகளை, உலகில் அவன் மூலமாக வெளிப் படுத்துகிறது.

பல சமயங்களில் வன்யா குருவின் உதவியைப்பற்றி ஞானனந்தரிடம் வினவினுர். ஆனுல் அவர் அளித்த பதில்கள் குரு தத்துவத்தைத்தான் - எந்த குரு ஸ்வரூபம் ஆத்மதர்சனத்தின்போது தோன்றுகிறதோ, எந்த குரு (சாதகன்) ஆத்மாவைக் காணும்போது ஆத்மாவின் பிரகாசத்தன்மையாகவே இருக்கிருரோ அந்த தத்துவத்தைப்பற்றித்தான் குறிப்பிட்டன. "குரு அகண்ட ஸ்வரூபம், அத்வீதிய தத்துவம். சாதகனை எவர் சிதாகாசத்தில் உலவச் செய்கிருரோ அவரே குரு. ஆன்மவெளியில் மனம் லயிக்கும் போதுதான் அந்த குரு ஸ்வரூபம் தோன்றும். மற்றையது குருமூர்த்தி - வழியை மட்டுமே காண்பிப்பதற்காக தத்துவம் எடுத்துக்கொள்ளும் புறத்தோற்றம்!"

ஆகையால்தான் சாதனையில் சிரமத்தை தவிர்க்க விரும்பும் சாதகர்கள் குருவிடம் உதவி வேண்டி எப்போதும் ஏமாற்றம் அடைகிறார்கள். ஆத்மாவை ஆத்மாவினால்தான் காணமுடியும். ஆகையால் ஆத்மாவின் ஸ்வரூபமே - தன் இதயத்தில் இருக்கும் பிரகாசமே - குருவாகும்.''

வன்யா ஒரு தினம் ''யாருக்கு இந்த த்யானத்தைப்பற்றி உபதேசிக்கக் கூடும்?'' என ஞானானந்தரை வினவினார்.

''எவருக்கு வேண்டுமானாலும் கூடாது'' என ஸ்வாமி பதிலளித்தார். ''முதலிலிருந்து ஆரம்பிப்பது அவச்யம் - பிரார்த்தனை, கர்மானுஷ்டானம், ஜபம், பக்தி. எவர்களால் த்யானத்தில் ஈடுபட முடியுமோ, அவர்களைத்தான் அந்த ராஜபாதையில் அழைத்துச் செல்ல வேண்டும்.''

''நான் ஒத்துக்கொள்கிறேன் - நான் கேட்கும் வினா என்னவெனின் - யார் (த்யானத்திற்கு) தகுதியுடையவர்? இந்த வழியில் அழைத்துச் செல்வதற்குரியவர்களை எந்த அடையாளங்கள் கொண்டு புரிந்துகொள்வது?'' என வன்யா திரும்பவும் கேட்டார்.

''பலசரக்கு வியாபாரி தன் சரக்குகளை அறிந்திருப்பதில்லையா? கடுகிலிருந்து மிளகையோ, அரிசியிலிருந்து கோதுமையையோ பிரிக்கத் தெரியாதவனாயிருந்தால் அவன் கடை வைப்பதால் என்ன பயன்? அவனிடம் விற்பவர்களும், வாங்குபவர்களும் கண்டிப்பாக கஷ்டமடைவார்கள். எது யாருக்குத் தகுந்தது என அறியும் சக்தி படைத்தவனாகயிருக்க வேண்டும். இல்லாவிடில் எதற்காக இந்த பொறுப்பை ஏற்றுக்கொள்கிறான்?

''குரு யார் என்பதை உங்களுக்கு விளக்குகிறேன்,'' என ஞானானந்தர் தொடர்ந்தார். ''நீங்கள் ஆற்றின் ஓரத்தில் உள்ள ஓர் நேர் பாதையில் போய்க் கொண்டிருக்கிறீர்கள். திடீரென ஓர் செங்குத்தாய் இருக்கும் மலையடியில் வந்துவிடுகிறீர்கள். வேறு வழி ஒன்றும் இல்லை. வலப்பக்கத்திலும் இடப் பக்கத்திலும் தடங்கல்தான் இருக்கிறது. அந்த மலையை ஏறுவதுதான் ஒரே வழி. அந்த மலையோ செங்குத்தாக இருப்பதால் உங்களால் ஏறமுடியவில்லை. நீங்கள் மீண்டும் மீண்டும் முயல்கிறீர்கள், ஆனால் பின் வாங்க வேண்டி யிருக்கிறது. அப்போது உதவிகோரி சப்தம் கொடுக்கிறீர்கள் - அப்பா! அம்மா! அப்பா! அம்மா! என்று குழந்தைகள் போல. எல்லாம் செய்ய வல்ல இறைவனுக்கு அனுப்பும் இந்த அழைப்பு தான் பக்தி! இவ்வாறு நீங்கள் கதறிக்கொண்டிருக்கும்போது, உங்கள் விதியை நொந்துகொண்டி ருக்கும்போது உங்கள் எதிரே ஒன்று விழுவது போல் தோன்றுகிறது. நீங்கள் நிமிர்ந்து பார்க்கிறீர்கள். மலை உச்சியிலிருந்து உங்களுக்கு உதவி செய்வதற்காக தொங்கவிடப்பட்டிருக்கும் கயிறு அது! யாரோ ஒருவர் அங்கிருக்கிறார்! யாரோ ஒருவர் ஏற்கனவே வந்திருக்கிறார். அவர் கயிற்றின் ஒரு முனையைப்

பிடித்துக் கொண்டிருக்கிறார். "இதைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஏறுங்கள்" என உங்களுக்குக் குரல் கொடுக்கிறார்-அவர்தான் குரு! முக்கியமானது என்னவெனில் நீங்கள் அதைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும், விட்டுவிடாமலிருக்க வேண்டும். அதுதான் ச்ரத்தை - நம்பிக்கை. ஆனால் குருவிற்கு போதிய வலிவுள்ள திடமான கைகள் இருக்கவேண்டும். இல்லாவிடில் சிஷ்யனின் கனம் அவரை கீழே தள்ளிவிடும் - இருவரும் குட்டிக் கரணம் அடிப்பார்கள்" என சிரித்துக்கொண்டு கூறினார்.

வன்யா அப்போது குறுக்கிட்டுப் பேசினார் "ஸ்வாமிஜி! ஆத்ம தர்சனம் நேரும்போதுதான் குரு தோன்றுவார் என அடிக்கடி கூறிக்கொண்டிருக்கிறீரே!"

"அது முற்றிலும் உண்மை - அவர் ஞானகுரு! எல்லாவற்றையும் ப்ரகாசப்படுத்தும் ஆத்மகுரு! அவர் 'பார்' என கூறுகிறார். அக்கணத்திலேயே ஸ்வரூபம் பிரகாசிக்கிறது. குருவோ, சிஷ்யனோ காணவில்லை. இதயத்திலேயே "தத்வமஸி - நீ அதுவாக இருக்கிறாய்" என ஒலி தரும் ஸ்வரூபம் தான் குரு. மற்றைய குரு - நாம் இப்போது குறிப்பிட்டுக் கொண்டிருந்தது - காரணகுரு, உண்மையான குரு தத்துவமே சிஷ்யனுக்காக அவன் விழிப்படையும் தருணத்தில் ஏற்றுக்கொள்ளும் வடிவம்.

மற்றொரு சமயம் அவர் கூறினார்:

கடவுளிடம் நான்கு விதமான வாடிக்கைக்காரர்கள் இருக்கிறார்கள். முதல் வகுப்பைச் சேர்ந்தவர்கள் அவ்வப்போது தூக்கத்திலிருந்து எழுந்து 'இறைவா' எனக் கூவிவிட்டு மீண்டும் தூக்கத்தை மேற்கொள்கின்றனர். இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஒழுக்கமுறையில் உள்ளவர்கள். கோவிலுக்குச் செல்லுதல், வழிபாடுகளில் ஈடுபடுதல், யாத்திரைகள் மேற்கொள்ளுதல், நாமத்தை உச்சரித்தல், துறவிகளுக்குப் பணிவிடை செய்தல் முதலியவற்றை வாழ்க்கையில் ஆரோக்கியம், செல்வம், முன்னேற்றம் முதலிய நலன்களை விரும்பியவராய் கடைப்பிடிக்கின்றனர்.

உண்மையான பக்தர்கள் மூன்றாவது வகுப்பைச் சேர்ந்தவர்கள். இரண்டாவது வகுப்பினர் கடைப்பிடிக்கும் ஒழுக்க முறையினையே ஆன்ம ஞானத்தை அடைய விருப்பமுள்ளவராய் அனுசரிக்கின்றனர். உலக நலன்களில் அவர்கள் நாட்டம் அடைவதில்லை. அவர்கள் வேண்டுவது ஈசன் அருளையே, ஈசனையே.

கடைசியிலிருப்பவர்கள் ஈசனிடமிருந்து எதையும் கோருவதில்லை. ஈசனைக் காணவேண்டும் என்ற விருப்பம் அற்றவர். ஈசனைப்பற்றியும் அக்கறையற்றவர்கள். அவர்களே ஞானிகள்.

"ஞானி இறைவனிடம் விருப்பமற்றவராயின், அவருக்கும் நாஸ்திகரான லோகாயதருக்கும் என்ன வேறுபாடு? அவனும் இறைவனை விரும்பவில்லையே!" என வன்யா வினவினர்.

"உண்மைதான். இருப்பினும், இருவரிடையே ஒரு முக்கிய வேறுபாடு உள்ளது. ஞானி எதையும் விரும்புவதில்லை - இறைவனையும் விரும்புவதில்லை. ஆனால் நாஸ்திகன் இறைவனை மட்டும் விரும்புவதில்லை. மற்ற எல்லாப் பொருள்களையும் விரும்புகிறன்." என ஸ்ரீ ஞானனந்தர் பதிலளித்தார்.

சிலர் எல்லாம் விரும்புகின்றனர், கடவுளைத்தவிர. மற்றும் சிலர் கடவுளை யும் சேர்த்து எல்லாம் விரும்புகின்றனர். சிலர் கடவுளை மட்டும் விரும்பு கின்றனர். வேறு சிலர் கடவுளை தன் ஸ்வரூபத்திலே கண்டவர்களாய் வேறு எவற்றையும் விரும்புவதில்லை, கடவுளையும் விரும்புவதில்லை.

காமங்கள் எல்லாம் அற்றவனுய், காமங்கள் எவனைவிட்டு நீங்கிவிட் டனவோ, காமங்கள் எல்லாம் எவன் அடைந்திருக்கிறுனே, காமத்தின் விஷய மாக ஆத்மாவே விளங்குகிறதோ அவர்கள் ப்ரஹ்மத்தை அறிந்தவர்களாய் ப்ரஹ்மத்தையே அடைகின்றனர்.... எப்போது காமனைகள் ஹ்ருதயத்தி லிருந்து விலகுகின்றதோ, அப்போதே மனிதன் அம்ருதத் தன்மையை அடை கிறுன். அப்போதே மனிதன் ப்ரஹ்மமாக ஆகிறுன்.

(ப்ரஹ்தாரண்யக உபநிஷத் (4-4))

மேலே சொல்லப்பட்ட ஆசைகள் யாவும் வெறும் கற்பனையல்ல; ஒவ்வொரு நிமிஷமும் இதயத்தை தாக்கும் நிஜவல்லமை பொருந்தியவைகள் - நல்ல உணவை அருந்த, சிநேகிதனை சந்திக்க, புத்தகம் படிக்க, ஸ்வர்கத்தை அனுப விக்க இவை எழலாம்!

வன்யாவின் மற்றொரு வினு 'ஞானிக்கு சரீர ஞானம் இருக்கிறதா?' என்பதைப்பற்றி. வேதாந்தத்தின்படி, ஆத்மாவைத்தவிர வேறு எல்லாம் சரீரம் என்ற சொல்லால் குறிப்பிடக் கூடியவை. தேகத்தையும், மனதையும், வெளி இந்த்ரியங்களையும், அந்தக்கரணத்தையும் அது குறிக்கிறது. இங்கு ஞானம், என்னும் சொல்லால் தமிழில் வழங்கப்படும் ஞாபகம், நினைவு என்பது குறிக்கப் படுகிறது.

"ஆமாம், ஞாபகம் இருக்கிறது." என பதில் அளித்தார் ஞானனந்தர். "அந்த அறிவு ஆத்மாவைப்பற்றிய அறிவாக இருக்கிறது. மற்றவர்களின் அறிவு மனதில் தோற்றத்தை அடைகிறது. மேலும் ஆத்ம ஸ்வரூபமாகத்தான் எல்லா உயிர்களையும் ஞானி காண்கிறுன். அவனுடைய தேகமே அவனுடையதன்று. எந்த ஒன்றும் அவனைச் சேர்ந்ததில்லை! எந்த ஒன்றும் அதே சமயத்தில், அவனுடையதாக இல்லாமல் இல்லை!"

"ஒரே ப்ராணன் தான் எல்லா உயிர்களிலும் சஞ்சரிக்கிறது. எங்கும் ஆத்மாயிருக்கிறது; எங்கும் பூரணமாக இருக்கிறது; எந்த பிராணன்களிலும் எந்த உயிரிலும் ஞானியிருக்கிறுன்; பேதத்தை அவன் காண்பதேயில்லை, எந்த ஒன்றையும் தானுகக் காண்கிறுன்."

கடும் ப்ரச்னைக்குரிய கேள்வியை வன்யா இப்போது கேட்டார். "எதற்காக ஞானி செயல்படுகிறுன்?" இந்தக் கேள்வியை கேட்ட தருணத்திலேயே வன்யாவிற்கு விளக்கம் மனதில் உதித்தது. ஏனெனில் ஞானியினிடத்தில் எல்லா அஹங்காரமும், 'நான்' எனும் தனித்த உணர்ச்சியும், அபிமானமும் முற்றிலும் அழிந்துவிட்டன. 'நான்' எனும் அபிமானம்தான் தவறுன எல்லா செயல்களுக்கும் காரணம்.

இருப்பினும், குருநாதர் தோற்றத்திலே முரண்பாடுடையது போன்ற வழக்கமான விளக்கத்தை அளித்தார்: ஞானிக்குப் புண்யமில்லை, பாபமில்லை, நல்ல செயலில்லை, கெட்ட செயலில்லை. புண்யம், பாபம், நல்லது, கெட்டது- இவைகள் தேகத்தை, அஹங்காரத்தை, 'நான்' எனும் உணர்ச்சியை சார்ந்தவை. எவன் ஒருவன் பேதத்தைக் காண்கிறுனே அவன் தான் வேறுபாட்டை, முரண்பாட்டை காண்கிறுன். அத்விதீய ஆத்ம ஸ்வரூபமாகத்தான் ஞானி எல்லாவற்றையும் காண்கிறுன். இந்த ஒரு பாவனை உதயமாகியவுடன் நல்லது, கெட்டது என்பது எந்த அடிப்படையில் எழும்?"

சம்பாஷணை தொடர்ந்து நிகழ்ந்தது; அன்றைய தினம் வந்திருந்த ஹெரால்ட் வினவினுர்:

"இறந்த பிறகு மறுபிறப்பு உண்டு என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் தேகத்தைவிட்டு விலகிய ஜீவன் சில வருஷ காலங்கள் (100, 500, அல்லது 1000 வருஷங்கள் அவர்கள் அடைந்திருக்கும் லோகத்தை ஒட்டி) தங்கியிருந்து, பிறகு வேறு ஒரு தேகத்தை எடுத்துக்கொள்ளும் எனக் கூறுகின்றனர். எதை ஒருவர் நம்புவது?" இதைத் தொடர்ந்து ருசிகரமான சம்பாஷணை மறுபிறப்பைப் பற்றி நிகழ்ந்தது.

வன்யாவிற்கு பேசுவதற்கு வாய்ப்புக் கிடைத்தவுடன் - பழைய வாழ்வைப் பற்றியாவது, புதிய வாழ்வைப்பற்றியாவது கவலை கொள்வது பயனற்றது. இது உண்மையானதாகவும் இல்லை. இந்த மறுபிறப்புக் கொள்கையில் தன்னைப் பொறுத்தவரை, ஒருவித கருத்தும் இருப்பதாகத் தோன்றவில்லை - என குருநாதரிடம் தெரிவித்தார்.

"கவலை கொள்வது தேவையில்லை என்பதை முற்றிலும் ஒப்புக் கொள்கிறேம். ஆனுல் தொடர்ந்து பிறவிகள் இல்லை என நீங்கள் எவ்வாறு கூறலாகும்? இந்தப் பிறப்புக்கு ஒரு காரணம் இருக்கவேண்டும். இந்த உலகில்

ஒருவன் பிறப்பதற்கும், குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஒருவன் பிறப்பதற்கும், சரியான விளக்கம் அளிக்கும் முற்பிறவியைத் தவிர வேறு எந்த காரணம் கூறமுடியும் ?''

"அப்படியானல் முந்திய பிறவிக்குக் காரணம் என்ன ?'' என வன்யா வினவினர்.

"அதற்கு முந்தியதுதான், இது போலவே தொடர்ந்து இருக்கிறது''.

"சரி, அப்படியானல் உலகில் முதலில் ஒரு ஜீவன் வந்த சமயம் ஒன்று இருக்கவேண்டும். அந்தப் பிறவிக்கு எதைக் காரணமாகக் கூறமுடியும் ?''

"யாராவது பிறந்தது என்பது உண்டா ?'' என ஞானனந்தர் பதிலளித்தார்.

"பிறப்பு, இறப்பு, என்பவை எப்போதுமே இருந்ததில்லை, இருக்கப் போவதுமில்லை.

கைகள், கால்கள், கண்கள் ப்ராணன் இவைகள் உண்டாயிற்று. உண்டாகியவையெல்லாம் கண்டிப்பாக போகக்கூடியவையே. ஆனல் நான் ? ப்ராணன் போனலும் ஆத்மா இருக்கிறதல்லவா ?''

ஆத்மா பிறப்பதில்லை, அழிவதில்லை, எங்கிருந்தும் வரவில்லை, எதுவாகவும் ஆகவில்லை. பிறப்பற்றவன், நித்யன், எப்போதும் இருப்பவன், புராணன்; சரீரம் கொலையுறும்போது அவன் கொலையுறமாட்டான்.

(கடோபநிஷத் 2-(18))

ப்ரளயம் என்பது கிடையாது. சிருஷ்டி என்பதும் கிடையாது, பந்த முறுபவன் என்பது கிடையாது, சாதகன் என்ெருருவன் கிடையாது. மோக்ஷத்தை விரும்புபவன் கிடையாது. முக்தி அடைந்தவன் என்பதும் கிடையாது - இதுதான் பரமார்த்த உண்மை.

(கௌடபாத காரிகை 2 (32))

ஸ்வாமி பக்தர்களுக்கிடையே கேள்விகளும், பதில்களும் மாறி மாறி வெகுநேரம் வளர்ந்துகொண்டே போயின. அவைகளில் நாட்டம் கொள்ளா ததால், வன்யா அரை மனதுடன் கேட்டார். அந்த நாட்களில் தான் பார்த்த வைகளையும், கேட்டவைகளையும், அதனுல் தனக்கேற்பட்ட அனுபவங்களையும் சிந்தித்துக்கொண்டிருந்தார்.

திடீரென ஞானனந்தர், வலது வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு பக்தரை உற்று நோக்கி கூறினர்: "நீ எப்போதுமே பல இடங்களில் தேடிக் கொண்டேயிருக்கிருய் - இந்த மதம், அந்த மதம், இந்த குரு, அந்த குரு

என்று வாழ்க்கையை வீணுக்கிக்கொள்ளாதே. உபநிஷத்துகளில் ரிஷிகள் அளித்திருக்கும் உபதேசங்களை நம்பு. தத்துவத்தை உண்மையாக அவர்கள் கண்டவர்கள். எல்லாம் அங்கே இருக்கிறது. வேறெங்கும் தேடுவது பயனற்றது.''

ஒரு மாலை சிற்றுண்டிக்குப் பிறகு ஞானனந்தரைக் கண்டு தனித்துப் பேசுவதற்காக வன்யா சென்றார். கிணற்றின் அருகே ஒரு சிமெண்ட் பலகையில் உட்கார்ந்திருந்தார். அவரருகே ஒரு இளைஞன் மிகவும் உணர்ச்சி வசப்பட்டு பேசிக்கொண்டிருந்தான். பூஜைகள் செய்வதாகவும், ஜபம் செய்வதாகவும் சாக்கு சொல்லி தன்னிடமிருந்து பணம் பறித்தவர்களைப்பற்றி அவன் பேசிக்கொண்டிருந்தான் போலத் தெரிகிறது. ஸ்ரீ ஞானனந்தர் அவனை சாந்தப்படுத்திக்கொண்டிருந்தார். ஆனால் அவன் மீண்டும் அதையே பேசினான். இது நீண்ட நேரம் தொடர்ந்தது.

அவன் இறுதியில் விடைபெற்றுச் சென்றதும் வன்யா ஞானனந்தரை அணுகினர். ஞானனந்தர் கூறியதாவது:

"ஹிந்து மதம் வெளிக் கண்ணோட்டத்தில் மூடப்பழக்கங்களும், பணம் சம்பாதிக்கும் தந்திரங்களும் கொண்டது. ஒவ்வொருவனும் அயலானைத்தான் நன்மை அடையும்பொருட்டு ஏமாற்றுகிறன். இருப்பினும் வேறெங்கிலும் காணமுடியாத ஒரு பொருள் ஹிந்து மதத்தில் இருக்கிறது - ப்ரஹ்ம ஞானம், ஆத்ம தர்சனம், சத்வித்யை.''

# 10. தபோவனத்தில் விழா நாட்கள்

அந்த வியாழக்கிழமை ஏகாதசி தினம் - பக்ஷத்தின் பதினோருவது தினம். ஆசார வழக்கின்படி இது ஒரு விசேஷமான தினம். பல ஹிந்துக்கள் முழு சாப்பாட்டை விலக்குகிறர்கள். அரிசி சாதமாவது சாப்பிடாமல் இருக்கிறர்கள். ஜபம் போன்றவைகளை ஒருவர் அதிகமாக அனுஷ்டிக்க வேண்டிய தினமும் அது.

வழக்கம் போல் அன்றைய மாலை அகரத்திலிருந்து ப்ராம்மணர்கள் ஸஹஸ்ரநாமம் உச்சரித்தனர். சீக்கிரத்திலேயே, திருக்கோவிலூரிலிருந்தும் அகரத்திலிருந்தும் ஸ்ரீ ஞானனந்தரின் எல்லா பக்தர்களும் கூடினர். நான்கு மணியிலிருந்து எட்டு மணிவரை பஜனை பரவசப்படுத்தும் நிலையில் நிகழ்ந்தது. மெள்ளமாக கனத்த குரலில் ப்ராம்மணர்கள் தைத்திரிய உபநிஷத்தை பாராயணம் செய்தனர். பிறகு மாதர்கள் தமிழ் பாடல்கள் பாடினர்கள்.

தனக்குப்பிடித்த மாணிக்கவாசகரின் பாடல்களை கைலாஸநாதர் பாடினர். முருகதாஸ் எல்லோரும் கலந்து பாடவேண்டுமென விரும்பினர். அவரே

பஜனை செய்ய ஆரம்பித்தார். ஒவ்வொரு நாமாவளியின்போதும், பாடலின் முடிவின்போதும் பக்தர்களை சேர்ந்து பாடுமாறு உத்சாகப்படுத்தினர். ஒவ்வொரு தடவையும் இது அதிகரித்தது. உணர்ச்சியும் உத்சாகமும் பெருகின.

பந்தலில் மேடையின்மீது சிவன், முருகன் இருவர்களுடைய விக்ரகங்கள் வைக்கப்பட்டிருந்தன. அதன் எதிரில் எண்ணெய் விளக்குகளும், நெய் விளக்குகளும், ஊதுவத்திகளும் எரிந்தன. வரும் பக்தர் ஒவ்வொருவரும் புஷ்பங்கள், பழம், ஊதுவத்திகள் கொண்டுவந்து விக்ரஹங்களுக்கு முன் சமர்ப்பித்தனர். பக்திப் பாடல்கள், வாசனைத்ரவ்யம், தீபங்கள் - அவ்விடத்தில் விளங்கிய தெய்வ சாந்நித்யத்தை ஒருவன் உணராமல் இருக்கமுடியாது. இடையிடையே கற்பூர ஆரத்தி விக்ரஹங்களுக்குக் காண்பிக்கப்பட்டது.

ஏகாதசி பஜனைக்காக வந்திருந்த பல பக்தர்கள் ஆஸ்ரமத்திலேயே அன்றிரவு தங்கினர். பாடல்களினுலும், பேச்சுகளினுலும் களைப்புற்றபின் அவர்கள் பந்தலின் அடியே கால்களை நீட்டிப் படுத்து உறங்கினர். மற்றவர்கள் நிறுத்திய பிறகும் முருகதாஸ் பஜனையை தொடர்ந்து செய்துகொண்டிருந்தார். அவர் நாமாவளி சொல்லும்போது மற்றவர்களும் சேர்ந்துகொண்டதால் சப்தம் கணீர் எனக்கேட்டது. பாடல்களின் மெட்டும் த்வனியும் தமிழ் கிறிஸ்தவர்களின் வழிபாட்டை ஒத்திருந்தன. திகைப்புற்று வன்யா ஆழ்ந்து கேட்கலானுர் ... ஏசுவே ... ஆண்டவரே ... முருகா ... தாயே ... மேரியே ... என்று நாமாவளி தொடர்ந்தது. சில நிமிஷங்களில் ஆழ்ந்த நித்திரைக்கு எல்லோரும் வசமானுர்கள்.

மறுநாள் காலை, முருகதாஸ், மற்றுமுள்ளவர்களுடன் வன்யா கிணற்றுக்கு ஸ்நானத்திற்காகச் சென்றுர். ஒரு குடியானவன் நீர் இறைத்து உதவ முன்வந்தான். வன்யாவிற்கு பழக்கமில்லாததை புரிந்துகொண்டு அவனுல் முடிந்த அளவு வாளியில் நீர் இறைத்துத், தான் விரும்பும் அளவுக்கு அவர்மீது ஊற்றினுன். அவனுடைய கழுத்தைச்சுற்றி ஒரு தாழ்த்து இருந்தது, சந்தேகமடைந்து, வன்யா அவனை யார் எனக் கேட்டார். அவன் ஒரு ஏழை கிராமவாசி - ஏழு, எட்டு மைல்களுக்கப்பால் உள்ள கிராமத்தைச் சேர்ந்தவன். முந்திய தினம் தபோவனத்தில் கட்டிட வேலைக்காகக் கல்மண் சுமந்து கூலி வேலை செய்தான். மாலையில் மிகவும் களைப்புற்றிருந்தபடியால், மறுதினம் காலை வேலைக்கு வரவேண்டியதாகவும் இருந்ததால், ஆஸ்ரமத்திலேயே இரவைக் கழித்தான். இரவில் வெகுநேரத்திற்குப் பின்னும் உரத்த குரலில் பாடிக் கொண்டிருந்தது அவன்தான் என கூறினுன். எங்கிருந்தாலும், எப்போது தூக்கம் வரவில்லையோ அப்போது இப்படித்தான் வழக்கமாக தான் செய்வது என அவன் விளக்கினுன்.



மற்றுமொரு கிறிஸ்தவனை வன்யா ஆஸ்ரமத்தில் சந்தித்தார். அவன் ஒரு உள்ளூர் பையன். திருக்கோயிலூர் பள்ளியில் படிப்பவன். மற்ற

சிநேகிதர்களுடன் குருவைப் பார்க்க வருவான், இந்தப்பையன் மற்றவர்களைப் போல இல்லை என்பதை வன்யா உடனே தெரிந்துகொண்டார். அவன் நமஸ்காரம் செய்யவில்லை; கைகளால் அஞ்சலி செலுத்திய முறையும் 'அவன் ஹிந்து மதத்தினன் அல்ல' என்பதைக் காட்டித் தந்தது. கைகளை ஒரு மாதிரியாக சேர்த்துக் கொண்டு மார்பில் அழுத்தினான். அந்தப் பையன் வன்யாவை பார்க்க ஆவலுடையவனாக இருந்தான்போலும்; ஆனால் வன்யா அவனிடமும், வேறு யாரிடமும் பேச விரும்பவில்லை. ஒரு தினம் பகலில் அப்பையன் வன்யா ஓய்வெடுத்துக்கொள்ளும் சிறிய அறைக்கு வந்தான். தான் மௌனமாக இருப்பதாக வன்யா ஜாடை செய்தார். அப்பையன் தன் கேள்விகளுக்கு சில வார்த்தைகளிலாவது விடைகள் எழுதிக் காண்பிக்குமாறு வற்புறுத்தினான், வேண்டிக்கொண்டான்.

''நெற்றியில் விபூதிப் பட்டை போடுவதுண்டா?'' என வன்யா ஜாடை மூலமாக அவனைக் கேட்டார். பையன் சிலுவை போன்ற சம்க்ஞையை செய்தான். வன்யா அவன் பெயரைக் கேட்டார்.

'' ஞானப் பிரகாசம் '' என பதிலளித்தான்.

'' கிறிஸ்தவனாக இருந்தால், நீ ஏன் இங்கு வருகிறாய்? உன்னுடைய கிராமத்தில் பாதிரிகள் இல்லையா ?''

''உண்மைதான். ஆனால் நான் ஹிந்துமதத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். ஹிந்துமத நூல்களைப் படிக்க ஆசைப்படுகிறேன். சில நூல்களை எனக்குத் தாருங்கள்.''

'' தருவதற்கு என்னிடம் ஒன்றும் இல்லை. குருநாதரிடமே ஏன் கேட்கக்கூடாது ?''

'' நான் அஞ்சுகிறேன்.''

'' அப்படியானால் என்னிடம் ஏன் வருகிறாய் ?''

'' அவருக்கு அடுத்தபடியாக உங்களிடத்தில்தான் எனக்கு நம்பிக்கையிருக்கிறது''. பேச்சை நிறுத்திக்கொள்வது உசிதமென நினைத்து அப்பையனை அவன் ஊர் பாதிரிகளை அணுகுமாறு மீண்டும் கூறி அனுப்பினார்.

ஏகாதசிக்கு இரண்டு நாள் பிறகு சிவராத்திரி, அதே போல், மறக்க முடியாமல் இருந்தது. ஒவ்வொரு க்ருஷ்ணபக்ஷ த்ரயோதசி இரவும் (பதின்மூன்றும் நாள் இரவு) சிவபெருமானுக்குகந்த தினம்; ஆனால் மாசி மாதத்தில் (வட இந்தியாவில் பங்குனி மாதம்) நிகழும் சிவராத்ரி மிகவும் புனிதமானதாகும். சிவபெருமான் அருணாசலத்தில் ஜோதிர்மயமாகக் காட்சிக் கொடுத்ததை கொண்டாடும் தினமாக சிலர் அதைக் கருதுகின்றனர். முழு இரவும் பூஜை, பாடல், ஜபம் முதலியவைகளில் செலவழிக்கப்பட வேண்டும்.

ஒருவரும் தூங்கக்கூடாது. முந்திய தினத்து உபவாசம் தேகத்தையும் மனதையும் இவைகளுக்குரிய நிலையில் வைத்திருக்க உதவும்.

ஏகாதசி அன்று மாலையில் நடந்த நிகழ்ச்சியே திரும்பவும் நடந்தது; ஆனால் இத்தடவை விஸ்தாரமாக இருந்தது. இரவு 8 மணியிலிருந்து காலை 4 மணி வரை தொடர்ந்திருந்தது. நடு இரவில் - மிகவும் புனிதமான அந்த நேரத்தில் - ஒரு பெரிய வெண்கல தீபம் கொண்டுவரப்பட்டது. அதை வைப்பதற்கு முன், தரையில் ஜலம் தெளித்து, ஒரு மாது அதில் வழக்கமான கோலம் போட்டாள். பிறகு அந்த தீபம் ஏற்றப்பட்டது. பரஸ்வரூபத்தின் சின்னமான அந்த தீபத்தை சுற்றிப்பாடல்களும் நர்த்தனங்களும் சலிப்பின்றி விடியற்காலை வரை நடைபெற்றன. அருட்ஜோதி மயமான சிவபெருமானுக்கு நடத்தும் வழிபாடு இது.

அன்றிரவு வந்திருந்த பக்தர்களிடையே, நகரத்திலிருந்து ஒரு ப்ராம்மணர் வந்திருந்தார். தன் மனைவியுடனும், மூத்த குமாரனுடனும் அவர் அடிக்கடி வந்து குருநாதரின் பாதங்களில் வணங்குவார். இச்சமயம் அவருடைய மனைவி உடன் வர மனமில்லாமல் வீட்டிலே தங்கிவிட்டாள். அவளுடைய இதயம் வேதனையோடு கூடியதாக இருந்தது; எதுவும் அவளை சமாதானப் படுத்தவில்லை. ஏனெனில், அன்றிரவு அவளுடைய இரண்டாவது குமாரன், கங்கையின் கரையில் உள்ள ரிஷிகேசத்தில் இருக்கும் ஸ்வாமி சிவானந்தரிடம், சந்நியாஸ ஆச்ரம தீக்ஷை பெற்றுக்கொள்ள இருந்தான்.

பல வருஷங்கள் அப்பையன் ஸ்வாமி ஞானனந்தர் அருகே பக்தியுடன் சேவை செய்து கொண்டிருந்தான். அச்சமயத்தில் குறிப்பாக இரண்டு சிஷ்யர்கள் ஸ்வாமியின் அன்புக்கு பாத்திரமாகி இருந்தார்கள். மற்றொருவன் கும்பகோணத்தைச் சேர்ந்தவன். இருவரும் குருநாதர் அனுமதி கொடுத்தாரே யானல் எப்போதும் உலகைத் துறக்க தயாராக இருந்தார்கள். ஒருவனை கல்யாணம் செய்துகொள்ளும்படி சொன்னார். மற்றொருவருக்கு ஹிமாசலத் திற்குச் சென்று, உறவினர்களுடன் உள்ள பந்தத்தை நீக்கும் விவேக ஞானத்தை வளர்த்துக்கொள்ளும்படி புத்திமதி கூறினர்.

அந்த ப்ராஹ்மண தம்பதியின் இரண்டாவது குமாரன் ரிஷிகேசத்திற்கு சில மாதங்களுக்கு முன்பே சென்றுவிட்டான். தனிமை, எளிமை, த்யானம், நிறைந்த வாழ்வுக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்டதின் அடையாளமாக காவியுடையை அவன் ஏற்றுக் கொள்ளும் தருணம் வந்துவிட்டது. சிவராத்ரி இந்த நிகழ்ச்சிக்கு ஏற்ற நேரமாகக் கருதப்படுகிறது. அன்றிரவு கங்கை நதி யில், எவையெல்லாம் அவனுடையதாக இருந்ததோ அவையெல்லாம், தன் ப்ராம்மண ஜாதிக்குரிய சின்னங்களை - த்விஜன் என்பதற்குரிய சின்னமான பூணூல், குடுமி, இறுதியாக உச்சரிப்பதன் மூலம் ப்ராம்மணனின் ஒப்புயர்வற்ற

காயத்ரி மந்திரம் இவைகளை - களைந்து எறிவதால் பாவனுரீதியில் விடப்பட்டதாக ஆகிறது. அவனுடைய பெயர், ஜாதி, வம்சம் எல்லாம் விலகியதாய் விட்டன. தீக்ஷை அளிப்பவர்களிடமிருந்து அவன் ஒரு புதிய நாமத்தைப் பெறுவான். எந்த ரிஷியினுடைய வம்சத்தில் அவனுடைய தேகம் பிறந்ததோ அந்த ரிஷியுடன் இனிமேல் அவனுக்குத் தொடர்பு கிடையாது. சிஷ்யன் - குரு என்ற கிரமத்தில் உள்ள அவனுடைய குரு-சிஷ்ய பரம்பரை ஆதியில் எந்த ரிஷியுடன் சம்பந்தப்பட்டு இருந்ததோ, அந்த ரிஷியோடுதான் இவனுக்கு தொடர்பு. எல்லாவற்றையும்விட தன் இதய ஆகாசத்தில்தான் தன் உண்மையான பிறப்பிடத்தை அவன் தேடி உணரவேண்டும். ஒரு புத்திரனைப் பெற்றெடுத்து, அவன் மூலம் தன் முன்னோர்க்குரிய பிண்டதானங்களை உறுதிப்படுத்திக்கொள்ளாமல், எவனொருவன் உலகைத் துறக்கிறானோ அவனை 'பந்தத்திலிருந்து விடுதலை அடையவேண்டும்' என்ற தவிர்க்க முடியாத தீவிர தாபமுடையவனுகத்தான் கருத வேண்டும். அவன் இனிமேல் வீடுவாசலின்றி, அடியார்களின் ஆதரவைத்தவிர வேறு ஒரு உதவியுமின்றி, பாமரர்கள் தெய்வீகத் தொடர்புடையதாகக் கருதும் அனுஷ்டானங்களும் இன்றி இருக்கிறான் எனில், அதற்குக் காரணம் அவன் தீவிரமான தாபாக்னியால் தகிக்கப்பட்டிருப்பதுதான். பந்த பாசங்களின்றி மீண்டும் அந்த அக்னியில் முழுவதும் அர்ப்பணித்துக் கொள்வதைத் தவிர அவனுக்கு இனி வேறு வழியில்லை.

எல்லோரும் நேசித்த அந்த இளைஞனின் ஞாபகம், அன்றிரவு நிகழ்ச்சிகளில் தொடர்ந்து இருந்து வந்தது. குருநாதர் சந்தோஷத்துடன் காணப்பட்டார் - இளைஞனுடைய ஆன்மீகத் தந்தையான அவர் அவனுக்கு சில நாட்கள் முன்பு ஆசிகளை தெரிவித்திருந்தார். மற்ற பக்தர்களும் அவருடன் உவகையோடு இருந்தனர். இளைஞனின் மூத்த சகோதரன் மன சமாதானம் செய்துகொள்ள சிரமப்படவில்லை. ஆனுல் தந்தைக்கு, அது ஒரு பெரிய த்யாகமாக இருந்தது; தன் மகனுக்கு ஒரு நல்ல எதிர்காலத்தை அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் - இப்போது அம்மகனையே பார்க்க வாய்ப்பிருக்குமா? சம்ப்ரதாயத்தின் கடுமையான நியதிப்படி அவனுடைய குடும்பத்தை பொறுத்தவரையில் சந்நியாசி இறந்தவனே ஆவான்; குடும்பமும் அவனைப் பொறுத்த வரையில் இறந்தது போலவே கருதப்படும் - "யார் என் தாய்? யாவர் என் சகோதரர்கள்?" இருப்பினும் அந்த புதிய சந்நியாசியின் தந்தையை எல்லோரும் பாராட்டிக் கொண்டிருந்தார்கள். தான் பெற்ற பாக்யத்திற்கு இறைவனுக்கு நன்றி செலுத்தும்படி கூறிக்கொண்டிருந்தார்கள். மனிதப்பிறவி அனைத்திலும் ப்ராம்மணப் பிறவி உயர்ந்தது எனின், எல்லா பந்தங்களிலிருந்தும் விடுவிப்பதாயும், மோக்ஷத்திற்கு நேர் மார்க்கமாக இருப்பதாயும், அவர்கள் வாழ்வின் இறுதி லக்ஷ்யமாயும், பூரண திருப்தியை தரவல்லதாயும் உள்ள சந்நியாஸத்தின் உயர்வைப்பற்றி கூறவும் வேண்டுமா? ஸ்ரீ ஞானனந்தரின் ஆசியும் கனிவான சில சொற்களும் அத்தந்தைக்கு மற்றவர்களின் ஆறுதல்களையும் பாராட்டுகளையும் விட அமைதி அளித்தன. ஆனுல் தன் பிள்ளையை தன்னிடமிருந்து

பிடுங்கி மோக்ஷ மார்க்கத்தில் நிறுத்திய அந்த ஞானியின் முன் வந்து வணங்க அந்த ஏழை அன்னைக்கு தைரியம் வரவில்லை; வீட்டிலேயே தங்கி தனித்து அழுதுகொண்டிருந்தாள்.

எல்லா நாடுகளிலும், எல்லா இனங்களிலும் தாய், தந்தையர்களின் இதயங்கள் ஒரே தன்மை உடையன - எல்லா இடங்களிலும், நாடுகளிலும் இறைவனின் கட்டளைகளும் ஒரே விதமானவை. எவர்களை தன்னிடம் அழைத்துக்கொள்ள விரும்புகிறானே அவர்களுக்கு ஆன்மீக உணர்வைப் புகட்டு கிறான். மனிதனின் செவியை அடையும் பலவிதமான சப்தங்களை, ஒலிகளை இறைவன் உபயோகப்படுத்துகிறான். - மனிதர்களின் பிறப்பில் உள்ள சூழ் நிலைகளை அனுசரித்து, இறைவனிடமிருந்து பெறும் உணர்வு எங்கும் சமமாக இருக்கிறது. உள் இதயத்திலிருந்து வேட்கை பிறக்கிறது. எங்கு நிகழ்ந்தா லும் இறைவனின் அழைப்பு மனித இதயத்தினை ஊடுருவிப் பாய்கிறது.



அந்த சமயத்தில்தான் புகழ்பெற்ற ரிஷிகேச ஆஸ்ரமத்தில் தீக்ஷை பெற்ற இரண்டு சந்நியாசிகளை வன்யா தபோவனத்தில் சந்தித்தார். ஒருவர் தன் குருவை மிகவும் போற்றினர். மற்றொருவர் அவ்வளவாகப் பாராட்டி பேசவில்லை. எது எப்படியாயினும், இரண்டாவதாகக் கூறப்பட்டவர் எப்படி ஞானனந்தரை அடைந்தார் என்பது கூறத்தகும்.

ரிக்ஷிகேசத்தில் உள்ள ஆனந்தகுடிரில் அந்த சந்நியாசி பல வருஷங் களாக இருந்து கொண்டிருந்தார். ஒரு தினம் - அச்சமயத்தில் அந்த சந்நி யாசி தூங்கிக்கொண்டிருந்தாரா, விழித்திருந்தாரா, என வன்யா, பின்பு இச் சம்பவத்தை எழுதும்போது, நினைவுக்குக் கொண்டுவர முடியவில்லை - ஒரு வயதான சந்நியாசி அவரை நோக்கி வந்து, தன்னுடன் சேர்ந்துகொள்ளுமாறு கூப்பிட்டார். இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மற்றுமொரு கோடிவரை அவர் சென்று பல சந்நியாசிகளை சந்தித்திருந்தாலும், அந்த சந்நியாசியின் முகம் அவருக்குத் தெரியவே தெரியாது. இந்த சம்பவம் குறைந்தது இரண்டு தடவையாவது நிகழ்ந்தது. பூர்ணனந்தா மேலும் மேலும் குழப்பம் அடைந் தார். அந்த சமயத்தில்தான் அவர் திருக்கோயிலூரிலிருந்து வந்திருக்கும் இளைஞரின் அறைக்குச் சென்றார்; சுவரில் உள்ள படத்தில் தன் எதிரே தோன்றிய முகத்தையே ஆச்சர்யத்துடன் கண்டார்.

"அவர் யார்?" என இயல்பான ஆச்சர்யத்தினுல் அவர் சந்த்ருவைக் கேட்டார்.

"ஸ்வாமி ஞானனந்தா, என் குருநாதர்" என சந்த்ரு உடனே பதிலளித்தார்.

இயற்கையான ஆவலினுல், பூர்ணுனந்தா அவரைப் பற்றிய தகவல் களை விசாரித்தார்; ஆர்வத்துடன் மற்றவரும் அளித்தார். சீக்கிரத்திலேயே, தன் சிஷ்யர்களை தன்னிடத்திற்கு விசித்ரமான வழிகளில் அழைத்துக் கொள் ளும் குருநாதரைத் தேடி அவர் தபோவனம் அடைந்தார்.



ஸ்வாமி சிவானந்தாவின் மற்றுமொரு சிஷ்யரான சந்நியாசி திருவண் ணுமலை கோவிலில் இருந்துகொண்டு இங்குமங்கும் தன் குருவின் உபதேசங் களைப் பற்றி உபந்யாசங்கள் செய்துவந்தார். குருவினுடைய ப்ரசுரங்களை அவர் விநியோகித்தார்; ஆனந்தகுடிரின் தலைவரின் உபதேசங்களையும் அனுப வங்களையும் இந்தியா முழுவதும் பரப்பிவந்த DIVINE LIFE SOCIETY யின் ஒரு கிளை ஸ்தாபனத்தைத் துவக்க விரும்பினுர். அவர் தபோவனம் வந்தார். குருவின் அனுமதிபெற்று ஆஸ்ரமவாசிகளிடம் தன் திட்டத்தை விவரித்தார். பெருமாள் கோவிலில் உபந்யாசங்கள் ஏற்பாடு செய்வதில் முனைந்தார். அவர் அம்முயற்சியில் வெற்றியடையவில்லை, என வன்யா பின்பு தெரிந்துகொண்டார். தகவல் தெரிவித்தவர் கூறியதுபோல் இம்மாதிரியான சங்கங்களையும் ஸ்தாபனங்களையும் நிறுவுவதால் என்ன பயன்? மேலும் எவ்வளவு புனிதமான வராயிருந்தாலும், உங்களுக்குத் தெரியாதவராய் 1000 மைல்களுக்கப்பால் உள்ளவரிடமிருந்து - ஸ்தாபனத்தின் மூலமாகவானுலும் - அருளையும் உத்சாகத் தையும் பெறுவது என்பது அர்த்தமுள்ளதா? - அருகிலேயே இந்தியாவிலுள்ள எல்லா ஞானிகளுக்கும் சமமான ஞானி இருக்கும்போது!

எப்படியிருப்பினும் அந்த சாது மிகவும் நல்ல மனிதர். உண்மையான ஆர்வம் உடையவர். துரதிருஷ்டவசமாக அவர் பெரிய செவிடாக இருந்தார்- ஒரு சிக்கலான கருவியின் உதவியினுல்தான் அவர் சம்பாஷணை நடத்த முடி யும். அந்தக் கருவியின் ஒரு நுனியை பேசுபவரிடம் கொடுப்பார்; மற்றொரு நுனி பாகத்தை தன் காதில் சொருகிக்கொள்வார். அவருக்கு எல்லையற்ற பொறுமை இருந்தது; பிறர் சொல்வதைத் திரும்பத் திரும்பச் சொல்லும்படி செய்து, கஷ்டப்பட்டு ஒருவாறு அவர்கள் சொல்வதை புரிந்துகொள்வார். ஒருநாள் (பிற்பகல்) அவர் திருவண்ணுமலைக்கு செல்லவேண்டியிருந்தது. பஸ் வண்டியில் ஏற ரோடுக்கு அவர் செல்லும்போது வன்யா உடன் சென்றுர். ' மத்தள - குழாய் போன்றிருந்த கருவியை உபயோகித்து இருவரும் சம்பா ஷணை செய்ய மிகவும் முயன்றனர். ஆனுல் இச்சமயம் வன்யாதான் புரிந்து கொள்ள திணரவேண்டியிருந்தது. அந்த சாது ஸ்வாமியைப் பற்றி பேசிக் கொண்டே இருந்தார். -' ' அந்த ஸ்வாமி யார்? ' என வன்யா புரிந்துகொள்ள வில்லை. சில நேரங்களில் அவர் ஸ்ரீ ஞானுனந்தரைக் குறிப்பிடுவது போல் தோன்றிற்று; மற்ற நேரங்களில் அவரைப்பற்றி குறிப்பிடவில்லை என நன்கு தெரிந்தது. 'ஸ்வாமி' இதைச் சொல்லியிருந்தார்;, அப்படி நினைத்தார் ... இதை இதைச் செய்யவேண்டும் என நினைத்தார் ... குறிப்பாக 'ஸ்வாமி'

தபோவனத்தருகே குடிசை ஒன்று கட்டும் எண்ணம் கொண்டிருந்ததாக சொன்னார். ஏனெனில் குறிப்பிட்ட தினங்கள் தனிமையில் த்யானம் செய்தால் ஆத்ம தர்சனம் கிடைக்கும் என 'ஸ்வாமி' நம்பினார் .. இறுதியில் 'ஸ்வாமி' திடீரென கேரளாவிற்கு பயணமாவது பற்றி பேச்சு வந்தது -

இந்த சந்தர்பத்தில் வன்யா குறுக்கிட்டு கேட்க வேண்டியதாக இருந்தது-

"என்ன இது? ஸ்வாமி ஞானனந்தர் கேரளா செல்கிறாரா? ஒருவரும் சொல்லவில்லையே! எப்போது செல்கிறார்?"

"இல்லை, இல்லை ஸ்வாமி ஞானனந்தரில்லை" என உடனே பதிலளித்தார். "இந்த ஸ்வாமி" என்று சொல்லி தன் உடம்பைச் சுட்டிக்காட்டினார்.

வன்யா மறந்திருக்கிறார், அல்லது சரியாக இன்னும் புரிந்து கொள்ளவில்லை போலும்! ஒரு உண்மையான சந்நியாசி 'நான்' என்னும் எண்ணத்தை நீக்கி பரம்பொருளோடு ஒன்றி விட்டதால் எப்படி தன்னைப் பற்றி 'நான்' என அவர் குறிப்பிட முடியும்? ஐரோப்பாவில் உள்ள சந்நியாசினிகள் (NUNS) தங்களுடைய தூய எளிமையை பாதுகாக்க வேண்டி காலணிகளையும், தையல் - ஊசிகளையும் பற்றிக் குறிப்பிடும்போது கூட ராஜ தோரணையில் வழங்கப்படும் 'நாம்' எனும் சப்தத்தை உபயோகிப்பர். சாதுக்கள் அம்மாதிரியே 'நான்' எனும் எண்ணத்தை தீக்ஷையின்போது கங்கை நீரிலே ஓடும்படி விட்டுவிடுவதால், அவர்களைப்பற்றி படர்க்கையில்தான் குறிப்பிட வேண்டியிருக்கிறது. ஐயோ! படர்க்கை நிலையில் 'ஸ்வாமி' என்று குறிப்பிட்டு பேசுவது யார்?



பூர்ணனந்தா திருப்தியற்று இருந்தமைக்கும் மற்ற சந்நியாசி ஆர்வமுடன் தன் குருவை போற்றியதற்கும் காரணம் என்னவாக இருந்தாலும் ஸ்ரீ சிவானந்தாவைப்பற்றி அப்போது வன்யா கேட்ட ஒரு கதை கூறத்தகுந்தது.

ஜனவரி மாதத்தில் ஒருநாள் மாலை. ஹிமாலயத்தின் அடிவாரங்களில் மிகவும் குளிர் உள்ள நேரம்.

ஆஸ்ரம அரங்கில் விருந்தினரோடும், சிஷ்யர்களோடும் சிவானந்தா உட்கார்ந்து த்யானம் செய்து கொண்டிருந்தார். எல்லோரும் போர்வைகளை போர்த்திக்கொண்டு, கம்பளிகளினால் தங்கள் தலைகளை சுற்றி மூடிக்கொண்டிருந்தனர். திடீரென ஒரு சப்தம் கேட்டது. எல்லோரும் கண்களை திறந்து நிமிர்ந்து பார்த்தார்கள். குருநாதருக்குப் பின்னால் கத்தி ஒன்று படத்தில் குத்தப்பட்டு தொங்கிக்கொண்டிருந்தது. குருவின் நெற்றிக்குப் பக்கமாக, தலைப்பாகையினால் திருப்பப்பட்டு அங்கு சென்றிருக்கிறது. பக்தர்கள் உடனே

தாவினர். குற்றவாளியைப் பிடித்து போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் சென்றனர். தென்னிந்தியாவிலிருந்து வந்திருந்த ஓர் இளைஞன் அவன். பலருக்குப்போல் அவனுக்கும் சிவானந்தா தன் தங்குதடையற்ற கருணையால் ஆஸ்ரமத்தில் ஆதரவு அளித்தார். அவனுடன் இருப்பவர்கள் அவனைப்பற்றி புகார் செய்தபோதிலும் கூட, அந்த ஆஸ்ரமத்தின் தெய்வீக சூழ்நிலையில் அந்த சிறுவன் தங்குவதால், இறுதியில் சிறிதாவது திருந்துவான் என அவர் நம்பினர்.

மறுநாள் விடியற்காலை சிவானந்தா மலர்களுடன் போலீஸ் நிலையத்தில் இருந்தார். அந்த இளைஞரைப் பார்க்க அனுமதி கேட்டார். அவனைக் கண்டு உடனே மாலையிட்டார். பாதங்களைத் தொட்டு வணங்கினர் - இறைவன் எல்லா உருவங்களிலும் இல்லையா? டில்லிக்கு அந்த இளைஞரை அழைத்துச் செல்லும் தன் ஒரு சிஷ்யரிடம் தகவல் கூறி, சேலத்திலுள்ள ரயிலில் ஏற்றி, வழியில் நேரும் செலவுகளுக்குப் பணம் கொடுத்து உதவ ஏற்பாடு செய்தார் . . . . . .



மறுநாள், திங்களன்று ஸ்ரீ ரமணாச்ரமத்தைச் சேர்ந்த வேத பாடசாலையின் சிறு மாணவர்கள் தபோவனத்திற்கு வந்து ஸ்ரீ குருநாதரை வணங்க இருந்தனர். அவர்கள் வருகையை உத்தேசித்து ஒரு பந்தல் போடப்பட்டிருந்தது. குருநாதர் உட்காரும் மேடை புலித்தோலால் மூடப்பட்டிருந்தது. விரிப்புகளும் பாய்களும் எதிரே பக்தர்கள் உட்காருவதற்காக விரிக்கப்பட்டிருந்தன.

அவர்களை அழைத்து வரும் கார் சற்று தாமதித்து வந்தது. ஸ்வாமியும் வன்யாவும் பந்தலில் குறுக்கேயும் நெடுக்கேயும் பேசிக்கொண்டே நடந்த வண்ணம் இருந்தனர். பந்தலின் எதிர்புறம் இரண்டு மூன்று பக்தர்கள் ஸ்வாமியை அவ்வப்போது ரகச்யமாக பார்த்துக்கொண்டு, ஏதோ படித்துக்கொண்டிருந்தனர். ஞானனந்தர் அதைக் கண்டு "அது என்ன?" என விசாரித்தார். முதலில் அவர்கள் ஏதோ சாக்கு சொல்லி காகிதத்தை மறைக்க முயன்றனர். ஞானனந்தர் வற்புறுத்திக் கேட்கவே அவர்கள் தங்கள் கைகளில் இருந்ததைக் காண்பிக்க வேண்டியிருந்தது. அவர்களில் ஒருவரால் குருநாதர் மீது பாடப்பட்ட பாடல் அது. 'அதை படி' என்று ஸ்வாமி சாதாரணமாக சொன்னர். இது வன்யாவிற்கு தவற விடக்கூடாத ஒரு வாய்ப்பு. படிப்பவர்களையும் ஞானனந்தரின் முகத்தில் ஏற்படும் அறிகுறிகளையும், மாறுதல்களையும் கவனிக்கக்கூடிய வகையில் ஒரு இடத்தில் அமர்ந்துகொண்டார். வழக்கம் போல் இருக்கும் கவனத்துடன் ஸ்வாமி அதைக் கேட்டார்; ஒரு சிறு அளவுக்குக் கூட அவர் முகத்தில் திருப்தியின் குறியோ அதிருப்தியின் குறியோ காணப்படவில்லை. இரண்டு மூன்று தடவைகள் குறுக்கீடு செய்து, நன்ருகப் புரிந்து

கொள்வதற்காகத் திரும்பப் படிக்கச் சொன்னார். அதன் அமைப்பில் ஒரு மாற்றத்தையும் ஒன்றிரண்டு இலக்கணப் பிழைகளையும் - இவைகள் யாவும், தனக்குத் தெரியாத யாரோ ஒருவரைப்பற்றி எனக்கருதும் வகையில் - உதாசீனமான நோக்குடன் திருத்தச் சொன்னார்.

இறுதியில் சிறுவர்கள் வந்தனர். அந்த மேடையை விட்டுவிட்டு தன்னருகில் இருந்த ஒரு நாற்காலியில் ஸ்ரீ ஞானனந்தர் அமர்ந்தார். பிறகு அவர்களை ஒவ்வொருவராக அன்புடனும் கனிவுடனும் கண்டார். ஒவ்வொரு வராக அவரருகே சென்று நமஸ்கரித்தனர். பிறகு எழுந்து உள்ளங்கைகளினால் காதுகளை மூடிக்கொண்டு, தங்கள் கோத்ரங்களையும், பெயர்களையும் கூறினர்.

இந்த வந்தனம் ஆன பிறகு எல்லோரும் கீழே உட்கார்ந்தனர். சிறுவர்கள் வேதபாராயணமும் அதன் பிறகு தக்ஷிணாமூர்த்தியின் மீது சங்கரரால் இயற்றப்பட்ட ஸ்தோத்ரத்தையும் ஆரம்பித்தனர். ஸூக்தங்கள் பல உச்சரித்து, முடிவில் ஸ்ரீ ரமண மஹரிஷி இயற்றிய தமிழ், சம்ஸ்கிருத பாடல்களுடன் முடித்தனர். அவர்கள் முடித்தவுடன் அவர்களின் உபாத்யாயரை "அவர்கள் பாடும் பாடல்களின் கருத்தை தெரிந்து கொண்டிருக்கிறார்களா ?' என குருநாதர் கேட்டார். பதட்டத்துடன் "இல்லை, இல்லை" என அவர் பதிலுரைத்தார். பாடங்களின் கருத்துகளை புரிந்துகொள்வது என்பது பொதுவாக அவைகளை மனப்பாடம் செய்வதற்கு தடங்கலாக உள்ளதாகக் கருதப்படுகிறது என்பது உண்மை. வேத அத்யயனம் செய்யும் மாணவன் முதலில் ஏகாக்ர சித்தத்துடன் சம்பிரதாய முறையில் கூறுவது போன்று சரியான உச்சரிப்பு, ஸ்வரம், த்வனி, இவைகளுடன் தன் மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும். அர்த்தத்தை தெரிந்துகொள்வது என்பது பின்புதான் செய்யமுடியும் என அந்த வேத உபாத்யாயரும் மரியாதையுடன் தெரிவித்தார்.

"வேதங்களைப் பொறுத்தவரையில் கூறியது சரிதான்" என மொழிந்தார் ஞானனந்தர். "அவைகள் எல்லாம் நியதியாகவே இருக்கின்றன. மனிதனால் செய்யப்பட்டவை அன்று அவை; தானாகவே எப்போதும் இருக்கின்றன; அவைகளில் மாற்றம் செய்ய ஒருவருக்கும் உரிமை இல்லை; முதலில் அவைகளை மனப்பாடம் செய்ய வேண்டும்; பிறகு அவைகளின் அர்த்தங்களை அறியவேண்டும். இருப்பினும் கிணற்றில் நாம் தண்ணீர் ஊற்றுகிறோமா ? கிணற்றின் அடியிலிருந்து தண்ணீர் ஊற்றாகப் பெருக வேண்டும். கடவுள் மீது நாம் பாடும் பாடல்கள் அவ்வாறிருக்கவேண்டும். நாம் சொல்வதின் கருத்தைத் தெரிந்துகொண்டு சொல்வோமானால் உள்ளத்தி லிருந்து பாடல் தானாகவே வரும். இல்லாவிடில் கிணற்றில் ஒரு வாளியால் தண்ணீர் வார்த்து, மற்றொரு வாளியால் இறைப்பது போன்று இருக்கும்.:..."

• • •

வன்யாவின் தபோவன வாசத்தில் இன்னும் இரண்டு நாட்கள்தான் இருக்கின்றன. ஞானனந்தருடன் தான் செய்த இறுதி உரையாடல் ஒன்றில் தான் அடிக்கடி கூறியபடி "தூங்காமல் தூங்கி" என்று தமிழில் விளக்கப் படும் நிலையை அனுபவிப்பதாகக் கூறினர். இதை ஆங்கிலத்தில் விழித்துக் கொண்டே தூங்குதல் - waking sleep - எனக் கூறலாம். தேகத்தைப் பொறுத்தவரை அது தூக்கம் போன்ற நிலை; தூக்கத்தில் உள்ளதைப்போன்று ப்ராணணின் சலனம் ஒடுங்குகிறது. ஆனல் ஒருவனின் அறியும் சக்தி தெளிவாக இருக்கிறது; சாக்ஷி உணர்வு இருக்கிறது. குறிப்பிட்ட விஷயத்தின் அறிவு ஏற்படுவதில்லை. எண்ணங்களும் உருவங்களும் தோன்றினுலும், கனவில் போல், வந்து போய்விடுகின்றன. ஸ்வரூப உணர்வை பாதிப்பதில்லை.

"இது சகஜமான அனுபவம்தான்" என குருநாதர் விடையளித்தார். "ஆனல் அச்சமயத்தில் 'நான்' எனும் உணர்ச்சியோடு இருக்கிறீர்கள். இது தான் முக்கியமாகப் போகவேண்டும். ஆழ்ந்து, ஆழ்ந்து சென்று வெறும் உணர்வு மயமாக - 'நான்' எனும் ஞாபகமும் அற்று - இருக்க வேண்டும். அப்போது ஜோதி தெரியும். ஆத்ம தர்சனம் ஏற்படும். 'நான்' எனும் உணர்ச்சி வெறும் நிழல் போல் இருக்கும். நிழல் என்பது என்ன? அதற்கு இருப்பு இருக்கிறதா? அதைப் போன்றுதான் சிருஷ்டியும் உலகமும் ஆகும். ஆத்ம த்ருஷ்டியில் இவை யாவும் நிழலே. ஆத்மாதான் தேகத்தின் செயல் களுக்கும், பார்வைக்கும், புத்தி சிந்திப்பதற்கும், அறிவதற்கும் காரணம். நீங்கள் ஆத்மஸ்வரூபம். அதை ஒன்றும் அசைக்க முடியாது. ஆத்ம ஸ்வரூபந்தான் உம்முடைய அறிவின் உதயஸ்தானமாக இருக்க வேண்டும். மனமல்ல. நீங்கள் சாப்பிடுவது, அருந்துவது, நடப்பது, கேட்பது, படிப்பது, எழுதுவது - இவை யாவும் ஆத்ம ப்ரகாசத்தால் நடைபெறவேண்டும். ஆத்மா வின் ஸ்புரணமாக எதுவும் திகழ வேண்டும்."

"ஆத்மாவைத் தவிர வேறெதுவும் நிஜமன்று; நிஜமாகத் தோன்றுவ தெல்லாம், ஆத்மாவின் நிஜத்தன்மையினல் அவ்வாறு தோன்றுகின்றன. பார்க்கப்படுவதெல்லாம் அதன் திருஷ்டியில் நடைபெறுகின்றன. கேட்கப் படுவதெல்லாம் ப்ரணவத்தில் - ஓம் என்னும் சப்தத்தில் - அடங்கியுள்ளது. இது ஆத்மாவைக் குறிக்கும் சப்தமாகும். ஆத்மாவை அறியாதிருப்பது போன்ற வியாதியைக் காட்டிலும் கொடிய வியாதி கிடையாது. உடலுக்கு வரும் கொடிய நோயைக் காட்டிலும் ஆத்மாவை அறியாதிருப்பது என்பது உணர்வுக்கு நேரும் அபாயமான வியாதியாகும். ஆனல் இந்த வியாதிக்கு சிகித்சை இருக்கிறது. எல்லோருக்கும் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது. அது ஒவ்வொருவருக்கும் உடையது. அதுதான் ஞானம், சத்வித்யை, ஆத்ம ஞானம், பிரஹ்ம தர்சனம். இந்த வியாதியை நீக்குவது த்யானம் - அமைதி யுடன் உள்நாட்டம் பெறுதல்.

"இந்த வியாதிக்கு சிகித்சை சுலபமாக இருக்கிறது என்ருல் சிலரே ஏன் அதைப் பயன்படுத்துகின்றனர் ?" என வன்யா கேட்டார்.

"குழந்தைகளை கவனியுங்கள்" என ஞானனந்தர் பதிலுரைத்தார். "அவர்கள் ஜுரமாக இருக்கும்போது அவர்களுடைய தாயார்கள் கஷாயம் ஒன்று தயாரித்து அவைகளுக்கு குடிக்கத் தருகின்றனர். ச்ரமம் என்னவென்ருல் குழந்தைகள் அதை விரும்புவதில்லை. கைகளை ஆட்டி, கால்களை உதைத்து, இப்படியும் அப்படியும் சேஷ்டை செய்து, வாய்களை இறுக மூடிக்கொள்கின்றனர். தாயார் சிறிதளவு ச்ரமப்பட்டு வாய்க்குள் வார்த்தால் அவைகள் உடனே துப்பிவிடுகின்றன. ஞானத்தை மறுக்கும் அறியாத மனிதர்களும் இவ்வாறுதான் இருக்கின்றனர்."

"ஆத்மஞானமும், உணர்வும் எந்த ஒரு உள்ளத்திலும், அவைகளை விரும்பாத நிலையில், நுழையாது. அவைகளைத் தொடர்ந்து ஏகாக்ர சித்தத்துடன் நாடவேண்டும்."

"ஆற்றின் எதிர்கரையில் ஒரு ஸ்வாமி இருக்கிருர் என்று வைத்துக் கொள்வோம். அவரைப்பற்றி அதிசயமான கதைகள் கேட்கிறீர்கள். எப்படியாவது அவர் தர்சனம் செய்யவேண்டும் என கிளம்புகிறீர்கள். நீங்கள் புறப்பட்டு ஆறுக்கு வருகிறீர்கள். அதைக் கடக்க முடியாது. அதில் நீந்தி செல்வதும் அபாயம். கரையருகே ஒரு ஓடக்காரனை காண்கிறீர்கள். உங்களை அக்கரைக்கு அழைத்துச் செல்லும்படி அவனிடம் சொல்கிறீர்கள்.

"நல்லது, அப்படியே. ஆனுல் உங்கள் மூட்டைகளை எறிந்துவிடுங்கள். ஆட்களைத்தான் நான் ஏற்றிச் செல்வேன். அவர்களுடைய சாமான்களை அல்ல" என அவன் கூறுகிருன்.

"அப்படியானுல் நான் சாமான்களை விடுவதற்கில்லை. அவைகளை நான் விட்டுவிட்டு எப்படி இருக்கமுடியும் ? பசிக்கு உணவும், படுக்கையும், ஸ்வாமிக்கு கொடுப்பதற்காக பழமும், புஷ்பமும் வைத்திருக்கிறேன். பாராயண புத்தகங்கள் தினமும் படிப்பதற்காக வைத்திருக்கிறேன். என்னுடைய மூட்டை ஒன்றும் பெரியதல்ல. இரக்கமாக இரு, அப்பா! என்னை இருக்கிற பிரகாரம் வைத்திருந்த சாமானுடன் அக்கரைக்கு அழைத்துச் செல். உன்னுடைய உதவிக்கு காசு கொடுத்துவிடுகிறேன்."

"நீங்கள் எப்படி வேண்டுமானுலும் செய்யுங்கள்" என்று பதிலளிக்கிருன் ஓடக்காரன் "வருவதாயிருந்தால் வாருங்கள், இல்லாவிடில் போய்வாருங்கள். மூட்டை இல்லாவிட்டால் அக்கரைக்கு அழைத்துச் செல்கிறேன். மூட்டை வேண்டுமானுல் இங்கேயே இருந்துவிடுங்கள். இந்த இரண்டில் எதை விரும்புகிறீர்கள் - ஸ்வாமி தர்சனமா ? மூட்டையா ?"

"உடனே முட்டையை விட்டுவிட்டு அக்கரைக்கு செல்கிறீர்கள். ஆத்மதர்சனத்தை அடைகிறீர்கள்.

பாழான முட்டையைத் தலையிலே சுமந்து நீ
காணாத ஊருக்குப் போகுவையோ மடநெஞ்சே!
அமலன் குருநாதன் அன்புடன் ஏற்றிடும்
உள்ளத்தைத் தாராமல் ஊன் சுமையைத் தருகுவையோ!
தனியாய் வந்த நீ தனியே ஏகுமுன்,
தனித்தே விளங்கும் திறனறிவாய், மடநெஞ்சே
தன்னைத் துறந்தவனே தன்னைக் கண்டிடுவான்,
எல்லாம் துறந்தவனே எல்லாம் அடைந்திடுவான்,
பொருளைப் போற்றியே என்றும் நீ வாழ்வாயாகில்
பொருளோடு தானே போகவேண்டும், மடநெஞ்சே!

பிறகு ஞானானந்தர் தனக்குப் பிடித்த பாடலுடன் அறிவுரையை முடித்தார்.

எங்கு ஒன்றும் இல்லையோ - ஞானப்பொண்ணு
அது எல்லாமாயிருக்குதே - ஞானப்பொண்ணு
அதன் ரகச்யத்தை உணர்ந்து நாடு - ஞானப்பொண்ணு
அந்த நாட்டத்திலே நானழியும் - ஞானப்பொண்ணு
அப்போதே அதுவாவாய் - ஞானப்பொண்ணு
அறுதியாய் உரைத்திடுவேன் - ஞானப்பொண்ணு

---